உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# சிவஞான போதம்.

## மூலமும் உரையும்

WITH INTRODUCTION AND TRANSLATION
BY
**Sriman J. M. Nallaswami Pillai** Avl, B.A., B.L.,

இவை
திருவாரூரைச்சேர்ந்த புலிவலம் மிராஸ்தார் -
அ. சுப்பய்யா பிள்ளை அவர்கள் '
கேட்டுக்கொண்டபடி பென்ஷன் ஜயில் ரயிட்டர்
S. A. **முத்துக்காமாக்ஷி பிள்ளை**
அவர்கள் குமாரர் |
M. B. **இராஜா-ஹரிஹரபுத்திர பிள்ளை** D. A யால்

தொகுத்துப் பரிசோதிக்கப்பெற்று
தென்னூர் வேளாளர் வீதி வை. மாணிக்கம்பிள்ளையவர்கள்
உறையூர் மீராசுதார் தி. ம. சொக்கலிங்க முதலியாரவர்கள்
மேற்படி இரும்புக்கடை ம.கு.பெ. உலகநாத செட்டியாரவர்கள்
நல்லாதரவால்
.

திரிசிரபுரம்
புஸ்தகக்கடை தி. சபாபதி பிள்ளையவர்களது
திருச்சி ஸ்ரீமட்டுவார்குழலாம்பாள் அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பெற்றன. .

Registered) | 1906 [விலை அணா 8

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# நன்றி கூறல்.

**நன்றுடையானைத் தீயதில்லானை நரைவெள்ளே**
**றொன்றுடையானை யுமையொருபாக முடையானைச்**
**சென்றடையாத திருவுடையானைச் சிராப்பள்ளிக்**
**குன்றுடையானைக் கூறவென்னுள்ளங் குளிரும்மே.**

**தேனயம் பாடுஞ் சிராப்பள்ளியானைத் திரைசூழ்ந்த**
**கானல் சங்கேறுங் கழுமலவூரிற் கவுணியன்**
**ஞானசம்பந்த னலமிகுபாட லிவைவல்லார்**
**வானசம்பந்தத் தவரொடுமன்னி வாழ்வாரே.**

**சிறியவாடியிற் பெரியமால் வரைப்பொருள் செறிந்தாங்**
**கறிவு நூல்களின் முடிபெலா மகத்தடக் கியதோர்**
**நெறினீடிய நிகழ்சிவ ஞானபோ தத்தைக்**
**குறியதீந்தமி ழாலுரைகுரவனைப் பணிவாம்.**

அநாதிமல முத்தனாகிய சிவபெருமான் அநாதிமல பெத்தர்களாகிய ஆன்மாக்கள் வழிபட்டு உய்யும் பொருட்டுத் திருவாய் மலர்ந்தருளியவை வேதம் சிவாகமம் எனவிரண்டாம். வேதங்களின் ஞானகாண்டமாகிய உபநிடதங்களின் பொருள்களை வியாசமுனிவர் வேதாந்த சூத்திரமென்னும் 555 சூத்திரங்களாகச் செய்தருளினர். அவைகளுக்கு நீலகண்டசிவாசாரியர் "**சுத்தாத்துவித**" பாஷ்யமென வழங்கும் ஓர் பாஷ்யம் செய்தருளினர். அதன் பின்பு சங்கராசாரியர், இராமாநுஜாசாரியர் மத்துவாசாரியர் மூவரும் முறையே, ஸ்மார்த்த வைணவ, மாத்துவ சமயபரமாகத்தத்தமக்குத் தோன்றியவாறே பொருள் செய்து அவ்வவ் மதங்களுக்குப் பாஷ்யகர்த்தாக்களாயினர். இவைகள் எல்லாம் வடமொழியே, இனிச் செந்தமிழில், வேதத்தின் ஞான காண்டப் பொருளைச் சிவாகமத்துக்கு மாறுபடா வண்ணம் சமயகுரவர் தேவாரம் திருவாசகம் என்னும் தோத்திர வாயிலாக விளங்க உரைத்தருளினர். (தேவர் குரளுந் திருநான்மறை முடிவு, மூவர் தமிழு முனிமொழியுங் - கோவை, திருவாசகமுந் திருமூலர் சொல்லு மொரு வாசகமென்றுணர்). சிவாகமத்தின் ஞானகாண்டப்பொருளைச் சந்தான குரவர், (உந்திகளிறுவுயர் போதஞ்சித்தியார், பிந்திருபாவுண்மைப்பிரகாசம் வந்தவருட், பண்பு வினாபோற்றி கொடிபாசமிலா நெஞ்சுவிடு, வுண்மை வெறிசங்கற்பமுற்று) என்னும் 14 சாத்திரவாயிலாக

விளங்கவுரைத் தருளினார்கள். அவற்றுள் சிவஞான போதம் முதனூல் எனப்பெறும். இது செந்தமிழில் உள்ளது போலவே வடமொழியிலு முண்டு. முழுமுதற்கடவுளாகிய தக்ஷிணாமூர்த்தி ஆன்மாக்களுக்கு ஞானோதயம் உண்டாகும் பொருட்டுத் தமது திருக்கரத்தில் தாங்கியருப்பது இச்சிவஞானபோதமே என்று சிற்பிசாஸ்திரமும் கூறுகின்றது. அது "நின்ற சிவமொன்றதனைத் தேர்தல் ஞான நிகழ்போதர் தேர்ந்ததனைத் தெளிதலாம்" எனப்பொருள் பெறும்.

நீலகண்ட பாஷ்யத்திற்குத் திராவிட மொழி பெயர்ப்பு ஸ்ரீலஸ்ரீ விருதை சிவஞானயோகிகளாலும், பிர்ம்மஸ்ரீ மஹாதேவ சாஸ்திரி அவர்களின் ஆங்கிலேய மொழி பெயர்ப்பு டாக்டர் போப்பையராலும் சீக்கிரம் வெளிவரும் என்று பத்திரிகைகள் கூறுகின்றன.

அத்துவிதத்தின் பொருளைச் சிவபெருமான் அன்று கல்லாலின் கீழிருந்து சின்முத்திரையைக்காட்டி உபதேசித்தும் சனகர் முதலிய நால்வர் விளங்கிக்கொள்ளாமல், சந்தானாச்சாரியர் நால்வர்களாய் அவதரித்துத் தெரிந்து வெளியிட்டனர் என்று சில புராணங் கூறுகின்றன.

**சைவத்தின் மேற் சமயம் வேறிலை யதிற் சார்சிவமாந்**
**தெய்வத்தின் மேற்றெய்வ மில்லெனு நான்மறைச் செம்பொருள்**
**வாய்மை வைத்த சீர்த்திருத் தேவாரமுந் திருவாசகமும்**
**உய்வைத் தரச்செய்த நால்வர் பொற்றாளெம் முயிர்த்துணையே.**

**சைவசமயமே சமயஞ் சமயாதீதப் பழம்பொருளைக்**
**கைவந்திடவே மன்றுள்வெளி காட்டுமிந் தக் கருத்தைவிட்டுப்**
**பொய் வந்துழலுஞ் சமயநெறி புகுதவேண்டா முத்திதருந்**
**தெய்வசபையைக் காண்பதற்குச் சேரவாருஞ் செகத்தீரே.**

**ஓரும்வேதாந்தமென் றுச்சியிற்பழுத்த**
**வாராவின்ப வருங்கனிபிழிந்த**
**சாரங்கொண்ட சைவசித்தாந்தத்**
**தேனமுதருந்தினர் சிலரே.**

என்னும் ஆன்றோர் மொழிக்கேற்ற உண்மையினை, ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரநாயகர் அவர்களின் நன்மாணாக்கர்களால் நடைபெற்று வரும் சித்தாந்த தீபிகை, சித்தாந்த ரத்னாகரம் என்னும் பத்திரிகை வாயிலாகவும், டாக்டர் ஜீ.யு. போப்பையர் அவர்களும், டிஸ்டிரிக்ட் முன்சீப் ஜே. யம். நல்லசாமிபிள்ளையவர்களும் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்த திருவாசகம், சிவஞான போதம் இவற்றின் வாயிலாகவும் ஒருவாறு தெரிந்து, மெய்கண்ட சாத்திரத்தினை ஓதத் துணிந்து திரிசிரபுரம் குஞ்சிதபாதம் புத்தகசாலையதிபர்

இராமலிங்கம் பிள்ளையவர்களின் முயற்சியால் சித்தாந்த அனுபூதிச் செல்வராகிய சிற்றம்பல நாடிகளின் பரம்பரையைச் சார்ந்த சிதம்பரம் உலகமூர்த்தி தேசிகர் மடத்து ஸ்ரீலஸ்ரீ முத்துக்கற்பகக்குருக்களையா அவர்களிடத்துச் சிவதீக்ஷைபெற்று, அப்பொழுது இவிடம் விஜயம் செய்திருந்த விஜயத் துவஜப் பத்திராதிபர் வித்வான் சி. தாமோதரம்பிள்ளையவர்களிடத்தில் சாத்திரப்பயிர்ச்சி செய்துகொண்டு வருஞ் சமயத்தில் அவர்கள் லௌகிக விஷயமாய் ஜெனன தேசம்போக நேரிட்டதில், எஞ்சி நின்றது,

**வேதம் பசுவதன்பால் மெய்யா கமநால்வ**
**ரோதந் தமிழதனி னுள்ளுறுநெய் – போதமிகு**
**நெய்யி னுறுசுவையா நீள்வெண்ணெய் மெய்கண்டான்**
**செய்த தமிழ் நூலின் றிறம்**

என்னும் சிறப்புடைய சிவஞானபோதம் ஒன்றேயாம். அது 624 எழுத்துக்களாலாய 216 சொற்களையுடைய 41 அடிகளுள்ள 12 சூத்திரங்களும் வார்த்திகமென்னும் பொழிப்புரையும் உதாரணங்களாக 82 திருவெண்பாக்களும் அமையப்பெற்றது.

இத்தகைய ஞானசாஸ்திரத்தினுக்கு கோ. ஷண்முக சுந்தர முதலியார் அவர்கள் பதிப்பித்த பாண்டிப்பெருமாள் விருத்தியுரையொன்றும், காஞ்சி-நாகலிங்க முதலியார் அவர்கள், ஆறுமுக நாவலர் அவர்கள் பதிப்பித்த சிவஞான சுவாமிகளின் சிற்றுரை யொன்றும், சிவ தினங்களுக்கு முன் வெளிவந்த ஷை சுவாமியவர்களியற்றிய பேருரையாகிய சிவஞான பாஷ்யமும் புத்தகரூபமாய். வழங்கிவருகின்றன. அதிநுட்ப புத்தியும் அதிதீவிர பக்குவமும் அமைந்துடையார்க்கு இவற்றின் பொருள் தானே விளங்கும். உரைகள் விஸ்தாரமாய் பரிபாஷாகலப் பாயிருத்தலினாலே இலக்கிய இலக்கணம் நன்கு கற்ற வித்துவான்களிற் சிலரேயன்றி மற்றையர் பலரும் இச்சாத்திரத்தில் பழகாது வாணாளை வீணாளாகக்கழித்து வருகின்றனர். அதையெண்ணிச் சிவஞானபோதயந்ரசாலையதிபர் ஷை முதலியார் அவர்கள் “சிவஞானபோதபடநவிதி" என்னும் தலைப்பின் கீழ்க் கூறியபடி தில்லையம்பதி சென்று நிருவாண தீக்ஷை பெற்று நாகை வெளிப்பாளையம் சைவசித்தாந்த சபைக்குச் சென்றதில் மிக எளிய நடையில் சிவாகமத் தேர்ச்சியுள்ள சைவர் ஒருவரால் இயற்றப் பெற்ற உரையடங்கிய சுவடி யொன்று திருவருள் காட்டியது. அதனைக் கைக்கொண்டு டிஸ்டிரிக்ட்முன் சீபவர்களின் ஆங்கில மொழி பெயர்ப்புடன் ஒத்திட்டுப் பார்த்ததில் பொருள் நன்றாய் விளங்கியது. ஆங்கிலத்தினும் திராவிடத்தினும் பயிர்ச்சியற்றவனாயினும் கலந்துண்ணும் காகத்தின் கொள்கைபோல, இஃது யாவருக்கும் பயன்படுமாறு வெளியிடத் துணிந்து ஆங்கில மொழி பெயர்ப்புக்காக ஆசிரியரின் அனுமதியும் பெற்றேன். ஆதீனத்தார் சிவஞானபாஷிபம் வெளியிடுதல் ஆசாரப்பிழையென்று புதை

பொருளாய் வைத்திருந்ததை வெளிவரக்கண்ட வைதிக சைவர்கள் இந்தச்சுவடியை, விரிந்த உரைகளைக் கற்கத் துணைக் கருவியாகக் கைக் கொண்டு ஆங்கிலம் கலந்து வெளியிட்டதற்கு மன்னிக்கும் படியாய் மிகுந்த தாழ்மையுடன் கேட்டுக் கொள்ளுகிறேன்.

இதனை வெளியிடுவதற்குக் காரணபூதராயிருந்த நாகை வெளிப்பாளையம் சைவசிந்தாந்த சபை ஸ்ரீமாந் மதுரையா பிள்ளையவர்களுக்கும் ஸ்ரீமாந் டிஸ்டிரிக்ட் முன்சீப் நல்லசாமி பிள்ளையவர்களுக்கும் வாகவேரி உபாத்தியாயர் சோமசுந்தரம் பிள்ளை யவர்களுக்கும் ஸ்ரீமலைக்கோவில் சைவசித்தாந்த சபை யாரவர்களுக்கும் மகாவித்வான் மீனாக்ஷி சுந்தரம் பிள்ளையவர்கள் மாணாக்கருள் ஒருவராகிய அச்சுயந்திரத் தலைவர் தி. சபாபதி பிள்ளையவர்களுக்கும் புரூப் பார்த்ததில் உதவி செய்த தி. ச. வேலுசாமி பிள்ளையவர்களுக்கும், மனப்பூர்வமாய் வந்தனம் செலுத்துகின்றேன்.

**வாழ்கவந்தணர் வானவரானினம்**
**வீழ்க தண்புனல் வேந்தனுமோங்குக**
**ஆழ்க தீயதெல் லாமரனாமமே**
**சூழ்கவையக முந்துயர்தீர்கவே.**

ஸ்ரீமெய்கண்ட தேவர் திருவடிவாழ்க.

திரிசிரபுரம்
பராபவ-ஒு
ஐப்பசி-மீ
சுவாதி நட்சத்திரம்

இங்ஙனம்
தாயான செல்வத்துக்குத்தொண்டு பூண்டொழுகும்
இராஜா - ஹரிஹாபுத்திர பிள்ளை.
திருச்சிற்றம்பலம்.

குறிப்பு:-- சமய விசேட சிவதீக்ஷை பெற்றவர்களில் ஆங்கிலம் தெரிந்தவர்களும் நிர்வாண தீக்ஷைபெற்றவர்களும் திரிசிரபுரம் தெப்பக்குளம் போஸ்ட் ஸ்ரீமலைக்கோவில் தெற்கு உள்வீதியில் இராஜா ஹரிஹரபுத்திர பிள்ளை என்னும் விலாசத்திற்கு, தத்தம் தீக்ஷாகுருவினிடத்திலிருந்து நற் சாக்ஷிப் பத்திரம்வாங்கி அனுப்பினால் அவர்களுக்கு இச்சிவஞானபோதம் பிரதி ஒன்று இலவசமாக அளிக்கப்பெறும். தபாற் செலவு முதலியன வாங்குவோர் பாலதே.

திருச்சிற்றம்பலம்.

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

திருவெண்ணெய் நல்லூரிலெழுந்தருளியிருக்கும் *பொல்லாவிநாயகர் திருவாய்மலர்ந்தருளிய சிவஞானபோதச்

## x சூர்ணிக்கொத்து

சூத்திரம்

I. சசம் பிறப்பிருப் பிறப்பாகிய முத்தொழிலையுடையது. (1)
அது அனலே உடையது. (2)
மற்றிருவரும் முத்தொழிற் படுவர்கள். (3)
II. அரன் உயிர்களின் இரண்டற நிற்பன். (1)
உயிர்களுக்குக் கன்மபலனை அரனே கொடுப்பன். (2)
உயிர்கள் அச்சு மாறியே பிறக்கும், (3)
அரன் சருவ வியாபகன். (4)
III. இல்லை என்கிற அறிவுடனே சொல்லுகையினாலே அறிவு உயிர் உண்டு. (1)
எனது உடல் என்று பொருட்பிறிதின் கிழமையாகச் சொல்லு கையினாலே உடற்கு வேறாய் உயிருண்டு, (2)
ஐந்தையும் ஒருவனே அறிதலின், ஒவ்வொன்றை மாத்திரம் அறிகிற ஐந்திற்கு வேறாய் உயிர் உண்டு, (3)
கனவுடலை விட்டு நனவுடலிலே வருகையினாலே, அக்கனவுடர்கு வேறாய் உயிர் உண்டு. (4)
நித்திரையிலும் பிராணவாயுவு தொழில் பண்ணவுஞ் சரீரத்துக்குப் புசிப்புத் தொழிலும் இல்லாதபடியினாலே, பிராணவாயுவுக்கு வேறாய் உயிர் உண்டு. (5)
மறந்து மறந்து நினைக்கிறபடியினாலே மறவாமல் இருக்கிற அர னுக்கு வேறாய் உயிர் உண்டு. (6)
எல்லாத் தத்துவங்களுக்கும் வேறு வேறு பெயர் இருக்கையினாலே அந்தந்தத் தத்துவங்களுக்கு வேறாய் உயிர் உண்டு. (7)
IV. அந்தக்கரணங்களுக்கு ¶உயிர் உட்கூடினாலன்றித் தொழில் இல்லாதபடியினாலே, அந்தக்கரணங்களுக்கு வேறாய் உயிர் உண்டு. (1)
மலமறைப்பால் உயிருக்கு அறிவு இல்லை. (2)
உயிர் மூன்றுவத்தைப்படும். (3)

V. உயிராலே தத்துவங்களெல்லாந் தொழில் செய்யும். (1)
அரனாலே உயிர்களெல்லாம் அறியும். (2)
VI. உயிரறிவினாலே அறியப்பட்ட வெல்லாம் அழியும். (1)
அப்பிரமேயமாக அறியப்பட்டவனே அரன். (2)
VII. அரன் பாசத்தை அனுபவியான். (1)
பாசம் அரனை அனுபவியாது. (2)
உயிர் ‡அவ்விரண்டனையும், அனுபவிக்கும். (3)
VIII. உயிருக்கு நல்லறிவு தவத்தினாலேயேவரும். (1)
உயிருக்குச் சற்குருவாய் வருவது அரனே (2)
உயிர் பஞ்சேந்திரியங்களைப் பற்றகையினாலே தன்னையும்
அறியமாட்டாது. (3)
உயிர் பஞ்சேந்திரியங்களிலே பற்றற்றால் தன்னையும் அறியும் (4)
IX. உயிர் அரன் ஞானத்தினாலேயே அரனைக் காணும் (1)
உயிர் பாசத்திலே பற்றற்றால்" அரன் வெளிப்படுவன். (2)
பஞ்சாக்ஷர செபம் பண்ணினால் வாசனாமலம் போம். (3)
X. அரனுடன் ஒன்றாகி நில். (1)
உன்றொழிலெல்லாம் அரன் பணி என்றே கொள். (2)
XI. ஞானிக்கு வருகிற விடயங்களை அரனே அனுபவிப்பன் (1)
அரனை மறவாமல் அன்பு இருந்தால் அவனிடத்திலே
ஐக்கமாய்ப் போவன். (2)
XII. மும்மலங்களையும் களைக. (1)
சிவஞானிகளுடனே கூடுக. (2)
சிவஞானிகளையுஞ் சிவலிங்கத்தையுஞ் சிவனெனவே தேறி
வழிபடுக. (3)
வழிபடாமையை ஒழிக. (4)

* பொள்ளார்--பொல்லாரென மரீஇயது, பொள்ளல்-துவாரம். பொல்லா விநாயகர் = துவாரம் செய்யாத விநாயகர் அல்லது ஆயதத்தினால் துளை படாத பிள்ளையார்--ஒருவர் ஆக்காமல் தானே யுண்டான சுவயம்புமூர்த்தி.

x உரைச்செய்யுளால் செய்யப்பெறுவது -- சூர்ணிகை,

¶ உயிருடனே கூடினாலன்றி என்றும் பாடம்,

‡ அவ்வரனை அடையும் அனுபவிக்கும் என்றும் பாடம்.

உ
திருச்சிற்றம்பலம்

தமிழ்நூற்
சிவஞான போதத்திற்கு அதிகரணமென்னும் கண்ணழிவும்
வார்த்திகம் என்னும் பொழிப்புரையும்.

---

## 1 வது சூத்திரம்.

**அவன் அவள் அதுவெனும் அவை மூவினைமையின்**
**தோற்றிய திதியே ஒடுங்கி மலத்து உளதாம்**
**அந்தம் ஆதி என்மனார் புலவர்.**

1. அவன் அவள் அதுவெனும் அவை மூவினைமையின் = ஈண்டுத் தோற்றமும் ஈறும் உள்ள தன்பாலே கிடத்தலின் - உளதாய் ஒருவனொருத்தி யொன்றென்று சுட்டப்பட்ட பிரபஞ்ச முற்பத்தி திதி காசமுடைத்தென்றது.

2. தோற்றிய திதியே ஒடுங்கி மலத்து உளதாம் = இனி இல்லதற்குத் தோற்றமின்மையின் உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய் வினையின்மையின் -- ஒடுங்கினசங்காரத்தின் வழியல்லது உற்பத்தியில்லை யென்றது.

3. அந்தம் ஆதி என்மனார் புலவர் = இனிச்சுட்டுணர்வாகிய பிரபஞ்சம் சுட்டுணர்வின்றி நின்ற சங்காரத்தின் வழியல்லது சுதந்தரமின்றி நிற்றலான் - சங்காரமே முதலென்றது.

## 2 வது சூத்திரம்.

**அவையே தானே ஆய் இரு வினையிற்**
**போக்கு வரவு புரிய ஆணையின்**
**நீக்கம் இன்றி நிற்கும் அன்றே.**

1. அவையே தானே ஆய் = ஈண்டு அத்துவிதமென்ற சொல்லானே யேகமென்னின் எகமென்று சுட்டுவதுண்மையின், அத்துவிதமென்ற சொல்லே யந்நிய நாத்தியை யுணர்த்துமாயிட்டு இவ்வான்மாக்கள் பலவுமுதல்வன் றானேயாய் நிற்கு மென்றது.

2. ஆணையின் இருவினையின் = இனி இவ்வான்மாக்களுக் கிருவீனை முதல் வனாணையின் வருமென்றது - ஒரு நகரியைக் காப்பான்பாடி காவலிட்டாங்கு அவை யவனதாக்கினையாகலான்.

3. போக்கு வரவு புரிய = இனி இவ்வான்மாக் கண்மாறிப் பிறந்து வருமென்றது - தோற்றமுமீறு முள்ள தற்கல்லது உளதாத லின்மையான்.

4. நீக்கமின்றி நிற்கும் - இனி நீக்கமின்றி நிற்கும் அன்றேயென்றது - அவன் ஏகானேகமிரண்டு மின்றிச்சர்வவியா பியாய் நிற்றலான்.

## 3 வது சூத்திரம்.

**உளது இலது என்றலின் எனதுடல் என்றலின்**
**ஐம்புலன் ஒடுக்கம் அறிதலின் கண்படின்**
**உண்டிவினை இன்மையின் உணர்த்த உணர்தலின்**
**மாயா இயந்திரத் தனுவினுள் ஆன்மா.**

1. இலது என்றலின் ஆன்மாவுளது = ஈண்டு இலதென்றலின் ஆன்மாவுள தென்றது -- எவற்றினையும் அன்றன்றெனவிட்டு ஆன்மர இலதென்று நிற்பது உளதாதலின் அதுவே அவ்வான்மாவாமென்றது.

2. என துடல் என்றலின் ஆன்மா உளது = இனி எனகடலென்றலின் ஆன்மாவுளதென்றது- என்பதி என்மனை என்றாற்போல, என்கை என்காலென நிற்பதிள தாதலின், அதுவே அவ்வான்மாவாமென்றது.

3. ஐம்புலன் அறிதலின் ஆன்மா உளது - இனி ஐம்புலனறியலி ன் ஆன்மாவுளதென்றது - ஐம்புலனாகிய சத்தபரிசரூபரசகந் தங்களை இந்திரியங்கள் ஒன்றறிந்த தொன்றறியாமையின், இவ்வைந் தினாலு மைம்பயனுமறிவதுள தாதலின், அதுவே அவ்வான்மாவாமென்றது

4. ஒடுக்கமறிதலின் ஆன்மாவுளது=இனி ஒடுக்கமறிதலின் ஆன்மாவுளதென்றது -நனவின்கட்கனவு கண்டாமென்றுங் கண்டி லமென்றுங் நிற்பதுள தாதலின் அதுவே யவ்வான்மாவாமென்றது.

5. கண்படில் உண்டிவினையின்மையின் ஆன்மாவுளது இனி கண்படி லுண்டிவினையின்மையினான்மாவுளதென்றது - ஒடுங்கின விடத்து இன்ப துன்பஞ் சீவனம் பிரகிருதிக் கின்மையின், ஒடுங்கா தவிடத்து இன்ப துன்பஞ்சீவியா நிற்பதுள தாதலின், அதுவே யவ்வான்மாவாமென்றது.

6. உணர்த்த உணர் தலின் ஆன்மாவுளது=இனி உணர்த்தவு ணர்தலினான்மாவுளதென்றது - அவனறிந்தாங்கறிவ னென்றறிவிக் கவறிந்துபதேசியாய் நிற்பதுள தாதலின் அதுவே யவ்வான்மாவா மென்றது.

7. மாயா இயந்திர தனுவினுள் ஆன்மாவுளது = இனி மாயாவியர் திரதனுவினுளான்மாவுள தென்றது - அவை தாம் வெவ்வேறு பெயர் பெற்று நிற்றலான்.

## 4 வது சூத்திரம்.

**அந்தக் கரணம் அவற்றினொன்று அன்று அவை**
**சந்தித்தது ஆன்மாச் சகச மலத்து உணராது**
**அமைச்சு அரசு ஏய்ப்ப நின்று அஞ்ச அவத்தைத்தே.**

1. அந்தக் கரணம் அவற்றினொன்று அன்று = ஈண்டு இவ்வான்மாவாவது அந்தக் கரணங்களாயுள்ள மனோ புத்தி யாங்கார சித்தங்களிலோன் றன்றென்றது - அவைதாம் பிரகாசமாய் நின்றேயப்பிரகாசமாய் நீற்றலான்.

2. சகச மலத்து உணராது (அமைச்சரசேய்ப்ப) அவை சந்தித்தது ஆன்மா = இனி இவ்வான்மா சகசமலத்தினாலுணர்வின்றென்றது - அது தான் ஞான திரோதகமாய் மறைத்துக்கொடு நிற்றலான்.

3. அமைச்சு அரசு ஏய்ப்ப நின்று அஞ்ச அவத்தைத்தே - இனி இவ்வான்மா சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி துரியக் துரியாதீதமாயுள்ள பஞ்சாவத்திதனாய் நிற்குமென்றது. அது தான் மலசொரூபத்தின் மறைந்து அரூப சொரூபியாய் நிற்றலான்.

## 5 வது சூத்திரம்.

**விளம்பிய உள்ளத்து மெய்வாய் கண்மூக்**
**அளந்து அறிந்து அறியாஆங்கு அவை போலத்**
**தாம்தம் உணர்வின் தமியருள்**
**காந்தம் கண்ட பசாசத்து அவையே.**

1. விளம்பியஒளள்ளத்து மெய்வாய் கண்மூக்கு அளந்து அறிந்து அறியா = ஈண்டு ஐயுணர்வு களான் மாவாலுணரு மென்றது - அவற்றிலானான் மாவொற்றித்துக் காணினல்லது அவை யொன்றையும் விடையியாவாகலான்.

2. ஆங்கு அவை போலத் தாம் தம் உணர்வின் தமியருள் காந்தம் கண்ட பசாசத்து அவையே = இனி இவ்வான்மா தன்னாலே யுணருமிந்திரியங்களைப் போலத் தானும் தன்னை யுண ராது நிற்றலால் இதுவுந் தமது முதலாலே யுணருமென்றது.

## 6 வது சூத்திரம்.

**உணருரு அசத்து எனின் உணராது இன்மையின்**
**இருதிறன் அல்லது சிவசத்தாம் என**
**இரண்டு வகையின் இசைக்குமன் உலகே.**

1. உணருரு அசத்து எனின் உணராது இன்மையின் = ஈண்டு அறிவினாலறியப்பட்ட சுட்டு அசத்தென்றது- அவைதாம் பிரகாசமாய்நின்றே யப்பிரகாசமாய் நிற்றலான்.

2. இருதிறன் அல்லது சிவசத்தாம் என இரண்டு வகையின் இசைக்கு மன் உலகே = இனிப் பிரகாசத்தினுக்குப் பிரகாசிக்கவேண்டுவ தின்மையானும் அப்பிரகாசத்தினுக்குப் பிரகாசமின்மையானும் இவ்விரண்டு தன்மையுமின்றி வாக்குமனாதீதகோசரமாய் நின்றவதுவே சத்தாயுள்ள சிவமென்றுணரற்பாற்று.

## 7 வது சூத்திரம்.

**யாவையும் சூனியம் சத்து எதிர் ஆகலின்**
**சத்தே யறியாது அசத்து இலது அறியா**
**இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா.**

1. யாவையும் சூனியம் சத்து எதிர் ஆகலின் சத்தே யறியாது = ஈண்டுச் சத்தினிடத்தசத்துப் பிரகாசியாதென்றது-மெய்யினிடத்துப் பொய்யப்பிரகாசமாய் நிற்றலான்.

2. அசத்து இலது அறியாது = இனியசத் தினுக்குணர் வின்றென்றது - அதுதானிரூபிக்கிலின்றாகலான்.

3. இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா = இனி இரு திறன றிவுள திரண்டலா வான்மா வென்றது - இவ்விரண்டினையு மறிவதாயுப்தேசியாய் நின்ற வறிவு இரன்டன்பா லுமுள தாய், உள்ளஅதுவேயவ்வான்மாவாமென்றது.

## 8 வது குத்திரம்.

**ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்து எனத்**
**தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்டு**
**அந்நியம் இன்மையின் அரன்கழல் செலுமே.**

1. தவத்தினில் உணர்த்த = ஈண்டு இவ்வான்மாக்கட்கு முற்செய்தவத்தான் ஞான நிகழுமென்றது-மேற்சரியை கிரியாயோகங்களைச்செய் துழி நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டியல்லது மோக்ஷத்தைக் கொடாவாகலான்.

2. தம் முதல் குருவுமாய் = இனி இவ்வான்மாக்களுக்குத் தமதுமுதறானே குருவுமாயுணர்த்து மென்றது- அவன் அந்நியமின்றிச்சைதன்னிய சொரூபியாய் நிற்றலான்.

3. ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்து என = இனி இவ்வான்மாக்கள் ஐயுணர்வுகளான்மயங்கித் தம்மை யுணராவென்றது- அவைதாம் பளிங்கிலிட்டவன்னம்போல், காட்டிற்றைக் காட்டி நிற்றலான்.

4. விட்டு அந்நியம் இன்மையின் அரன்கழல், செலுமே = இனி இவ்வான்மா தன்னை யிந்திரியத்தின் வேறாவான் காணவே தமது முதல் சீபாதத்தை யணையு மென்றது - அவைதாம் ஊசல் கயிறற்றாற் றாய்தரையேயாந்துணையான்.

## 9 வது சூத்திரம்.

**ஊனக்கண் பாசம் உணராப் பதியை**
**ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி**
**உராத்துனைத் தேர்த்து எனப் பாசம் ஒருவத்**
**தண் நிழலாம் பதி விதி எண்ணும் அஞ் செழுத்தே.**

**11. ஊனக்கண் பாசம் உணராப் பதியை ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி = ஈண்டு அம்முதலை ஞானக்கண்ணினாலே காண்கவென்றது- அவன் வாக்கு மனாதீத கோசரமாய் நிற்றலான்.**

**2. உராத்துனைத் தேர்து எனப் பாசம் ஒருவத் தண் நிழலாம் பதி = இனி அசத்தாயுள்ள வன்னபேதங்களையசத்தென்று காணவுளதாய் நிற்பது ஞானசொரூபமென்றுணரற்பாற்று.**

**3, விதி எண்ணும் அஞ்செழுத்தே - இனி இவ்விடத்து ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை விதிப்படி யுச்சரிக்கவென்றது- இவ்வான்மாக்களுக்கு ஞானம் பிரகாசித்தும் அஞ்ஞானத்தை வேம்பு தின்ற புழுப்போல நோக்கிற்றை நோக்கி நிற்குமாதலின், அது நீக்குதற்கெனக்கொள்க**

## 10 வது சூத்திரம்.

**அவனே தானே ஆகிய அந்நெறி**
**ஏகன் ஆகி இறைபணி நிற்க**
**மலமாயை தன்னொடு வல்வினை இன்றே.**

1. அவனே தானே ஆகிய அந்நெறி ஏகன் ஆகி - ஈண்டுப் பரமேஸ்வரன் இவ்வான்மாவாய் நின்ற முறைமையால் அவனிடத் தேகனாய் நிற்க வென்றது- அவ்வாறு நிற்கவே யானென தென்னுஞ் செருக்கற்று அவனது சீபாதத்தை யணையுமாகலான்,

2. இறைபணி நிற்க மலமாயை தன்னொடு வல்வினை இன்றே = இனி இறைபணி வழுவாது நிற்கவென்றது- அவனருளாலல்லது ஓன்றையுஞ் செய்யானாகவே யஞ்ஞானகன்மம் பிரவேசியாவாகலான்.

## 11 வது சூத்திரம்.

**காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்**
**காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்**
**அயரா அன்பின் அரன்கழல் செலுமே.**

1. காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல் காண உள்ளத்தைக் கண்டு காட்டலின் - ஈண்டு இவ்வான்மாக்கள் அவனையின்றி யமைந்தொன்றையும் விடயியாவாகலான் -- அவனும் அவற்றது விடயத்தையுணருமென்றது,

2. அயரா அன்பின் அரன் கழல் செலுமே - இனிப் பத்தியினான் மறவா தேத்தவவனது சீபாதத்தையணையுமென்றது - அவனந்நியமின்றிச் செய்வோர் செய்திப் பயன் விளைத்து நிற்றலான்.

## 12 வது சூத்திரம்

**செம்மலர் நோன் தாள் சேரல் ஒட்டா**
**அம்மலங் கழீஇ அன்பரொடு மரீஇ**
**மால்அற நேயம் மலிந்தவர் வேடமும்**
**ஆலயம் தாமும் அரன் எனத் தொழுமே.**

1. செம்மலர் நோன் தாள் சேரல் ஒட்டா அம்மலங் கழீஇ = ஈண்டு ஆணவமாயை காமியமென்னு பலங்களைக்களைசவென்றது- அவைதாம் ஞானத்தினை யுணர்த்தாதஞ்ஞானத்தை யுணர்த்துமாகலான்.

2. அன்பரொடு மரீஇ = இனி சிவபத்தர்க ளோடிணங்குக வென்றது - அல்லாதா ரஞ்ஞானத்தை யுணர்த்துவராகலான்.

3, மால்அற நேயம் மலிந்தவர் வேடமும் ஆலயம் தாமு அரன் எனத்தொழுமே - இனிபத்தரது திருவேடத்தையுஞ் சிவாலயத்தையும் பரமேஸ்வர னெனக் கண்டு வழிபடுக வென்றது - அவன் மற்றிவ்விடங்க ளிற் பிரகாசமாய் நின்றே யல்லாத விடத்தப் பிரகாசமாய் நிற்றலான்.

இனி இவ்விடங்களில் வழிபடுகவென்றது. நரம்பு நாடி முதலானவற்றைத் தான துவாய்வரும்புருடன் அவையாகா வாறப் புருடனுமாகலான்.

## நூற்கருத்து

முதற்பதியானேயைந்து முன்னத்துவிதமிரண்டே
யிதற்பினேயனுமானத்தாலெண்ணிலாவுயிர்கண்மூன்றே
யதற்பினேயவத்தை நான்கே யகமறுத்திடலேயைந்தே
செகற்பதிபிரித்தலாறே தெரிவித்தலுயிரையேழே.

மறைப்பினை நீக்கி ஞானவாரியை நினைத்தலெட்டே
சிறப்புடையுபாயந்தம்மாற் றெளிவித்தலுயிரையொன்பா
னறுத்திடன் மலங்கள் பத்தே யழுந்தலே சிவத்திலொன்றே
தியப்பணிகொளலிரண்டே சிவஞானபோதஞ்சித்தி,

திருச்சிற்றம்பலம்,

உ

# Extracts from the Introduction & C, to Sriman J. M. Nallasawmi Pillai's Sivagnana Botham - 1895.

The system of Hindu Philosophy which is expounded in the following pages, and its name will be altogether, newto many an English educated Hindu who is content to learn his religion and philosophy from English books and translations and from such scraps as turn up in newspapers and magazines. Yet it is the Philosophy of the Religion in which at least overy Tamil speaking Hindu is more or less brought up and the one Philosophy which ohtains predominance in the Tamil Language. This Philosophy is called The *Siddhanta* Philosophy aud is the special Philosophy ofthe Saiva Religion. The word means True End; and as used in logic, it means the proposition or theory proved as distinguished from the proposition or theory refuted, which becomes the *Purvapaksham*. The *Saiva* Philosophy is so called as it establishes the True End or the only Truth and all other systems are merely *Purvapakshams*. The system is based primarily on the Saiva Agamas. But the authority of the *Vedas* is equally accepted and the system is then called *Vedanta Philosophy* or *Vedanta Siddhantha Philososphy* or *Vaithika Saiva Philosophy*.

**"வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலை பெற்ற,**
**வித்தகச் சித்தர்கணமே."**

**"ராஜாங்கத்தில் அமர்ந்தது வைதிக சைவ மழகிதந்தோ."**

(Thayumanavar). This Philosopby is also spoken of as *Adwaitha* Philosophy in all the Tamil works and it will be seen from the very large use of the word and its exposition in almost every page of this work what important part it plays; and it strikes, in fact, the key note of the whole system. *Meikanda Devar* who translated and commented on *Sivagnana Botham* is called "*Adwaitha Meikandan*" (*அத்துவித மெய்கண்டான்*, one who saw the Truth of *Adwaitha*) by Thayumanavar. However, it is the *Agama* which gives the Philosophy its form and language. Very absurd notions are entertained of the *Agamas* or *Tantras*, specially derived from the low practices of the Right-hand followers or Vamababinis of Bengal and proceeding from ignorance of the real works, through want of published books and travslations. The books followed by the Left-hand Section or South Indian Sects are altogether different and I give a list of them below. Very little notice is taken of them by Oriental Scholars and of the existing works the *Karma Kanda* are alone preserved to us. There are several of these works in the great Mutt at Thiruvavaduthurai; and an excellent commentary on one of the *Upagamas*, *Paushkara*, by *Umapathisivacharya* is also preserved there. Like the *Veda* or *Mantra*, the *Agama* or *Tantra* is divided into *Karma Kanda* and *Gnana Kanda* and there were a large number of *Upagamas* corresponding to *Upanishads*, of which *Mrigendra* is very largely quoted by *Sayanacharya* in his *Sarvađarsana Sangraha*. The true relation of the *Agama* to the *Veda* is pointed out by Swami Vivekananda in his address to the Madras people and I quote

his observations below. The *Tantras* as we have said, represent the 'Vedic rituals'' in a modified form, and before any one jumps into the most absurd conclusions about them, I will advise him to read the Tantras in connection with the '*Brahmanas*' especially of the '*Adhwarya*' portion. And most of the '*Mantras*' used in the '*Tantras*' will be found taken verbatim from these '*Brahmanas*.' As to their influence, apart from the '*Srouta*' and '*Smarta*' rituals, all other forms of ritual observed from the Himalayas to the Comorin have been taken from the '*Tantras*' and they direct the worship of the Saktas, the Saivas, the Vaishnavas and all others alike"

I am also informed that the sources of the rules for the rituals followed by Smartas and which are now taken from some manuals and compilations of very recent origin are really found in the *Agamas* or *Tantras*. However, the *Agamas* are held in very high repute by the Non-Smartha populations of Southern India; and the *Agama* is as much held to be the word of the Deity as the *Veda*, the word literally, moaning "The Revealed Word."

Says Saint Thirumular:

"வேதமொடு ஆகமம் மெய்யாம் இறைவனூல், ஓதும் பொதுவும் சிறப்பு மென்றுன்னுக, நாதன் உரையிவை நாடில் இரண்டந்தம் பேதம் தென்னில் பெரியோர்க்க பேதமே."

'The *Vedas* and *Agamas* are both of the true, both being the word of the Lord. Think that the first is'n general treatise and the latter a special one. Both form the word of God. When examined, and where difference is perceived between Vedanta and Siddhanta, the great will perceive no such difference"

Says Sri Nilakanta Charya: -

"Vasanthu Vedasivagamayoibhedam,
Napasyamaha Vedopisivagamahạ."

(I don't perceive any difference between tire Veda and the Sivagama. The Veda itself is the Sivagama.)

It is needless to observe that Sri Nilakanta or Sri Kanta Charya belongs to the Saiya School; and it is no less surprising to see so little notice taken of him and his works by Oriental Scholars in their general account of Hindu Religions and Philosophies. And strange it is that even the learned Swami whom I have quoted above does not mention his came, though he mentions Sri Sankara, SriRamanuja and Sri Madvacharya and a host of other names small and great. Sri Kạnta was a friend and contemporary of Govinda Yogi, the Guru of Sri Sankara and his Bhashya of Vyasa Sariraka Satras according to most accounts was anterior to that of Sri Sankara's Bashya itself. And though he does not call his Vedanta Bashya as such, it is popularly known as Visishtad waitha Bashya or Sutta Adwaita Bashya. And the work is published in parts in the Pandit Vols. 6 and 7. This commentary of Sri Kanta Charya, the learned translator of the Vedanta Sutras, Mr. George Thibaut does not seem to have come across, and he nowhere alludes to

it by name and ret the results arrived at by him as to the teachings of the Sutras after a lengthy diṣcussion and comparison of the respective interpretations of the texts by Sri Sankara ard Sri Ramanuja, exactly fall in with the interpretation of the Sutras by Sri Kanta Charya. The learned translator observes (Introduction p. c.) "If, now, I am shortly to sum up the results of the preceding enquiry, as to the teaching of the Sutras, I must give it as my opinion that they do not set forth the distinction of a higher and lower knowledge of Brahman; that they do not acknowledge the distinction of Brahman and Iswara in Sankara's sense; that they do not hold the doctrine of the unreality of the world; that they do not, with Sankara, pro-claim the absolute identity of the individual and the highest self.". These are exactly points where Sankara and Sri Kanta differ. The translator further remarks that he agrees with Ramanuja's mode of interpretation in some important details, for instance, in regard to the doctrine of Parinama Vada and interpretation of fourth Adhyaya. These are also points where Rimanuja agrees with Sri Kanta. ButSri Kanta differs from both in their interpretations of the passages referring to Nirguna and Saguna Brahm, and follows the doctrine of the Siddhantha School. And the doctrine of Parinama Vada is the only distinguishing mark of Sri Kanta's Vedanta Philosophy as opposed to the Siddhantha Philosophy; and it is this Vedanta and notSankara's Vedanta, that is referred to approvingly by all Tamil writers and Sages, as in the passage of Thiruinalar and Thayumanavar above quoted. The ground work of Sivagnana Botham is the one adopted by Sri Kanta for the Vedanta Sutras, and as far as I have been able to compare they exactly tally, except where Saukara's forced explanations enters and the passages will certainly lose their meaning unless it is viewed in its proper place, as for instance, in regard to the purport of the 2nd Sutra of the first Adhyaya, the objection of the translator (p. xcii), which is perfectly cogent, will lose its point, if it is not taken as a definition of God but as involving the proof of the existence of God. The Sutra, "Brahman is that whence the origination and so on (*i.e.* the sustentation and reabsorption) of this world proceed," is exactly the same as the first Sutra of Sivagnana Botham and the same meaning is conveyed by the first Kural of Thiruvalluvar also. In passing, I may refer the reader to the Swetaswatara Upanishad, translated by Dr. Roer, the philosophy of which is exactly the same as herein expounded, though the learned doctor puzzles himself as to what this philosophy could be which is neither Vedanta, for: Sankhya nor Yoga and yet reconciles or attempts to reconcile all these doctrines.

Coming back to the Agamas, very little is known regarding its antiqrity from the point of view of the European Scholar. The Nyayikas use the word Agama Pramana, wbere we would now say Sruti Pramana, meaning Revealed Word, the word of God or of the highest authority. So that the Agamas shopld go back far behind their tiine. As the popular phrase runs, Vedagama Purana Iti hasa Smrities, its period should be fixed after the Vedas and before the rest of the group. Observes Rev. Hoisington, the first translator juto English of Siyagnana Botham, "the Agamam which contains the doctrinal treatise given in this work, may safe1y be ascribed to what I would term the Philosophical Period of Hinduism, the period between the Vedic and Puranic Eras. These doctrines can be traced in the earlier works of the Puranic period, in the Ramayana, the Bhagavat Gita, and the Manava Dharma Sastra. They arə so alluded to and involved in those works, as to evince that they were already systematized and established. We have the evidence of some Tamil works that the Agama doctrines were revived in the South of India before Braminism by which I mean Mythologieal Hinduism obtained any prominent place there. From some statements in the Ramayana, it would appear that they were adopted in the South before Rama's time. This would fix their date at more than a thousand years

before the Christian Era, certainly as early as that of the Ramayanam." Adopting another method, it can be very easily shown that they go far behind the date of Buddha, and though it is said that the religion of the Hindus at that time was Hinduism (a meaningless word from the stand poirt of the Hindu) the only religion which stood against Buddhism and Jainism in their palmiest days and into which they finally merged themselves, without leaving a single vestige in India, was the Saiva Religion. The struggles between Buddhism and Jainism and Saivaism are celebrated in the annals of our saints, Upamanya Bhakta Vilasa and the Tamil Peria Purana, and of these saints the great Manickavachaka, the famous author of Thiruvachakam belonged to the Buddhist period and the great Gnana Sambantha and Vakisa, the anthors of "Thevaram,' belonged to the Jain period, though our learned Swami Vivekananda seems to know very little of them, in spite of the fact that all our temples in Southern India and not a few in the utmost bounds of Mysore Province contain their images and all the principal festivals in Madras and in the mofussil are celebrated in their honor, I refer to the Makiladi feast in Thiruvottiyur, Aruvathumuvar feast in Mylapore, Aruthra feast in Chidambaram and Avanimula feast in Madurai not to speak of innumerable other feasts connected with every other temple. Such is the paucity of knowledge possessed by foreigners and conveyed in the English language regarding South Indian Chronology, language, religion and Philosophy; chiefly through want of patriotism and enthusiasm on the part of Tainil speaking Indians of the South. Regarding the antiquity of the Saiva Religion itself, M. Barth after observing that the genesis of the Religion is involved in extreme obscurity says that the Vedic writings chance upon them and as it were go along side of them, during the very period of their formation."

Of course the difficulty will appear to those who study these writings and the Philosophy contained in thenı apart from the Religion and Religious beliefs of the pcople, and the religion and beliefs of the people apart from tbe writings and the Philosophy coutained therein, and the difficulty will certaiuly vavish whien the two are studied together and it is perceived how intimately the two are connected together and how the one enters into the very whoof and warp of the other. Coming now to the work in question, the twelve Sanskrit Sutras in Anushtup metre form part of Rourava Agama and have been separately styled and handed dowu us 'Sivagnana Botham'. The Saivas believe that this is the very book which was in the hands of the Divine Guru, Dliakshanamurthi and these were the very doctrines which He taught to the Great Vedic Rishis, Sanaka, Sanathara, Sanantana and Sanantkumara. At any rate, as an example of such close and condensed reasoning, embracing as it does the whole of the field of Religion and Philosophy, the work is unparalleled. The Sariraka Sutras of Vyasa, which contain the same four divisions as the present work, consist of 555 sutras. There can be no doubt that the Tamilians, having very early secured a translation of this work through Meikanda Deva with his invaluable commentary, cared to possess no translation of any other work on Philosophy from the Sanskrit, and in spite of the great praise that is bestowed on the Bhagavat Gita, the Tanil reader knows nothing about it, and it is only recently a Tamil translation has been got out. Of the merits of this Philosophy, which is discussed" here as the Adwaithá Philosophy, the word Visishtadwaitha having never come into rise with the Tamil writers, I need say nothing here, following the example of the first translator Rev. H. R: Hoisington who neither says a word in blame por in praise of it, leaving the readers themselves to form their opinions. It is more than 40 years since he published his translation of this work and of two other

works in the Journal of the American Oriental Society, Vol. No. IV and I am not in a position to know what criticism it elicited then. Probably it was shelved as offering no points of attack. The objections usually taken by Missionaries and Oriental Scholars against Vedantism fall flat if urged against this theory, as herein expounded. Of the Rev. H. R, Hoisington and his translation, I must say a few words. He was an American Missionary attached to the Batticolla Seminary in Ceylon. He came to know of the work early and it is almost pathetic now to read after 40 years, what difficulties he had to contend with, before? he was able to master the subject and complete the translation and no meed of praise is sufficient for this and other disinterested seekers after the truth, wherever it may be found. Nor are these dificulties even vanished to-day. Consequent on the extreme terseness of diction and brevity of expression employed in the work, even the ordinaryPundits are not able to understand without proper commentaries; and very few Pundits could be found in Sothern India who are able to espound the text properly even now. For several years, it was in my thoughts to attempt a translation of this work, and time and place not permitting I was only able to begin it about the middle of last year and when I had fairly begun my translation, I learnt from a note in Trubner's Sarva.Darsana Sangraha that a previous translation of this work existed and hunting out for this book, I chanced upon an old catalogue of Bishop Caldwell and I subsequently traced out the possession of. Bishop Caldwell's book to Rey J. Lazarus, B. A., of Madras who very courteously lent ice the use of the book and to whom my best thanks are due. I have used the book to see that I do not go wrong in essential prints and in the language of the translation, Rev. Hoisíngtou's translation is not literal and is very free and was evidently made from a very free paraphrase given of the text by the pundis. I do not find anything corresponding to the Varthika commentary of Meikanda Deva in his translation;

The plan of Sivagnana Botham is this. The twelve Sutras are divided into 2 Chapters of 6 Sutras each, general and special. These chapters are divided into two ‘Iyals' each, making a total division of the book into four, of three Sutras each.

The first chapter treats of the proof of the three entities or Padarthas, the second dealing with their further attributes or relationship, the third dealing with Sadana or modes of attaining the benefit of the knowledge of the three Padarthas, and the last dealing with the True End sought after by all mankind. The reader of Vyasa's Sariraka Sutra or Vedanta Sutra will observe that the divisions adopted in the latter work are the same as in Sivagnana Botham. Further each Sutra is divided into separate theses or arguments and Meikanda Deva has added his commentary called Varthika to each of these theses or arguiments or Adbikarana as it is called. This Varthika cornmentary is in very terse prose and is the most difficult portion of the work. Meikanda Deva has added Udarana or analogics in verses of Venba Metre to each of the Adhikaranas, Theso Udarana are not similes of rhetoric but are logical analogies used as a method of proof. The reader's attention ia particularly drawn to these analogies and he is requested to test these analogies with any role of Western logic, and at the same time test the analogies ordinarily set forth in works on Hindu Puilosophy published in English.

‘Alavai or logic, an abstract of which has been also translated by Rep. H. R. Hoisington and published in the American Oriental Journal, Vol, iv. is a chapter in Sivagnana Siddhi. Thongh this is based on Sanskrit works on Logic, yet an advance is

made in a new classification of logical methods, predicates, &c. And this I might say of the genius of Taroil writers generally, thongh they hare borroved largely from Sanskrit, the subject receives altogether an independent and original treatment. As my old teacher nsel to observe, no doubt Gold from Sanskrit source is taken but before it becomes current coin, it receives the stamp or impress of the Tamil writer's genius.

In these days of boasted toleration, and the proclamation of universal truths and universal religions from every little house top, it will be interesting to note what an ideal of toleration and universal religion the Siddhanta writers generally had. Says the author of Sivagnana Siddhi, “Religions and truths as professed in this world are various and differ from each other. If you ask, which is then the true religion and which is the universal truth, hear! That is a universal Religion and Truth, which without contradicting this faith or that faith reconciles their differences and comprises all and every faith and truth in its broad folds." The gist of this is contained in the phrase ‘எல்லாமாய் அல்லவுமாய்’ “all and not all or above all" which again is the Lakshana of Adwaitham, as I have elsewhere explained. In India, at the present day, certain phrases or forms of Idealism are put forward as expressing universal Truth and a large body of ignorant" and credulous people are misled by it. Idealism is being exploded and is credited in Europe, and as M. Barth truly observes, Idealism when pushed to its logical conclusions leads one to Nibilism.

## LIST OF SIDDHANTA WORKS IN TAMIL

1. Sivagnana Botham
2. Sivagnana Siddhi
3. Irupairupakthu
4. Thiruvunthiar
5. Thirukalitrupadi
6. Unmainerivilakkam
7. Unmanivilakkam
8. Sivaprakasam
9. Kodikavi
10. Vinavenba
11. Nenjuviduthuthhu
12. Sankarapanirakaranam
13. Portipakrodai
14. Thiruvarutpayan

ஐவகை யெனும் பூதமாதியை வகுத்த தனு ளசரசர பேதமான
யாவையும் வகுத்து நல்லறிவையும் வகுத்து மறையாதி நூலையுஞ் வகுத்து
சைவ முதலா வளவில் சமயமும் வகுத்து மேற் சமயங் கடந்தமோன
சமரசம் வகுத்த நீ யுன்னை நானணுகவுந் தண்ணருள் வகுக்கவிலையோ
பொய்வளருநெஞ்சினர்கள் காணாத காட்சியே பொய்யிலா மெய்ய ரறிவிற்
போச பரிபூரண வகண்டி தாகாரமாய்ப் போக்கு வரவற்ற பொருளே
தெய்வ மறைமுடிவான பிரணவ சொரூபியே சித்தாந்த முத்தி முதலே
சிரகிரிவிளங்கவரு தட்சிணாமூர்த்தியே சின்மயானந்த குருவே.

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# சிவஞான போதம்.

## மூலமும் உரையும்.

சிவபெருமான் காமிக முதலிய சிவாகமங்களில் கூறப்பட்ட ஞானபாதத்தின் உளதாகிய ஐயம் நீக்கும் பொருட்டு, அப்பொருளின் உண்மையைப் பொதுவியல்பு சிறப்பியல்பு என இருவகைப் படுத்திப்திப்பதற்கு கௌரவாகமத்தில் பன்னிரண்டு சூத்திரமாக அருளிச்செய்தனர். அந்த வடநூற் சிவஞானபோதத்தை மெய்கண்ட தேவர் தமிழில் பன்னிரண்டு சூத்திரமாகவே மொழிபெயர்த்து, அச்சூத்திரப்பொருளை விளக்குதற்பொருட்டு, வார்த்திக மென்னும் பொழிப்புரையும், உதாரணங்களாகச் சில வெண்பாக்களும், அருளிச் செய்தனர். அவர் அங்ஙனம் அருளிச் செய்த இச்சிவஞானபோதம் ஞானபாத முணர்த்தும் நூல்களிலே முதல் நூல் என்னப்படும். இம் முதனூலின் வழியாகச் சகலாகமபண்டிதர் சிவஞான சித்தியார் என்னும் நூலினை அருளிச்செய்தனர். இது வழி நூல் என்னப்படும். இவ்விருவகை நூல்களையுஞ் சார்ந்து கொற்றவன்குடியார் சிவப்பிரகாச மென்னும் நூலினை அருளிச் செய்தனர். அது சார்பு நூல் என்னப்படும் இம்முத்திறத்து நூல்களுள்ளும் மிகச் சிறந்த சிவஞானபோதம் பெரும்பான்மையோர்க்குப் பயன்படலாம் என்பது கருதி, அதனைச் சிவஞானசித்தியாரிற் சொல்லப்படும் அளவையுடனே பதிப்பித்தனம்.

பதி பசு பாசம் என்னும் திரிபதார்த்தமும் சாத்திரத்தாலும் சம்பிரதாயத்தாலும் அறிவதே அன்றி, பிரமாணங்களினாலும் உணர வேண்டியதால், அவ்வளவைகளின் இலக்கண்ங் காட்டப்படும்: -

அளவை காண்டல் கருதலுரை யபாவம் பொருளொப்பாறென்பர், அளவை மேலு மொழி புண்மை யைதிகத்தோடியல்பெனநான், களவை காண்ப ரவையிற்றின் மேலுமறைவ ரவையெல்லாம், அளவை காண்டல் கருதலுரை யென்றிம் மூன்றி னடங்கிடுமே.

(இ-ள்.) அளவை - அளக்கத்தக்க அளவை, அவையாவன: -- காண்டல் - பிரத்தியட்ச பிரமாணம், அதாவது ... அட்சம் - இந்திரியம், பிரதி - விஷயம், எனவே கண், செவி, வாய், மூக்கு, மெய் இவை ஐந்தும் தத்தம் புலன்களை அறிதலென்றாயிற்று.

கருதல் - அனுமான பிரமாணம், அதாவது ... அனுமானத்தாலேஅனுமேயத்தை அறிதல்.

உரை - ஆகம பிரமாணம், அதாவது .... தந்திரகலை, மந்திரகலை, உபதேச கலை என மூன்றாம்; அம்மூன்றையும் மேல்விரித்துரைப்பதனால் அறிக.

அபாவம் - அபாவபிரமாணம், [பாவம் உள்ளது, அபாவம்–இல்லாதது, அது இல்லதனை இல்லையென்ரல்,] அதாவது... முயற்கோடில்லை என்றவழி, அதனை உண்டோவென்று மயங்காமல் இல்லையென்றுகோடல்; சித்தினிடத்து அசித்து இல்லையென்றால், இல்லையென்றே கோடல்.

பொருள் -- அருத்தாபத்தி பிரமாணம், அதாவது ... கங்கையிலே இடைச்சேரியிருப்பதென்றால், அதன் கரையிலென்றுணர்தலாம்; உடம்பறியுமென்றால், உடம்பு சடமாகையால் அறியாது உடம்பினுள் ஆன்மா அறிகின்றதென்க.

ஒப்பு - உவமானபிரமாணம், அதாவது... ஆமாவை ஆப்போன் றிருக்கு மென்று கேட்டவன் அதனைக் காட்டகத்துக் கண்டபொழுது, அது அந்த ஆவோடு உலமிக்கப்பட்ட தென்றுணர்தலாம்; உவமங்காட்டி உரைக்கப்படுதல், இன்னது இன்னது போலும் என்றலாம்; மாயையும் பூதாதியும் மண்ணும் கடமும் போலுமென்றும், ஆன்மாவும் மூலவிருளும் செம்புங் காளிதமும் போலுமென்றும், பதியினுடைய கிருத்தியம் ஆதித்தனைப்போலுமென்றும், கூறுதலாம்.

ஆறு என்பர் - சொல்லப்படும் இந்த ஆறளவைப் பிரமாணமும் ஒருவர் சொன்னவைகளாம்,

அளவை மேலும் - இந்தவாறு பிரமாணங்களின்மேலும்,

ஒழிபு - பாரிசேடபிரமாணம், அதாவது ... பாரித் துச்சேடித்தல் [கூட்டிக்கழித்தலாம்,] மூவர் இருந்தவிடத்தே ஒருகளவை நாடில், நாங்களிருவோரும் அல்லேமென்றால், நின்றவொருவன் கள்ளினென்கையாம்.

உண்மை - சம்பவபிரமாணம், அதாவது... ஒருகல் இரும்பை ஈர்க்குமென்றால், அது காந்தமென்றறிதல். ஒருவன் சன்னிதியிலே பிரவஞ்சங்கிருத்தியப்பட்டு வருகிறதென்றால், அவன் பரமேசுரனெனவறிதல்; இதுதொழிலைக் கொண்டு பொருளினியல்பறிதலாம்.

ஐதிகத்தோடு - ஐதிகபிரமாணம், அதாவது ... தொன்றுதொட்டு வருங்கேள்வி, [கர்ணபாம்பரை எனினும் அமையும்] அது, உலகத்தார் ஒரு மரத்தின்கண்ணே பேயுண்டென்றால் தானுமுண்டென்று கொள்ளுதலாம்.

இயல்பு - சுபாவபிரமாணம், அதாவது...ஒருசொற் பலபொருளாட்யிருந்தவிடத்து அதற்கேற்பது அறிந்து பொருள் கோடல். அது யானைமேலிருந்தான் தோட்டி தாவென்றால், பிறிதொரு தோட்டியென்றுண ராமல், யானைத்தோட்டியென்றுணர்ந்து, அதனைக் கொடுத்தலாம்; இவைகளில் ஒழிவை மீட்சிமொழியென்று கூறினுமாம்; அதாவது... கீழைச்சேரி தோற்றதென்றால், மேலைச்சேரிவென்நதென்று சொல்லாமல் அறிதல்; ஒருத்தன் முத்திபெற்றானென்றால் பாசசேதனம் பண்ணினானென்பது சொல்லாமலறிதல்; இது சொல்லாமற் சொல்லலுமாம்.

என நான்கு அளவை காண்பார் - என நால்வகைப்பிரமாணங்கள் உளவென்று சிலர் சொல்லுவார்கள்,

அவையிற்றின் மேலும் அளவை அறைவர் - இந்தப் பத்துப் பிரமாணங்களின் மேலும் வேறும் சிலபிரமாணங்கள் சொல்லுவார்கள்,

அவை எல்லாம் - இப்பிரமாணங்கள் எல்லாம்,

காண்டல் கருதல் உரை என்று இம்மூன்றின் அடங்கிடுமே-

பிரத்தியட்சம் அனுமானம் ஆகமமென்று சொல்லப்படும் இந்த மூன்றினம் அடங்கும் எ-று.

## ALAVEI OR LOGIC

Some classify Logical methods into Six. (1) Prathiatela (observation & experiment), (2) Avumana (Inference), (3) Agama (Testimony or Authority), (4) Abava (non-existence), (5) Arthapathi (deduction), (6) Upamana (analogy) Some add the following four to the foregoing, namely (7) Parishesha (Inference by exceptiou), Sambava (co-existence), Ithigam (Tradition), (10) Svaba Linga (Natural Inference). All these are included in the three first Prathiatcha, Anumana, and Agama. (1)

நிறுத்திய முறையானே பிரத்தியட்சமும் அனுமானமும் ஆகமமும் இவையெனக் கூறுகின்றது. -

**மாசறு காட்சி யையந் திரிவின்றி விகற்பமுன்னா**
**ஆசறவறிவதாகு மனுமான மவினாபாவம்**
**பேசுறு மேதுக்கொண்டுமறைபொருள் பெறுவதாகும்**
**காசறு முரையிம்மானத்தடங்கிடாப் பொருளைக் காட்டும்.**

(இ-ள்.) 'மாசு அறுகாட்சி - குற்றமற்ற பிரத்தியட்ச பிரமாணம், அதனை மாசறு காட்சியெனப் பொதுப்படக்கூறினமையின், சத்தத்தை அறியுஞ் சோத்திர இந்திரியக்காட்சியும், பரிசத்தை அறியும்தொக்கிந் திரியக்காட்சியும், ரூபத்தை அறியும் சட்சு இந்திரியக்காட்சியும், இரசத்தை அறியும் சிங்கவை இந்திரியக்காட்சியும், கந்தத்தைஅறியும் ஆக்கிராண இந்திரியக்காட்சியும் ஆக இவ்வைந் துகாட்சியும்மான தக்காட்சியும், வேதனைக்காட்சியும், யோகக்காட்சியுமாம்.

ஐயம் திரிவு இன்றி - ஐயக்காட்சியும் திரிவுக்காட்சியும் இன்றி

விகற்பமுன்னா - விகற்பக் காட்சியினும் செல்லாமல்,

ஆசு அற அறிவது ஆகும் - குற்றமற அறிவதாகும்

அனுமானம் - அனுமான பிரமாணம், அது தன்பொருட்டமானமும் பிறர் பொருட்டனுமானமுமாம்.

அவினாபாவம் - நீக்கமற்றதாயுள்ளது [வினா-நீக்கம், அவினா நீக்கமற்றது, பாவம் உள்ளது,] எனவே நீக்கமற்றதா யுள்ளதாகவெனப் போந்தது. எனவே, நீக்க மற்றதாகச் சொல்லப்பட்ட எது வென்றாயிற்று; நீக்கமாகச் சொல்லப்பட்ட எதுக்களும் உளவோ எனின், அவை பொருந்துவனவும் பொருந்தாதனவுமாய் வரும்; அவை வருமாறு மேலே சொல்லுதும்,

பேசுறும் எதுக்கொண்டு - சொல்லப்பட்ட எதுவைக்கொண்டு,

மறைபொருள் பெறுவது ஆகும் - மறைந்த பொருளைக்காண்பதாகும், அதாவது...சாதனங்கொண்டு சாத்தியம் துணியப்படுவதாம்,

காசு அறும் உரை - குற்றமற்ற சாத்திர பிரமாணமாம், அது பிரத்தியட்சம் அனுமானங்களுக் கெட்டாத பொருளை அறிவித்தலால், காசறு முரையெனப்பட்டது,

இம்மானத் தடங்கிடாப் பொருளைக்காட்டும் - இந்த அனுமானதுள் அடங்காதபொருளைக்காட்டும் எ - று.

அது சுவர்க்க நரகம் உண்டோ என்னில், ஆகம பிரமாணத்தாலே உண்டென்று சாதித்தலாம்; அனுமானத்தினாலே பாதிக்க வாராமை யாலென்க.

அனுமான இலக்கணத்தில் சேடம் வறுமாறு,... ஏது அனுமானம், பொது அனுமானம், எச்ச அனுமானம், முதலனுமானம் என நான்குவகையாம். ஏது அனுமானமாவது,... புகையைக்கண்டு நெருப்புண்டென்றறிதல். பொது அனுமானமாவது,... யானை மேலிருந்தோன் காள மூத அந்தவோசை கேட்டவன் சாதனமாயுள்ள காளத்தோடே சாத்தியமாயுள்ள யானைக் கொற்றுமைப்பாடிருக்க, அந்தக்காளவோசை கேட்குந்தோறும் அந்தவிடத்தே யானையுண்டென அறிதல், எச்ச அனுமானமாவது,... ஆற்றிலேவெள்ளம்வர, அந்தக்காரிய எதுவைக்கொண்டு அதற்குக் காரணமாகிய மழை மலைத்தலையின் கண்ணே உண்டென அறிதல். முதலனுமானமாவது,... சூல் முதிர்ந்த முகிலைக்கண்டு காரண ஏதுவாகக் காரியமாகிய மழை பெய்யுமெ ன்றுணர்தல். இவையிற்றிற் காளம் யானையொழிய ஊதவுங்கூடும். பொது எனினும் சாமானியம் எனினும் ஒக்கும். வெள்ளம் அணை கடந்துவரவும் கூடும். எச்சம் எனினும் காரியம் எனினும் ஒக்கும். சூல் முதிர்ந்தமேகம் பெய்யாதொழியவுங் கூடும். முதல் எனினும் காரணம் எனினும் ஒக்கும். ஆதலால், தப்ப வருவனவும் உண்டு, தப்பாது வருவனவும் உண்டு.

Prathiatcha is the direct & correct perception of things without doubt and mistake and without the sense of differentiation. By Anumana we infer things hidden from certain data by knowledge of their inseparable connection (by succession or co-existence or equality). Agama Pramana will guide us to the knowledge of things unattainable by the foregoing two methods. (2)

நிறுத்திய முறையானே ஐயக்காட்சியும், திரிவுக்காட்சியும், விகற்பக்காட்சியும் இவை யெனக்கூறுகின்றது: ---

**கண்டபொருளை யிரட்டுறவே கருதலையந்திரியவே,**
**கொண்ட வறிவாம் பெயர்சாதி குணமே கன்மம் பொருளெனவைந்,**
**துண்டவ்விகற்ப வுணர்வினுக்குப் பொருளினுண்மை மாத்திரத்தின்,**
**விண்டலில்லா வறிவாகும் விகற்பமில்லாக் காட்சியே.**

(இ-ள்.) கண்டபொருளை இரட்டுறவே கருதல் ஐயம் - காணப்பட்ட தொருபொருளை இரண்டுபடக் கருதுதல் ஐயக்காட்சியாம்; அது குற்றியோ மகனோ? பசுவோ மரையோ? என்று ஐயப்படுதல்.

திரியவே கொண்ட அறிவுஆம் - ஒன்றை மற்றொன்றாகக் கொண்டறிதல் திரிபுக்காட்சியாம்; அது பழுதையைப் பாம்பென்வும் இப்பியை வெள்ளியெனவும் அறிதலாம்.

பெயர் சாதி குணமே கன்மம் பொருள் என - இன்னபெயர் இன்னசாதி இன்னகுணம் இன்னதொழில் இன்னபொருள் என்று,

ஐந்து உண்டு அவ்விகற்ப உணர்வினுக்கு - ஐந்துள்ளனவாம். விகற்பித்தறியும் அவ்வறிவினுக்கு அவை சவிகற்பக் காட்சியாம்; பொருள் என்றது பெயர் சாதி குணம் கன்மம் என்னும் நான்கையும்உடைய சமுதாயமேயாம்.

பொருளின் உண்மை மாத்திரத்தின் - அவற்றினுடைய பொருளினது சுபாவமாத்திரத்தை,

விண்டல் இல்லா அறிவு ஆகும் - விள்ளுதலில்லாம லறிவதாம்,

விகற்பம் இல்லாக் காட்சியே-விகற்பம் இல்லாத காட்சி எ-று.

அதாவது ... நிருவிகற்பக்காட்சியாமென்க. அது சுவானுபூதியாக உணர் தலாம். தவமிக்காரே அதற்குச் சான்றாம். கண்டவர்விண்டிலர் விண்டவர் கண்டிலர் என்பதும் அது.

Doubtful perception is when we doubt a thing seen to be this or that; the mistaken knowledge is where we know one thing to be another; Savikarpa knowledge comprises the knowledge of name, class, attribute, action, & thing. Nirvikarpa knowledge is the knowledge of the thing itself without knowledge of its name, class, attribute, and action.

நிறுத்திய முறையானே காண்டல் கருதல் உரையென் பவற்றின் பகுதியும், அவற்றால் உணரும் உணர்வின் பகுதியும் கூறுகின்றது.

**காண்டல் வாயின் மனந்தன்வே தனையொடி யோகக் காட்சியென,**
**ஈண்டு நான்கா மனுமானந் தனக்கும் பிறர்க்கு மென்றிரண்டாம்,**
**மாண்டா வுரைதந்திர மந்திரத்தோடுபதேசச்சொ லெனமூன்றாம்,**
**பூண்டவளவைக் கெதிர்புலன்றன் னியல்பு பொதுவென் றிரண்டாமே.**

(இ-ள்) காண்டல் வாயில் மனந்தன் வேதனையொடு - பிரத்தியட்சமாவது... இந்திரிய பிரத்தியட்சமும் மானத பிரத்தியட்சமும், சுவேதனா பிரத்தியட்சமும் அவற்றினுடனே,

யோகக்காட்சி என ஈண்டு நான்கு ஆம் - யோக பிரத்தியட்சமுமென இவ்விடத்து நான்குவகையாம்,

அனுமானம் தனக்கும் பிறர்க்கும் என்று இரண்டு ஆம் - அனுமானமாவது ... தன் பொருட்டனுமானமென்றும், பிறர் பொருட்டனுமானமென்றும், இரண்டு வகைப்படும். அவற்றைச் சுவார்த்தானுமானம் பரார்த்தானுமானம் எனினும் அமையும்.

மாண்ட உரை - மாட்சிமைப்பட்ட ஆகம்பிரமாணமாவது,

தந்திர மந்திரத்தோடு உபதேசச் சொல் என மூன்று ஆம் - தந்திரகலை மந்திரகலை என்னும் இவற்றினோடு உபதேசகலையுங் கூட்ட மூன்று வகையாம்,

பூண்ட அளவைக்கு எதிர்புலன் - இப்படிச் சொல்லப்பட்ட பிரமாணங்களுக்கு நேர்பட்ட பிரமேயம் எதிர்தோன்று புலமாம், (அப்பிரமேயம் மேல்விரிக்கும் ஆற்றலறிக).

தன் இயல்பு பொது என்று இரண்டு ஆமே - தன்னியல்பென்றும் பொதுவியல்பென்றும் இரண்டாம். தற்சுபாவம் சாமானியசுபாவம் எனினும் அமையும் எ-று.

Direct Perception or Prathiatcha is classified into four kinds; (I) Perception by means of external senses, (2) by means of internal senses, mind, (3) by the feeling of pleasure and pain and (4) by Yoga or seership. Anumana or inference is divided into two nanely (1) Swarthanumalla, (2) Parathanumana. Agama is divided into (1) Mantra, (2) Tantra, and (3) Upasana, the words of the teacher (Gnana). The things proved by means of these logical methods are classed as Vishesha, Particular (species) anal Samanya or General (Genus).

தன்னியல்பும் பொதுவியல்பும் இவை என உணர்த்துகின்றது: -

**அன்னிய சாதி யுந்தன் சாதியு மகன்று நிற்றல்**
**தன்னியல் பன்னி யத்தைத் தவிர்ந்து தன் சாதிக் கொத்தல்**
**துன்னியபொதுவியற்கை சொன்னவிவ் விரண்டி னுள்ளே**
**மன்னிய பொருள்கள் யாவு மடங்கிடு மானமுற்றால்.**

(இ-ள்.) அன்னியசாதியும் தன்சாதியும் - தனக் கன்னியமான சாதியையும் தன்னுடைய சாதியையும்,

அகன்றுநிற்றல் தன் இயல்பு - நீங்கித் தானொரு தலைமை பெற்று நிற்றல் தன்னாலுண்டாகிய தற்சுபாவ பிரமேயமாம்,

அன்னியத்தைத் தவிர்ந்து தன் சாதிக்கு ஒத்தல் - அன்னிய சாதியினும் செல்லாமல் தலைமையும் பெறாமல் தன்னுடைய சாதிக் குணத்திலே நிற்றல்,

துன்னிய பொது இயற்கை - பொருந்திய பொது இயல்புப் பிரமேயமாம்,

சொன்ன இவ் இரண்டினுள்ளே - சொல்லப்பட்ட தன்னியல்புப் பிரமேயத் தினுள்ளும் பொதுவியல்புப் பிரமேயத் தினுள்ளும்,

மன்னிய பொருள்கள் யாவும் - நிலைபெற்ற பொருள்கள் எல்லாம்,

மானம் உற்றால் அடங்கிடும் - அளந்தறியுமிடத்து அடங்கும் எ-று.

மானமுற்றால் - கருதலுற்றாலென்க. அவை இருப்பை வேம்பு முதலாகிய அன்னியசாதியையும், தேமா முதலாகிய தன்சாதியையும் நீங்கிப் புளிமாவென நிற்றல் தன்னியல்புப் பிரமேயமாம். இருப்பை வேம்புமுதலாகிய அன்னியசாதியையும் நீங்கி, தானும் தலைமை பெறாமல், மாவெனநிற்றல் பொதுவியல்புப்பிரமேயமாம். ஆகவே, பதி பசு பாச மூன்றும் இவ்வாறாம் ஆறு உணர்க. பதிதனக்கன்னியமான ஆன்மாவுமாகாமல், தன்னுடைய சிற்சொரூபமாயும் இராமல், தனது ஏகசத்தியாலே பஞ்சகிருத்தியம் பண்ணுதல் தன்னியல்பு. ஆன்மாவும் ஆகாமல், பஞ்சகிருத்தியமும் பண்ணாமல், சிற்சொரூபமாயிருத்தல் பொதுவியல்பாம். ஆன்மாவும் பாசங்களுடனுங்கடா மல், தன்னுடைய ஆன்மவர்க்கங்களினுங்கூடாமல், அனுக்கிரகம் பெற்றவழி சீவன்முத்தனா யிருத்தல் தன்னியல்பாம். ஆன்மா பாசங்களுடனுங்கூடாமல், சீவன்முத்தனாயும் இராமல், தன்னுடைய சுபாவமாகிய சீவனென நிற்றல் பொதுவியல்பாம் என்க.

Vishesha apply to things which exclude from its denotation species of its own class as well as other classes. Samanya applies to class to which the thing belongs excluding other classes. These two classes described above will comprise all things.

மேல்நிறுத்திய முறையானே இந்திரியப்பிரத்தியட்சமும் மானதப் பிரத்தியட்சமும் உணர்த்துகின்றது. ---

**உயிரினோ டுணர்வு வாயிலொளி யுரு வாதி பற்றிச்**
**செயிருறு விகற்ப மின்றித் தெரிவதிந் திரியக் காட்சி**
**அயர்விலிந் திரியஞான மைம்புலன் சார்ந் துயிர்க்கண்**
**மயர்வற வந்த ஞானம் மானதக் காண்ட லாமே.**

(இ-ள்) உயிரினொடு உணர்வு - ஆன்மா பிராணவாயுவுடனே தனக்குடனாகிய அறிவோடுகூடி,

வாயில் - இந்திரிய துவாரங்களின் வழித்தாய்,

ஒளி உரு ஆதி பற்றி -- ஒளி முதலான சகாயங்கொண்டு உருவ முதலாகிய ஐந்து விடயங்களையும் பற்றி,

செயிர் உறு விகற்பம் இன்றி - ஐயக்காட்சி திரிபுக்காட்சி என்னும் விகற்பம் இன்றித் தனித்தனி அவ்விடயங்களை,

தெரிவது இந்திரியக்காட்சி-காண்பது இந்திரிய பிரத்தியட்சமாம்,

அயர்வு இல் இந்திரிய ஞானம் ஐம்புலன்சார்ந்து - அப்படியே ஐயந் திரிபென்னும் விகற்பமறக்கண்ட இந்திரியக்காட்சி 'உருவ முதலாகிய புலன் ஐந்தையுஞ்சார்ந்து

உயிர்க்கண் மயர்வு அற வந்த ஞானம் -- ஆன்மாவினிடத்தே மயக்கமறப் பொருந்தியஞானம், அதாவது... விடயபோகங்ளை இன்ன எனத் துணிதல்.

மானதக் காண்டல் ஆமே -- மான தக்காட்சியாம் எ-று.

இது பாசஞானமென்றறிக. இதன்விரிவு வருமாறு.

ஆன்மாவானது தனது பிராணவாயுவுடனே தனக்குடனாகிய அறிவுடனே கலந்து சோத்திரேந்திரிய துவாரத்தின் வழித்தாய் ஆகாய சகாயங்கொண்டு சத்தத்தையறிவது சோத்திரேந்திரிய பிரத்தியட்சமாம். தொக்கிந்திரிய துவாரத்தின் வழித்தாய் வாயுசகாயங் கொண்டு பரிசத்தை அறிவது தொக்கிந்திரிய பிரத்தியட்சமாம். சட்சுவிந்திரிய துவாரத்தின் வழித்தாய்ச் சோம சூரிய அக்கினி சகாயங்கொண்டு ரூபத்தை அறிவது சட்சுவிந்திரிய பிரத்தியட்சமாம். சிங்நுவையிந்திரிய துவாரத்தின் வழித்தாய் அப்பு சகாயங்கொண்டு இரசத்தை அறிவது சிங்நுவை இந்திரிய பிரத்தியட்சமாம். ஆக்கிராண இந்திரிய துவாரத்தின் வழித்தாய்ப் பிருதிவி சகாயங்கொண்டு கந்தத்தை அறிவது ஆக்கிராண இந்திரிய பிரத்தியட்சமாம் என்றறிக. (6)

Perception by external senses arises when with the Soul's intelligence, the external senses coming in contact with light, air, &c., perceives correctly form, sound &c without the sense of difference and similarity.

Perception by internal senses arises when after such external perception, a mental impression is produced freed from doubt and mistake, involving the operations or retention and reflection and the sense of difference and similarity.

முறையே சுவேதனைக்காட்சியும் யோகக்காட்சியும் உணர்த்துகின்றது. -

**அருந்தின்ப துன்பமுள்ளத் தறிவினுக் கராகமாதி**
**தருந் தன்வே தனையாங்காட்சி சமாதியான் மலங்கள் வாட்டிப்**
**பொருந்திய தேசகால வியல்பகல் பொருள்களெல்லாம்**
**இருந்துணர் கின்றஞானம் யோகநற் காண்டலாமே.**

(இ-ள்.) அருந்து இன்ப துன்பம் -- இந்திரிய துவாரங்களின் வழித்தாக விடையங்களைப் புசித்ததனால் வந்த சுகதுக்கங்களை,

உள்ளத்து அறிவினுக்கு அராகம் ஆதிதரும் - ஆன்மாவினுடைய ஞானத்துக்கு அராகாதிகள் தருதல், எனவே அந்தக்கரணங்களாலே விடயங்களைக் கிரகித்த அராகாதிகள் என்றாம்.

தன் வேதனைக்காட்சி ஆம் - தன் வேதனைக்காட்சியாம், அதாவது...ஆன்மா இந்திரிய வழித்தாய் விடயங்களை கிரகித்ததனால் வந்தசுகதுக்கங்களைப் புசிச்கும் அவதாம்,

சமாதியால் -- இயம, நியம, ஆசன, பிராணாயாம, பிரத்தியாகார, தாரணை, தியான, சமாதியாலே,

மலங்கள் வாட்டி-மலங்களைச் சீவியா தபடி அகற்றி,

பொருந்திய தேசகால இயல்பு - தான் இருக்கின்ற தேசகால சுபாவங்களையும்,

அகல் பொருள்கள் எல்லாம் - விரிந்துள்ள உலகினுள்ள எல்லாப் பொருள்களையும்,

இருந்து உணர்கின்ற ஞானம்- ஓரிடத்தே இருந்து எக்காலத்திலே அறிந்த அறிவு,

யோகாற் காண்டல் ஆமே - நல்லயோகத்தால் காணும் காட்சியாம் எ-று.

அதாவது... அணிமா, மகிமா, லகிமா, கரிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்னும் அட்டமாசித்தி முதலாயின பொருந்தி விந்துநாத சொரூபம் ஆகிய உண்மையைப் பார்த்திருப்போரது தன்மையாம். இனி இவையொழிந்து கண்டுணராமை, உணர்ந்ததை உணர்தல், நினைப்பு எனச்சில போலிக்காட்சியும் கூறுவர். அவை வருமாறு- கண்டுணராமையாவது, சிலவற்றைக்கண்டு அதன் பெயர் அறியாதிருத்தல்; உணர்ந்ததை உணர்தலாவது, முன் குளிர் வந்துற்றகாலத்து நெருப்பு மருந்தென்று அறிந்தான் பின்பு அதற்கது மருந்தென உள்ளங் கொள்ளல், நினைப்பாவது குழவிப்பருவத்தே தந்தை தாய் இழந்தோன் தான் அவர்களைக் கண்டுணராது பிறர் நினக்கு இன்னார் தந்தை தாய் என்று சொல்ல அதனைக் கருதிக்கோடல். இம்முறையானபோலிக் காட்சிகள் மேல்வரும் ஆற்றாலறிக. - (7)

Perception by feeling arises when the feelings of pleasure and pain are produced in accordance with the instinct of desire and hate guided by the law of *Kala*.

Perception by Yoga is the perception by the Yogi seated in one place of all things remote in place and time possible to him by his having destroyed all *mala* by remrining in *Samadhi*.

முறையானே தன்பொருட்டனுமானம் பிறர்பொருட்டனுமானம் என்னும் இவ் விருவகை அனுமானமும் உணர்த்துகின்றது.

**பக்கமூன்றின் மூன்றேதுவுடைய பொருளைப் பார்த்துணரத்**
**தக்கஞானந் தன்பொருட்டாம் பிறர் பொருட்டா மனுமானம்**
**தொக்கவிவற்றாற் பிறர்தெளியச் சொல்லலாகுமச்சொல்லும்**
**மிக்கவன்னு வயத்தினோவெதிரேகச் சொலெனவிரண்டாம்.**

(இ-ள்.) பக்கமூன்றின் - பட்சம் சபட்சம் விபட்சம் என்னும் மூன்றிடத்தினும்,

மூன்று ஏது உடைய பொருளை - இயல்பேது காரியவேது அனுபலத்தியேது என்னும் மூன்று ஏதுவை உடைய பொருள்களை,

பார்த்து உணரத் தக்கஞானம் தன்பொருட்டு ஆம் - கண்டறியத்தக்க அறிவு தன்பொருட்டனுமானமாம்,

பிறர்பொருட்டு ஆம் அனுமானம் - பிறர்பொருட்டாகிய அனுமானமாவது,

தொக்க இவற்றால் - செறிந்த காரிய ஏது முதலான ஏதுக்களை கொண்டு தான் கண்டதை.

பிறர்தெளியச் சொல்லல் ஆகும் - பிறர் மனந்தெளிய உரைத்தலே பிறர்பொருட்டனுமானமாம்,

அச்சொல்லும் மிக்க அன்னு வயத்தினொடு - அப்படிச் சொல்லுஞ் சொல்லும் மிகுந்த ஒற்றுமைப்பட்ட அன்னுவயப் பொருத்தம் உடையதனோடு,

வெதிரேகச் சொல்என இரண்டுஆம் - வேற்றுமைப்பட்ட சொல்லென இரண்டாம் எ-று.

வெதிரேகம் - பொருந்தாதது. (8)

*Paksham* (Propositions) are of three kinds, Paksham (conclusion), Sapaksham (analogy), Vipaksham (negative proposi tion).

There are three kinds of Hetu (இயல்பு, காரியம், அநுபலத்தி). Inference is drawn out of the invariable concomitants flowing from these Paksham and Hetu. And the inference is of two kinds, Inference for oneself and inference for others, Inference for others is for explaining the proof to others. And this latter is divided into Anvya, Anumana and Vyatreka Anumana. (8)

முறையானே பட்சங்களும் அவற்றின் பகுதிகளும் உணர்த்துகின்றது: -

**மூன்றுபக்கம் பக்கநிகர் பக்கநிகரில் பக்கமெனத்,**
**தோன்றும்பக்கந் துணிபொருளுக் கிடமாமுவமை நிகர்பக்கம்,**
**ஆன்றபொருள்சென் றடையாத விடமாநிகரில் பக்கமுதல்,**
**ஏன்றவி ரண்டும் பொருளுண்மைக் கிடமாமொன்று பொருளின்றாம்**

(இ-ள்) பக்கம் மூன்று - முன்சொல்லிய பட்சமூன்றும்,

பக்கம் நிகர் பக்கம் நிகரில்பக்கம் எனத்தோன்றும் - பட்சமென்றும் ஒத்தபட்சமென்றும் ஒவ்வாதபட்சமென்றும் தோன்றுதலாகும், அவை தாம் பட்சம் சபட்சம் விபட்சம் என்றும் ஆம்.

பக்கம் துணிபொருளுக்கு இடம் ஆம் - அவற்றுள் பட்சமாவது தான் அவ்வேதுக்களாலே துணியும் பொருளுக்கு இடமாயிருக்கும், அதாவது. காரியங்கொண்டு காரணம் உண்டென்று கருதும் இடம்; அது இம்மலையிற் புகையினால் அனலுண்டு என்கை.

நிகர் பக்கம் உவமை - சபட்சமாவது ஒன்றை உவமித்துக்காட்டும் இடமாம், அதாவது ... அடுக்களை போல என்கை.

நிகர் இல் பக்கம் ஆன்றபொருள் சென்று அடையாத இடம் ஆம் - விபட்சமாவது அவ்வேதுக்களால் தான் உண்டென்று துணிந்த பொருள்கள் சென்று பொருந்தாத இடமாம், அல்லது சாத்தியமாகிய பொருள் சென்றடையாத இடம் என்றும் ஆம். அது தாமரை மடுப்போல என்கை.

முதல் என்ற இரண்டும் பொருள் உண்மைக்கு இடம்ஆம் - முதற்கட் பொருந்துமென்று குறிக்கப்பட்ட பட்ச சபட்சம் இரண்டும் தான் கருதிய பொருளுண்மைக்கு இடமாம், அல்லது சாத்தியமான பொருளுண்மைக்கு இடமென்றும் ஆம்.

ஒன்று பொருள் இன்று ஆம் - விபட்சமாகிய ஒன்று கருதிய பொருளைச் சாதிப்பதற்கு இடம் அன்றாம் (அல்லது சாத்தியமாகிய பெருளைச் சாதிப்பதற்கு இடம் அன்றாம் என்றும் ஆம்.) எ-று. (9)

The three Pakshams are - Paksham, Sapaksham and Vipaksham. Paksham is the statement comprising the conclusion or Inference. Sapaksham is statement of similar instances. Vipaksham is the negative statement where the thing proved and the antecedent are absent. The first two give the proof by the method of agreement and the last by the method of difference.

முறையானே ஏதுக்களின் பகுதியும், அவை இவை என்பதும் உணர்த்துகின்றது: -

**ஏது மூன்றாமியல்பு காரியத்தோ டனுபலத்தியென**
**ஓதினியல்பு மரமரத்தைக் காட்டலுறு காரியம்புகை தன்**
**ஆதியானவனல் காட்டலாகு மனுபலத்தியது**
**சீதமின்மை பனியின்மை காட்டல்போலும் செப்பிடினே.**

(இ-ள்.) ஏது மூன்று இயல்பு காரியத்தோடு அனுபலத்தி என ஆம் - மேற்சொல்லிய மூன்றேதுவும் இயல்பேது என்றும் காரியாது என்றும் அனுபலத்தி எது என்றும் ஆம்,

ஓதின் - (அவ்வேதுக்களின் இலக்கணத்தை) முறைமையாகச்சொல்லின்,

இயல்பு மரமரத்தைக் காட்டல் - இயல்பேதுவாவது மரமென்பது மரத்தைக்காட்டி நிற்றல், அதாவது பொருள் உண்மை சுட்டலாம்; அது ஒன்றுண்டென்று சுட்டப்படுதல்; அது பதி பசு பாசம் உண்டென்று சுட்டப்படுதலாம்.

உறு காரியம் புகைதன் ஆதி ஆன அனல்காட்டல் ஆகும் - பொருந்திய காரிய ஏதுவாவது புகை தனக்குக் காரணமாகிய நெருப்பைக் காட்டுவதாம், என்றது பிரவஞ்சம் காரியமா யிருத்தலால், அக்காரியம் செய்வோன் இன்றி இல்லை ஆதலால், அது செய்வோனைக் காட்டலாம்.

அனுபலத்தியது சீதம் இன்மை பனிஇன்மை காட்டல் போலும்– அனுபலத்தி எதுவாவது, குளிரில்லாமை பனிஇல்லாமையைக் காட்டுதல்போலுமாம்,

செப்பிடின் - சொல்லுமிடத்து எ-று.

என்பது காரணம் இல்லையாயின் காரியமும் இல்லை என்பதாம் எனவே, கர்த்தாவாகிய காரணம் இல்லை பாயின் பிரவஞ்சமாகியப காரியமும் இல்லை, ஆன்மா இல்லையாயின் தேகமும் இல்லை, மாயை இல்லையாயின் பிரவஞ்சமும் இல்லை என்பதாம். அல்லது மண் இல்லையாமின் கடம் இல்லை என்பதாம்.

Hetu or Reason is of three kinds, Reasoning from natural relation (co-existence & equality), Reasoning from causal relation (succession) and Reasoning by means of contraries (Inequality). As for instance, we exhibit the first kind of reasoning when we infer the meaning of 'மா'" in the sentences "மா பூத்தது" "மா ஏறினான்". The second, when we infer fire from the presence of smoke; the third, when we infer the absence of dew from the absence of cold. (10)

முறையானே முன் சொன்ன அன்னுவயச் சொல்லும் வெதிரேகச்சொல்லும், இவை என உணர்த்துகின்றது: -

**புகையா லனலுண் டடுக்களைபோ லென்னப் புகற லன்வையம்,**
**வகையா மனலில்லாவிடத்துப் புகையின்றாகு மலரினொடு,**
**முகையார் நீரிற் போலென்று மொழிதல் வெதிரேகச் சொலிவை,**
**தொகையா லுறுப்பைந் தொடுங் கூடச் சொல்லுவாரு முளர் துணிந்தே.**

(இ-ள்.) புகையால் அனல் உண்டு - புகை உண்டாதலால் மலையிடத்து நெருப்புண்டு, இது பிரதிஞ்ஞை. பிரதிஞ்ஞை எனினும் பட்சமெனினும் ஒக்கும். அதென்போல என்னில்,

அடுக்களைபோல் - மடைப்பள்ளியில் புகையும் அனலுங்கூடக்ககாணுந் தன்மைபோல, இது திட்டாந்தம். திட்டாந்த மெனினும் சபட்சமெனினும் ஒத்த பட்சமெனினும் ஒக்கும்,

என்னப்புகறல் அன்னுவயம் - என் றிப்படிச்சொல்லுவது ஒற்றுமைப்பாட்டை உடைய அன்னுவயச்சொல்லாம்,

வகை ஆம் அனல் இல்லா இடத்துப்புகை இன்று ஆகும் - கூறுபடுத்துவதாகிய நெருப்பில்லாத இடத்துப் புகை இல்லையாம், அதென்போல என்னில்,

மலரினொடு முகை ஆர் நீரிற்போல் - மலரினுடனே முகை நிறைந்த நீரில் அனலும் புகையும் இல்லை ஆனாற்போல, அரும்பு - முகை. இது பொருளினது உசிதமொழியாய் வேறு திட்டாந்தத்துக்குக் காரியஏது ஆகலாம்.

என்று மொழிதல் வெதிரேகச்சொல் - என்று கூறுதல் வேற்றுமைப் பாட்டையுடைய வெதிரேகச்சொல்லாம், வெதிரேகமெனினும் விபட்சமெனினும், ஒவ்வா தபட்சமெனினும், மீட்சிமொழியெனினும் ஒழிபெனினும் ஒக்கும்.

இவை தொகையால் உறுப்புஐந் தொடும் கூட - இப்படிச் சொல்லப்பட்டவை தொகையினால் ஐந்தவயவத்தோடுங்கூட, ஐந்த வயவமாவன பட்சம், எது, திட்டாந்தம், உபநயம், நிகமனம் என்பனவாம்.

துணிந்து சொல்லுவாரும் உளர் - தெளிந்து சொல்லுவாரு முண்டு எ-று, ஏ- அசை

முதற்கூறிய அனுமானத்தின் இலக்கணம், கேவல அன்னுவய அனுமானமென்றும், கேவல வெதிசேக அனுமானமென்றும், இரண்டாம், அவை வருமாறு: --

கேவல அன்னுவய அனுமானத்தின் இயல்பு பட்சம், ஏது, திட்டாந்தம், உபநடம், நிகமனம் என ஐந்தாம். அவற்றில் பட்சமாவது மலை நெருப்புடைத்தென்றது, ஏதுவாவது காணாதநெருப்பை மலை உடைத்து என்றது என்னை யெனவினாயவழி, காரணமாகிய நெருப்பினது காரியமாகிய புகை

அவ்விடத்தில் தோன்றுதலால் என்பது, அதற்குப் பொருந்திய திட்டாந்தமாவது என்னெனின், புகை உள்ள வீடத்தே நெருப்புண்டாம், அடுக்களை போல வெனச்செப்புதல், உபநயமாவது மேற்கூறிய எதுவைப் பட்சத்தே வருவித்தல், அது மலை புகை உடைத்தென்றல், நிகமனமாவது மேற்கூறிய பட்சத்திடத்துப் புகையுடைத்தாதலால் நெருப்புடைத்தெனக்கூட்டுதல், இது அந்த ஏதுவை வலி உறுத்தலாம். உபநயமும் நிகமனமும் முன் சொன்ன மூன்றினுள் அடங்கும். ஆதலால், முற்கூறிய மூன்றுஞ் சிறப்புடையவாம். இவை முன்விரித்த முறையே பதிபசுபாச மூன்றினுக்கும் வருமாறு உணர்க.

கேவல வெதிரேக அனுமானம் இது முற்கூறிய அன்னுவயத்தைப் பின்னும் வலியுறுத்தலாம். –

நெருப்பை உடையதல்லாத யாதோ ரிடத்தும் புகையில்லை. அதென்போல என்னின், புனலில்லாதவிடத்துத் தாமரை இல்லையா னாற்போல என்றல் வெதிரேகமாம். இனிப்பிரவஞ்சம் பொய்யென்றல் தன்னுடையபட்சம். அஃது எதனாலெனின், பண்ணப்படுதலாலென்பது. பட்சத்தின் கண்ணே உள்ளதாகிய ஓரியல்பாகிய ஏது யாதொரு பொருள் ஒருவனாற் செய்யப்பட்டதோ அது அநித்தியம். அதென்போல என்னின், குலாலன் செய்த கடம்போல என்றல். காரிய எதுவாகிய சபட்சமாம். யாதொன்று பண்ணப்படாததோ அது அநித்தியம் அன்று. அதென்போல என்னின், பதிபசுபாசம்போல என்றல். இது விபட்சமாம். (11)

Anvaya Anumana comprises the argument with Pratigna, Hetu and Instance as in the form: Fire is in the mountain (Pratigna). Because smoke is rising from the mountain. (Hetu). Because fire and smoke is both present in oven. (Instance).

Vyathireki argument is of this forn: There is no fire in the mountain, because there is no smoke arising from the mountain. For instance, there can be no lotns flowers. There is neither smoke nor fire in the deep tank filled with lotus flowers. Nyayikas and Saipay clearly state the argument with five propositions inclnding *Nigam* and *Upnanaya*.

(11)

இனி இவ்வனுமானம் பூருவக்காட்சி அனுமானமென்றும், அனுமான அனுமானமென்றும், ஆகம அனுமானமென்றும், மூன்றுவகைப்படு மென்பது உணர்த்துகின்றது: -

**போது நாற்றத்தா லறிதல் பூர்வக் காட்சியனுமானம்**
**ஓது முரையா லறிவினள வுணர்தல் கருதலனுமானம்**
**நீதியான்முற் செய்கன்ம நிகழ்வ திப்போ திச்செய்தி**
**ஆதியாக வரும் பயனென் றறித லுரையா லனுமானம்.**

(இ-ள்.) போது நாற்றத்தால் அறிதல்-- ஒரு பூவைக்காணாதிருக்க அதனது மணத்தாலே இன்ன பூவென்று அறிவது,

பூர்வக்காட்சி அனுமானம் - பண்டு கண்டுணர்ந்த அனுமானமாம்.

ஓதும் உரையால் அறிவின் அளவு உணர்தல் - ஒருவன் சொல்லும் வசனத்தால் அவனுடைய அறிவின் எல்லையை அறிவது,

கருதல் அனுமானம் - கருதலனுமானமாம்,

நீதியால் நிகழ்வது முன்செய்கன்மம் - இச்செனனத்தில் இவ்விடத்துப் பிறழ்வற நிகழ்வதாய கன்மபலன்கட்கு முன்பு செய்த கன்மம் இன்னதென்றும்,

இப்போது இச்செய்தி ஆதி ஆகவரும் பயன் என்று - இப்பொழுது செய்கின்ற இச்செய்கை ஆதியாக மறுமைக்குவரும் பயன் இவையென்றும்,

உரையால் அறிதல் அனுமானம் - சாத்திரத்தாலறிவது ஆகம அனுமானமாம் எ-று (12)

Purvadarsana Anumana is where we infer a particular flower from a particular smell, from our past knowledge of its connection. Vasanalinga Anumana is where we infer the amount of a man's learning by the words he utters; Agama Anumana is when we infer a man's past Karma from his present experience of pleasure and pain.

மேல்நிறுத்திய முறையானே சாத்திரத்தின் பகுதி மூன்றும் உணர்த்துகின்றது. -

**அனாதியே யமலனாய வறிவனூ லாகமந்தான்**
**பினாதிமா றின்றிப் பேண றந்திர மந்திரங்கள்**
**மனாதிகளடக்கித் தெய்வம் வழிபடும் வாய்மையாகும்**
**தனாதியீறிலாதான் றன்மை யுணர்த்துத லுபதேசந் தான்.**

(இ-ள்.) அனாதியே அமலன் ஆய அறிவன் நூல் ஆகமம் - எக்காலத்தினும் நின்மலனாகிய சர்வஞ்ஞன் அருளிச்செய்த நூலாகிய ஆகமங்களை,

பின் ஆதிமாறு இன்றிப் பேணல் தந்திரம் - முன்னொடுபின் மலைவில்லாமல் விரும்பிக்கற்றறிவது தந்திரகலையாம்,

மந்திரங்கள் மனாதிகள் அடக்கி- மந்திரமாவன மனமுதலாகிய கருவிகளை அடக்கி,

தெய்வம் வழிபடும் வாய்மை ஆகும்- தான் வழிபடுந்தெய்வத்தை வணங்கி உச்சரித்தலாம்,

தன் ஆதி ஈறு இலாதான் தன்மை - தனக்கு முதலு முடிவும்இல்லாத கர்த்தாவினுடைய உண்மையை,

உணர்த்துதல் உபதேசம் - அறிவிப்பது உபதேசகலையாம் எ-று தான் - அசை.

Agama is the word of The Perfect Eternal Being. Of this Agama, the Tantra portion treats of the rituals ascertained without defects and inconsistency and required for salvation; the Mantra portion treats of Upasana required for controlling the senses and contemplation of God; the Gnana Kanda treats of the nature of the Supreme, Beginningless and Endless.

இனி அனுமானப்போலியினது வகையும் தொகையும் உணர்த்துகின்றது:

**ஈண்டு பக்கப் போலி நான் கேதுப் போலியோரு மூன்றாம்,**
**வேண்டு மெழு மூன்றாக விளங்குவமைப் போலியீ ரொன்பான்,**
**காண்டுந் தோல் வித்தான மிரண்டிருபத்திரண்டாங் கருதினிவை,**
**ஆண்டு மொழி வரவையெல்லா மளக்கினறு பத்தைந் தாமே.**

(இ-ள்.) ஈண்டுபக்கப் போலிநான்கு-இவ்விடத்துப் பட்சப்பேலி நான்காம், போலியென்றது வடமொழியில் ஆபாசமென்பதாம்.

ஏதுப் போலி ஒரு மூன்று ஆய்- எதுப் போலியாவது வகையால் ஒரு மூன்றாய்,

எழுமூன்று ஆகவேண்டும் - விரியால் இருபத்தொன்றாக வேண்டப்படும், இவ்விருபத்தொன்றும் மேற்கூறிய நான்குடன் கூட்ட இருபத்தைந்தாம்.

விளங்கு உவமைப்போலி ஈரொன்பான் - விளங்குகின்ற திட்டாந்தப் போலிபதினெட்டாம், இது சபட்சப்போலியாம். இப்பதினெட்டும் மேற்கூறிய இருபத் தைந் துடன்கூட்ட நாற்பத்து மூன்றாம்.

காண்டும் தோல்வித்தானம் இரண்டு இருபத்து இரண்டு ஆம் - விபட்சத்தானப்போலிவகையால் இரண்டும் விரியால் இருபத்திரண்டுமாகக் காண்போம்,

கருதின் இவை ஆண்டு மொழிவர் - விசாரிக்கின் இவையெல்லாம் அந்தந்த இடங்களிலே சொல்லா நிற்பர், ஆண்டுமொழிவரென்றது பட்சம், ஏது, திட்டாந்தம், வெதிரேகமென்னும் நான்கிடத்தினு மொழிவரென்றதாம்,

அவை எல்லாம் அளக்கின் அறுபத்தைந்து ஆகும் - அவை எல்லாம் தொகைகூட்டின் அறுபத்தைந்தாம் எ-று.

இவ்விருபத்திரண்டும் மேற்கூறிய நாற்பத்து மூன்றுடன் கூட்ட ஆக அறுபத்தைந்தாம். (14)

"Inferential Fallacies are four in nurnber; Fallacies in reasoning (Hetu) are three; these divide again into 21; Fallacies in agreement or analogy are 18; Fallacies of Nigrahaathan are divided into two and sub-divided into 22; there are 6 other sub-divisions again. On the whole, the Fallacies are 65 in number.,

***அளவை முற்றிற்று.***

---

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# சிவஞான போதம்

## மூலமும் உரையும்.

### பாயிரம்.

வேதாகமங்களை உணர்ந்த ஞானாசாரியனிடத்து மலபரிபாகமுள்ள சீடன் வழிபட்டுப் பிரச்சினை பண்ணி ஆத்துமலாபம் பெறும் பொருட்டுக் கேட்பது: -

சகம் அனாதியோ ஆதியோ? அன்றிச் சுவாபாவிகமோ ஏதுவுள்ளதோ? அவையாவன, இயற்கையாயுள்ளதோ செயற்கையாயுள்ளதோ என்றாம். ஏதுவானது - காலகன்மாதிமாத்திரமோ சேதன எதுவோ? சேதனன் தான் சம்சாரியோ, தத்தற்கற்பாந்தமுத்தனோ, அனாதி முத்தனோ? அவன் தனக்கு லட்சணம் ஏது? அந்தக்கர்த்தா உண்டென்கிறதிலே பிரமாணங்கள் உண்டோ? அந்தப் பிரமாணத்தில் பிரத்தியட்ச அனுமான உவமானங்கள் பிரதானமோ, ஆகமம் பிரதானமோ? ஆகமம் சித்தித்துள்ளளவில் சகத்து நிரூபாதானமோ, சுவாபாதானமோ, சூனியோபாதானமோ, பரமாணுபாதானமோ, கேவல பிமோபாதானமோ, கேவல மாயோபாதானமோ, ஈசுர சத்திய திட்டிதமா யோபாதானமோ? சகத்துற்பத்தி சங்காதரூபமேர், ஆரம்பரூபமோ, விவர்த் தரூபமோ, காரணகமுகரூபமோ, பரிணாமரூபமோ, வீருத்திரூபமோ? கருத்தா சகத்தைச் சிருட்டிபண்ணுமிடத்துக் கரணநிரபேட்சையோ, கரணசாபேட்சையோ? காணந்தான் தேக வியாபாரமோ, இந்திரிய சமுகமோ, அந்தக்கரண வியாபாரமோ, விந்து வியாபாரமோ, சத்தி வியாபாரமோ? சத்தியாயின் அச்சத்தி ஈசுரனுக்குச் சையோகையோ, சமவேதையோ, சடரூபையோ, சித்துரூபையோ? ஈசுரனுக்குப் பின்னலட்சண லட்சியமான சீவன் சூனியமோ, தேகமோ, இந்திரிய சமுகமோ, அந்தக்கரண வர்க்கமோ, விஞ்ஞானமோ, இவைகளுக் கன்னியமோ? அன்னியமாயின் சடமோ, சித்தோ? அது கர்த்தாவோ, அகர்த்தாவோ, அணுவோ, மத்திமபரிமாணமோ, ஏகதேசியோ, விபுவோ? அவ்வான்மா ஏகனோ, அநேகனோ, கிஞ்சிஞ்ஞனோ, சருவஞ்ஞனோ? அவனுக்கு விரோதியானது கேவல பஞ்சாவத்தை தோஷமோ, அவித்தியாஞானமோ, அநிருவசனாவித்தையோ, ஆணவமலமோ? அந்த ஆணவமலம் பிரதிபுருடபின்னமோ, சர்வசீவசாதாரணமோ, விசித்திரசத்தி யில்லாததோ, விசித்திரசத்தி உடையதோ? ஆன்மா எக்காலமும் மலபந்தனா யிருப்பனோ, முத்திதசை அடைவனோ? என்று விண்ணப்பஞ்செய்த மாணாக்கற்கு ஞானாசாரியர்திரிபதார்த்தத்தின் உண்மையை

அனுக்கிரகஞ் செய்ய, ஆகமம் இருபத்தெட்டில் ரௌரவாகமத்தில் பாசவிமோசன படலத்தில் சிவபெருமான் அருளிச்செய்த துவாதச சூத்திரத்தையும் தமிழில் மெய்கண்ட தேவர் மொழி பெயர்த்தருளிய சிவஞானபோத மூலமும் உரையும் வருமாறு.

## சிறப்புப்பாயிரம்.

**மலர்தலை யுலகின் மாயிரு டுமியப்**
**பலர்புகழ் ஞாயிறு படரினல் லதைக்**
**காண்டல் செல்லாக் கண்போ லீண்டிய**
**பெரும்பெயர்க் கடவுளிற் கண்டுகண் ணிருடீர்ந்**
**தருந்துயர்க் குரம்பைபி னான் மா நாடி**
**மயர் வற நந்தி முனிகணத் தளித்த**
**உயர்சிவ ஞான போத முரைத்தோன்**
**பெண்ணைப் புனல்சூழ் வெண்ணெய்ச் சுவேதவனன்**
**பொய்கண் டகன்ற மெய்கண்ட தேவன்**
**பவநனி வன்பகை கடந்த**
**தவரடி புனைந்த தலைமை யோனே.**

(இ-ள்). மலர் தலை உலகில் - விரிந்த இடத்தை உடைய உலகின் கண்ணே, எனவே ஒன்றின் ஒன்று தோன்றி வருதலையுடைய பஞ்சபூதக் கூட்டுரவு என்றதாம்.

மா இருள் துமிய - பெரிய இருள் நீங்க, எனவே பூத இருளாகிய புத்து இருள் நீங்க என்றதாம்.

பலர்புகழ் ஞாயிறு-பல சமயத்தாராலும் புகழப்பட்ட சூரியன் எனவே அவ்வவர் கண்ணிருளை நீக்கி நிலநீர் முதலாகிய எல்லாப்பொருளையுங் காட்டுதலினாலே புகழ்ச்சி கூறினார் என்பதாம்.

படரின் அல்லதைக் காண்டல் செல்லாக் கண்போல் - வரின் அல்லது காட்சியை உடைத்தாகாதகண்போல, எனவே கதிர்ஒளி இல்லையேல் கண்ணொளியும் இல்லையாய் விழி குருடாம் ஆகலான், அவ்வொளியின் சகாயங்கொண்டு அறிவதுபோல என்றதாம்

ஈண்டிய பெரும் பெயர்க் கடவுளின் - எங்கும் தாமாகி நிறைந்த பெரிய பெயரை உடைய கர்த்தாவாலே, எனவே எல்லாப் பொருளேயுங்கடந்து அப்பாலாய் நிற்றலாற்பெரும் பெயர்க் கடவுள் எனவிசேடணம் கூறினார் என்பதாம்.

கண்டு - அவருடைய சொரூப சுபாவங்களைக் கண்டு, எனவே பதி சத்தி சாலங்களினாலே பஞ்சகிருத்தியமும் அவற்றினாலே ஆன்மாக்கள் தொழிற் பட்டுவருகிற முறைமையும் ஆகிய இவை முதலானவைகளைக் கண்டு என்றதாம்.

கண் இருள் தீர்ந்து - கண்போன்ற ஆன்மா தன்னுடைய பாச இருள் நீங்கி, எனவே மல மாயா கன்மங்களாகிய மும்மலங்களையும் நீங்கி என்றதாம்.

அருந்துயர்க் குரம்பையின் - அரிய துயரத்திற்கு இடமாகிய உடம்பாங் குடிலில்,

ஆன்மா நாடி-ஆன்மாவையும் ஆராய்ந்து கண்டு, எனவே பதி பசு பாசங்களை உணர்ந்து என்றதாம்.

மயர்வு அற - (பின்னோடு முன்மலையாமல்) மயக்கம் அற, எனவே தான் செய்யும் இந்நூலில் அதிவியாப்தி அவ்வியாப்தி அசம்பவம் என்ற தோஷம் வராமல் என்றதாம்.

நந்தி முனி கணத்து அளித்த - நந்திகேசுரர் இருடிகணங்களுக்கு உத்தேசித்த, எனவே பரமேசுரன் நந்திக்கு உபதேசிக்க நந்தி இருடிகணங்களில் சனற்குமார பகவானுக்கு உபதேசிக்க இவ்வாறு முறையே அளித்த என்றதாம்.

உயர்சிவ ஞானபோதம் உரைத்தோன் - உயர்ந்த சிவஞானபோதத்தைத் தமிழில் உரைத்தோர், எனவே ஆகமம் இருபத்தெட்டில் ரௌரவ ஆகமத்தில் பாசவிமோசன படலத்தில் கூறப்பட்ட பன்னிரண்டு சூத்திரமும் தமிழில் மொழிபெயர்த்து உரைத்தோர் என்றதாம்.

பெண்ணைப் புனல் சூழ - நீர் நிறைந்த பெண்ணை ஆறு சூழ்ந்த

வெண்ணெய்ச் சுவேதவனன் - திருவெண்ணெய் நல்லூரில் வீற்றிருந்த சுவேதவனப்பெருமாள் என்னும் பிள்ளைத் திருநாமத்தை உடையவர்,

பொய்கண்டு அகன்ற மெய்கண்ட தேவன் - அசத்தை அசத்தென்று கண்டு நீங்கிச் சத்தைத் தெரிசிக்கையினாலே மெய்கண்டதேவர் என்னும் சிறப்புப்பெயரை உடையவர்,

பவநனி வன்பகை கடந்த - பிறவியாகிய பெரிய வலிய பசையை வென்ற,

தவர் அடி புனைந்த தலைமை யோனே - பெரியோர்களுடைய சீபாதங்களைச் சூடின மேம்பாட்டை உடையவராம் எ-று.

“He who translated and commented on Sivagnana Botham, whose knowledge was imparted by Nandi and his disciples, for the purpose of obtaining Salvation, by pointing out the way to proceed froin the knowledge of the body full of sorrow, to the knowledge of the soul, and thenca to the knowledge of the Supreme Spirit, enshrined in the Maha

Vakya, just as the glorious sun, enables our sight by dispelling the deep darkness from the vast surface of this earth;

"He, who under the name of Swathavana lived in Thiruvennainallur, surrounded by the waters of the Pennar;

"He, who left all false knowledge knowing it to be such and was therefore called Meikanda Deva;

"He is the Lord whose feet form the flower worn on the beads of even the holiest sages."

நிராதாரனாய், நிர்க்குணனாய், நிருவிகாரியாயுள்ள தம்பிரானார் தமது ஞானமாகிய சத்தி சம்பந்தராகி அந்த ஞானசத்தியினின்றும் இச்சை, கிரியை என்னும் இருவரை ஈன்றருளிப் பின்பு தாம் இச்சாஞான கிரியா சொரூபராயினார். அந்தப்பிரானுடைய சொரூபமாகிய கிரியா வடிவராகிய விநாயகரது துதி கூறுகின்றது: -

## விநாயகர் வணக்கம்.

**கல்லா னிழன்மலை வில்லா ரருளிய**
**பொல்லா ரிணையடி நல்லார் புனைவரே.**

(இ-ள்.) கல் ஆல் நிழல் - கல்லாலி னுடைய நிழலிலே எழுந்தரும் ளியிருந்தவர், எனவே தம்மை வழிபட்டவர்களுக்கு அனுக்கிரகிப்பர் என்பதாம்.

மலைவில்லார் -- மேருவாகிய மலையை வில்லாகவளைத்தவர், எனவே தம்மை வழிபடாதவர்களை நிக்கிரகிப்பர் என்பதாம். ஆர் என்னும் விகுதியை நிழல் என்பதனோடுங் கூட்டுக.

அருளிய பொல்லார் - அவர் அருளிய பொல்லாப் பிள்ளையார் எனவே பாச விக்கினங்களைப்போக்கும் விக்கினேசுர ராதலினாலே அந்தப் பாசத்துக்குப் பொல்லார் என்பதாம்.

இணை அடி - அவருடைய இரண்டு சீர்பாத கமலங்களையும், எனவே பின்னர்ப் புனைகுவர் என்பது கொண்டு ஈண்டு ரூபகவலங்காரங் கூறியதாயிற்று.

நல்லார் புனைவர் - பதி பசு பாசங்களை உணர்ந்த ஞானிகள் சூடுவர்கள். எ-று.

எனவே யாமும் அது செய்வோம் என்பதாயிற்று. ஏ-அசைநிலை

The Good will crown their heads with the two Feet of *Ganesha* who was begotton by the Great Teacher, who sat under the Sacred Mountain Banyan tree and removed the doubts of the Great *Nandi*.

## அவையடக்கம்.

**தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்**
**எம்மை யுடைமை யெமை யிகழார் - தம்மை**
**உணரா ருணரா ருடங்கியைந்து தம்மில்**
**புணராமை கேளாம் புறன்.**

(இ-ள்.) தம்மை உணர்ந்து - தம்மைத் தம்முடைய தேகத்துக்கு அன்னியம் என்று அறிந்து, எனவே ஆத்தும தரிசனம் செய்தென்றதாம். ஆத்தும தரிசனம் பண்ணுவது பாசதரிசனம் பண்ணினபின்பு ஆதலாற் பாச தரிசனமுங் கூறினாராயிற்று.

தமையுடைய தன்னுணர்வார் - தம்மை அடிமையாக வுடைய சிவபெருமானையும் அறிவார், எனவே சிவதரிசனஞ் செய்தவர் என்றதாம். இதனாலும், மேற்கூறிய அதனாலும் பதி பசு பாசங்களை உணர்ந்தவர் என்றாயிற்று.

எம்மை உடைமை எமை இகழார் - அவர்கள் எம்மை அடிமையாக உடைமையால் எம்மாற் சொல்லப்படும் நூலை இகழ்ந்து குற்றஞ்சொல்லார், எனவே வேதாகமங்களை யுணர்ந்த ஞானிகள் இந்நூற்குக் குற்றமுண்டாயினும் அக்குற்றமொழித்துக் கொள்வரென்பதாயிற்று.

தம்மை உணரார் உண்ரார் - அவ்வாறு தம்மை அறியாதவர்கள் தாம் பாசபந்தராய் நிற்கின்ற முறைமையும் அந்தப்பாசம் நீங்கச்சிவனுணர்த்து முறைமையும் அறியார்,

உடங்கு இயைந்து -- இவர் கூடிப் பொருந்தி,

தம்மில் உணராமை - தம்மில் முரணுவர் ஆகையால், எனவே உலக நூல்களை உணர்ந்தோர்க்கு இப்பொருள் தெரியாமையினால் இவர் கருத்திற்கு ஏலாமையாயிற்று என்பதாம்.

கேளாம்புறன் - இவர்கள் புறங்கூறும் கூற்றினை நாம் கேளோம் எ-று.

எனவே இவர்கள் சொல்லும் குற்றம் குற்றமன்று என்பதாம் (1)

Those who know their Lord from the knowledge of themselves (their true nature), will not revile, me and my work, as I am their own slave. Those who do not know themselves cannot know their Lord, and of course cannot agree among themselves. Their abuse I hear not.

**பாயிரம் முற்றிற்று.**

# நூல்.

சங்கார காரணனாய் உள்ள முதலையே முதலாக உடைத்து இவ் உலகமென்பது உணர்த்துதனுதலிற்று: -

## முதற் சூத்திரம்.

**அவன் அவள் அதுவெனும் அவை மூவினைமையின்**
**தோற்றிய திதியே ஒடுங்கி மலத்து உளதாம்**
**அந்தம் ஆதி என்மனார் புலவர்.**

(இ-ள்) அவன் அவள் அது எனும் அவை - அவனென்றும், அவெளென்றும் சுட்டப்பட்ட உயர் திணையும், அதுவென்று சுட்டப்பட்ட அஃறிணையும் ஆகிய பிரவஞ்சத்தொகை,

மூவினைமையின் -- சிருட்டி திதி சங்காரமாகிய மூன்று தொழிலை உடைமையால்,

தோற்றிய திதியே ஒடுங்கி - தனக்குக் காரணமாகிய மாயையின் கண்ணே தோற்றப்பட்டு நின்ற முறைமையே ஒடுங்கி,

மலத்து உளது ஆம் - மீளவும் சகசமலத்தால் உண்டாம்,

அந்தம் ஆதி என்மனார் புலவர் - அதற்குக் கர்த்தா அந்தத்தினுள்ளார் என்று சொல்லுவார்கள் வேதாகமங்களை உணர்ந்த ஞானிகள் எ-று.

எனவே பிரவஞ்சந்தானே தொழிற்படாதென்பது ஆயிற்று.

**(இதன்விரிவு.)**

பிரவஞ்சம் ஒருவன் ஒருத்தி ஒன்று என்று மூன்று பேதப்பட்டு முத் தொழிற்பட்டு வருதலானும், பின்னும் மலம் எதுவாக ஒடுங்கின முறைமையின்படி காரணங்களிலே நின்றும் உண்டாகலானும், புழு வேட்டுவனானாற்போலவும், மயிர்க்குட்டிவண்டானாற்போலவும், ஆன்மாக்கள் கன்மத்துக்கு ஈடாகத்தேகங்கள் கொண்டு மாறிப்பிறப்பதும் இறப்பதுமாய் வருகையானும், சரிப்பில்லாத மாயை சடமாகையால் தானே வடிவாகமாட்டா தாகையானும், ஆன்மாக்கள் மலசகிதரா கையாலே தாமே ஓர் உடம்பை எடுத்தற்கு அறிவில்லாமையானும், இந்த ஆன்மாக்கள் கன்மத்துக்கு ஈடாகப் பொருந்தின ஒரு தொழிலைச் செய்து ஓர் உடம்பிலே நிற்கை உண்டாகையானும், இந்த எதுக்களெல்லாவற்றானும் விகாரமற நின்ற நின்மலராகிய சிவபெருமான் எல்லாவற்றையும் இயற்றுவர் என்று சாதித்ததாம்.

1st Sutra. As the (seen) universe spoken of as he, she and it undergoes three changes (origin, deveiopment and decay), this must be an entity created (by an efficient cause.) This entity owing to its conjunction with *Anava Mala* has to emanate from *Hara* to whom it returns during *Samharam*. Hence, the learned say that *Hara* is the First cause.

“அவனவ ளதுவெனு மவைமூ வினைமையின்" என்பதற்குப் பிரமாணங் கூறுகின்றது. பிரவஞ்சம் நித்தியம் என்றும், தோற்றமும் ஈறும் சுபாவம் என்றும் சார்பிற்றோன்றும் என்றும் சொல்வார்க்கு, அது அப்படி அன்று ஒரு கர்த்தாவை உடைத்து என்கின்றது: -

**பூதாதி ஈறும் முதலும் துணையாகப்**
**பேதாய் திதி ஆகும் பெற்றிமையின் – ஓதாரோ**
**ஒன்று ஒன்றின் தோன்றி உளதாய் இறக்கண்டும்**
**அன்று என்றும் உண்டு என்ன ஆய்ந்து.** (1)

(இ-ள்.) பூதாதி - பிருதிவி முதல் நாதம் ஈறாயுள்ள பிரவஞ்சம் எனவே சுரர், நார், பசு, பட்சி, கிருமிகீடாதியும், விருட்சாதியும், பாஷாணாதியும் அடங்கின.

ஈறு முதலும் துணை ஆக - சங்காரமும் தோற்றமும் துணையாகக் கொண்டு, எனவே காரியமாகிய பிரவஞ்சத்தில் ஒடுக்கம் முந்தினதும், உற்பத்தி பிந்தினதும், திதி இடைக்கண்ண துமாகும் என்பதாம்.

பேதாய் திதி ஆகும் பெற்றிமையின் - அறிவில்லாதவனே அப்பிரவஞ்சம் திதிப்பட்டுநிற்கின்ற முறைமையாலே, எனவே உற்பத்தி திதிநாசங்களைப் பிரவஞ்சம் தானே உண்டாக்கிக்கொள்ளாது என்பதாம்.

ஓதாரோ - சங்காரமும் உற்பத்தியும் உண்டென்று சொல்லாரோ,

ஒன்று ஒன்றில்தோன்றி -- ஒரு பொருளிலே ஒரு பொருள் தோன்றி,

உளது ஆய் இறக்கண்டும் - திதிப்பட்டு நின்று அழிவதனைப் பிரத்தியட்சமாகக்கண்டு வருகையாலும்,

அன்று என்றும் - நீ சொல்லுகிறபடி சுபாவமும் சார்பும் அல்லவென்றும்,

உண்டு என்ன ஆய்ந்து - இப்பிரவஞ்சத்துக்கு ஒரு கர்த்தா உண்டு என்ன ஆராய்ந்து யாவருஞ் சொல்லார்களோ, (ஓதாரோ என்பதனை ஈண்டுங் கூட்டுக.)

The world, if it exists, is followed by destruction and reproduction. Having seen that particular species in nature have particular seasons of reproduction development, and decay, will not the wise argue that the world also undergoes periodical changes? - the seen universe is an entity & has'a KARTA as its First Cause. (1)

"தோற்றிய திதியே யொடுங்கி மலத்துளதாம்" என்பதற்குப் பிரமாணங் கூறுகின்றது: - இது இல்லதற்குத் தோற்றம் இன்மையின் உள்ளதற்குச் செய்வோர் இன்றிச் செய்வினை யின்மையின் ஒடுங்கின சங்காரத்தின் அல்லது உற்பத்தி இல்லையென்றது: -

**இலயித்த தன்னில் இலயித்ததாம் மலத்தால்லி**
**இலயித்தவாறு உளதா வேண்டும் - இலயித்தது**
**அத்திதியில் என்னின் அழியாது அவையழிவது**
**அத்திதியும் ஆதியுமாம் அங்கு.** (2)

(இ-ள்.) இலயித்த தன்னின் இலயித்தது ஆம் - ஒடுங்குதற்கு இடமாயிருக்கின்ற கர்த்தாவில் நின்றும் சங்கரிப்புண்ட பிரவஞ்சம் உண்டாம், எனவே ஒருவன் கற்ற சொல்லும் பொருளும் அவன் கருத்திலொடுங்கி வேண்டின இடத்திலே விரியும் ஆறுபோல்என்றதாம்

மலத்தால் இலயித்த ஆறு உளது ஆ வேண்டும் - மலத்தினாலே ஒடுங்கி மீளவும் ஒடுங்கின முறையே தோன்றுவதாக வேண்டும், எனவே கர்த்தாவினிடத்தே தோன்றாது மாயையிடத்தே தோன்றுமென மாயை உபாதானமாம் என்றதாம்.

இலயித்தது அத்திதியில் என்னின் - பிரவஞ்சம் சேரச் சங்காரப்படாது சிலநிற்கச் சில சங்காரப்படும் என்னின், எனவே அந்தச்சங்காரம் காணப்பட்ட பிரவஞ்சத்தில் தேகமுதலானவற்றைக் கொண்டு க்ஷனின தென்றதாம்.

அழியாதவை அழிவது - மகாசங்காரகாலத்தில் எல்லாஞ்சோ அழிவனவாம்.

அத்திதியும் ஆதியும் அங்கு ஆம் - அந்த நிற்றலும் தோற்றலும் அவையிற்றுக்குக் காரணமாகிய அச்சங்கார கர்த்தாவிடத்தே உண்டாகும் எ-று.

இது சங்கார கர்த்தாவே கர்த்தாவென்றும், மாயை உபாதானம் என்றும் கூறலிற் பட்சமாயிற்று. இந்தப் பட்சத்துக்கு எதுவும் திட்டாந்தமும் மேலே வருவனவற்றாற் காண்க. (2)

The world which has been resolved into *Hara* must emanate from Him. The dissolution is required as rest for *Karma Mala*, and the reproduction for the removal of *Anava Mala*. All will admit that things will be reproduced from what they had been resolved into. If you say that the world resolved into *Vishnu* whose form is Mulaprakriti, then all the higher products of *Maya* above *Mulaprakriti* will not be dissolved. All the products of *Maya* become resolved along with *Vishnu* and *Brahma* into *Hara* who is the author of both.

மாயையிடத்து உள்ளது தோன்றும் என்பதும், தோன்றும் இடத்து வினைக்கீடாகத் தோன்றும் என்பதும், தோற்றுவிப்போன் தன்னுடைய

சத்தியாலே தோற்றுவிப்பான் என்பதும், ஆன்மா அழிந்து தோன்றானென்பதும் கூறுகின்றது: -

**வித்துண்டாம் மூலம் முளைத்தவா தாரகமாம்**
**அத்தன்தாள் நிற்றல் அவர்வினையால் - வித்தகமாம்**
**வேட்டுவனாம் அப்புழுப்போல் வேண்டுருவைத் தான் கொடுத்துக்**
**கூட்டானே மண்போற் குளிர்ந்து.** (3)

(இ-ள்.) முளைத்த ஆ மூலம் வித்து உண்டு ஆம் - அங்குசந்தோன்றினவாற்றாலே அது தோன்றுதற்கு இடமாகிய விதை உளதாம் எனவே வித்தில்லை ஆயின் அங்குரம் இல்லை என்றதாம்.

தாரகம் அத்தன் தாள் ஆம் - அந்த மாயைக்குத்தாரகம் கர்த்தாவினுடைய பராசத்தியாம்,

நிற்றல் அவர் வினையால் - அவள் நிற்கின்ற முறைமை அவாவர் வினைக்கீடாகவாம்,

வித்தகம் ஆம் - அது ஆச்சரியமாய் இருக்குமென்று சொல்லப்படும்,

வேட்டுவன் ஆம் அப்புழுப்போல் - வேட்டுவனால் ஆக்கத் தக்க புழுப்போலும், எனவே வேட்டுவன் இறந்த புழுவுக்கு உயிரும் தேகமும் கொடுத்தல் இல்லை. உயிர் நிற்க உருவம் வேறாக்கியது போல் என்று ஆயிற்று.

வேண்டு உருவைத் தான் கொடுத்துக் கூட்டானே - சங்காரகர்த்தா வேண்டின உருவத்தைக் கொடுத்துக் கூட்டமாட்டானோ?

மண்போல் குளிர்ந்து - ஈரத்தை உடைய மண்போல அம்மாயையுடனே கூடிநின்று சேடிப்பன் எ-று.

எனவே மாயை முதற்காரணம், சத்தி துணைக்காரணம், கர்ததா நிமித்த காரணம் என்றாயின.

**(இதன் விரிவு.)**

மண்போல மாயை முதற் காரணமென்றும், திரிகையும் கோலும் போலக் கர்த்தாவினுடைய சத்தி துணைக் காரணமென்றும், குலாலனைப் போலக் கர்த்தா நிமித்த காரணமென்றும், இம்மூன்று காரணங்களால் உண்டாகிய காரியமாகிய பிரவஞ்சம் கடம் போல என்றும் ஆம். இந்த மாயை முதற் காரணமென்றும், துணிபொருட்பட்சத்துக்குப் பிரவஞ்சம் காரியமாகி வருதலாலென்னும் காரிய எதுவும், வித்தும் முளையும் போல என்னுஞ் சபட்சமும், வித்தில்லை ஆயின், அங்குரமுதலியன இல்லை என்னும் விபட்சமுங் கூறியவாறறிக. (3)

Just as a sprout appears when a seed is embedded in moist earth, so the world is created from Maya by the *Sakti* or Light of *Iswara*, whose creation is in accordance with the unchangeable laws of *Karma*; and Lo! the Power of Sakti!

Just as, when not sprouting, thc seed is concealed in the earth, so *Maya* exists in God when not differentiated. And He gives each his form as he desires it, just as the worm in a wasp's test gets the form it desires. (3)

கர்த்தா பிரவஞ்சகிருத்தியஞ் செய்கின்ற முறைமையும் அந்தக் கிருத்தியம் எல்லாம் அனுக்கிரகம் என்பதும், அப்படிக் கிருத்தியம் செய்கையில் ஒரு சற்றும் பந்தம் உற்று விகாரம் உறானென்பதும் கூறுகின்றது: -

**நோக்காது நோக்கி நொடித்து அன்றே காலத்தில்**
**தாக்காது நின்று உளத்திற் கண்டு இறைவன் - ஆக்காதே**
**கண்ட நனவு உணர்வில் கண்ட கனவு உணரக்**
**கண்டவனின் இற்று இன்றாம் கட்டு. (4)**

(இ-ள்.) நோக்காது, நோக்கி- இரட்சியாமல் இரட்சித்து, நொடித்து–அழியாம லழித்து,

அன்றே காலத்தில் தாக்காது - அநாதி தொடங்கிக் காலப்போல ஒன்றினும் தாக்காமல், எனவே செல்காலம், நிகழ்காலம், வருங்காலமாகிய மூன்றுகாலமாய் வேறுபட்டும் தனக்கு விகாரமின்றி நிற்கும் காலம்போலக் கர்த்தா விகாரப்படாமல் நிற்பனென்றதாம்.

நின்றுஉளத்தில் கண்டு இறைவன் - எல்லா ஆன்மாக்க ளிடத்திலும் ஒக்கநின்று அவரவர் செய்த கன்மத்துக் கீடாகப் பார்த்துப் பரமேசுரன்,

ஆக்காதே - படையாதே படைத்து, நோக்காது நோக்கி என்றதனாலே, நொடியாமல் நொடித்தென்றும், ஆக்காம லாக்கியென்றும் கொள்ளப்பட்டன.

நனவு கண்டவுணர்வில் - விடயங்களை அறிந்து வந்த நனவுணர் வினிடத்தே,

கண்டகனவு - கனவின்கட் கண்டவற்றை,

உணரக் கண்டவனின் - விளங்கக் கண்டவனைப்போலும்,

இற்று - இத்தன்மைத்து. ஆதலால்,

கட்டு இன்று ஆம் - அவனுக்குப் பந்தம் இல்லையாம் எ-று.

**(இதன்விரிவு,)**

கனவுகண்ட புருடன் தனக்கு அது புதிது அன்றும் ஆய்க் கானுமிடத்துப் பொய் அன்றும் ஆய் நனவிலே மெய் அன்றும் ஆய்இருத்தலின் அதிலொரு பிரயோசனமும் இன்றி இருந்தாற்போல, பிரவஞ்சம் காரியப்பட்டு வருகையிலே அது புதிதன்றுமாய்ப் பொய்யன்றுமாய் இருத்தலின், தனக்கொரு பிரயோசனமுமின்றிக் கர்த்தா இருப்பனென்றதாம்; எனவே விகாரியாகா னென்பது கூறினாராயிற்று. கர்த்தா கிருத்தியஞ் செய்கையிலே பற்றற்றிருப்பானென்னும் பட்சத்துக்குக் காலம் போல என்னுஞ் சபட்சமும், தனக்கொரு பிரயோசனமுமின்றி அவிகாரியா யிருப்பனென்னும் பட்சத்துக்குக் கனவு கண்டவனைப் போல என்னுஞ் சபட்சமும் காட்டியவாறு காண்க. (4)

Just as Time the producer of all changes, itself remains without change, so God who creates, developes, and destroys the world without any mechanical means and by bis mere will, remains without change. He has in consequence no ties (*Pasa Bantham*) just like the mind having certain impressions, itself remains different (*i.e.*, does not become changed into them) and like the man who has learnt the truth in the waking state will not be misled by the dreams he has had. (4)

"அந்தமாதி யென்மனார் புலவர்" என்பதற்குப் பிரமாணம் கூறுகின்றது. இது சுட்டுணர்வாகிய பிரவஞ்சம் சுட்டுணர்வின்றி நின்ற சங்காரத்தின் வழி அல்லது சுதந்தரம் இன்றி நிற்றலால் சங்காரமே முதலென்றது: -

**ஒன்று அலா ஒன்றில் உளது ஆகி நின்றவாறு**
**ஒன்றூ அலா ஒன்றில் ஈறாதல்–ஒன்றலா**
**ஈறே முதல் அதனின் ஈறு அலா ஒன்று பல**
**வாறே தொழும்பு ஆகும் அங்கு. (5)**

(இ-ள்.) ஒன்று அலா ஒன்றால் - பிரவஞ்சத்துள் ஒன்றல்லாத ஒப்பற்ற கர்த்தாவால்,

உளது ஆகி நின்ற ஆறு - பிரவஞ்சம் உற்பத்தியாய்த் திதிப்பட்டமுறையே,

ஒன்று அலா ஒன்றில் - அந்தக் கர்த்தாவில்,

அவை ஈறாதல் - அப்பிரவஞ்சஞ் சென்று ஒடுங்குதலால்,

ஒன்று அலா ஈறேமுதல் - பிரவஞ்சத்துள் ஒன்றல்லாத அச்சங்கார கர்த்தாவே முதற்கடவுள்,

அதனில் - அக்கடவுள் போல, ஈறு இலா ஒன்று - அழிவின்றி இருந்த ஆன்மா,

பல ஆறே தொழும்பு ஆகும் - கடவுளுக்குப்பல ஆற்றாலும் அடிமையாகும்,

அங்கு - வீடு பெற்றவிடத்தும் எ-று

இந்த ஐந்துவெண்பாவானும் கர்த்தாவுக்கும் மாயைக்கும்பட்சம் ஏது, திட்டாந்தம், உபநயம், நிகமனங் கூறியவர்றறிக. (5)

*Hara* who is neither the one nor the other in the Universe of mind and matter, is the only Supreme Being of the said Universe, as the Universe of mind also becomes dissolved in Him in the same way, after they (minds) had been created and developed. The said Universe of mind which like Him is eternal, is subordinate to Him even in *Moksha*.

**முதற்சூத்திரம் முற்றிற்று.**

## இரண்டாம் சூத்திரம்.

புனருற்பவம் வருமாறு கூறுகின்றது: -

**அவையே தானே ஆய் இரு வினையின்**
**போக்கு வரவு புரிய ஆணையின்**
**நீக்கம் மின்றி நிற்கும் அன்றே.**

(இ-ள்.) அவையே (ஆய்) - கர்த்தா முன்கூறப்பட்ட அவன், அவள், அது என்னும் பிரவஞ்சமாகி, எனவே அபேதமாய் என்ற தாம்

தானே ஆய் - ப்பிரவஞ்சத்திற்குத் தான் வேறுமாய், எனவே பேதமா யென்றதாம். இவற்றாற் பேதா பேதமுமா யென்றும் ஆயிற்று. ஆயென்பதனை மேலதனோடுங்கூட்டுக.

இருவினையின் - ஆன்மாக்கள் முன்செய்த புண்ணியபாவங்களினாலே,

போக்கு வரவு புரிய - பிறந்தும் இறந்தும் வர,

ஆணையின் - தன்னுடைய ஆணையினாலே,

நீக்கம் இன்றி நிற்கும் அன்றே - ஒழிவற நிறைந்து நிற்பன் அநாதீ சுபாவமாக எ-று.

என்றது, கர்த்தா பிரவஞ்சமெல்லாமாய் அவையல்லனுமாய் அவற்றிற் குடனுமாய் அவற்றில் சிறிதும் தோய்வின்றி நீக்கமறக்கலந்து ஆன்மாக்கள் முன்பு செய்த கன்மங்களுக் கீடாகத் தன்னுடைய சத்தியாலே பிறந்திறந்துவரத் தான் அநாதி சுத்தனாய் அவற்றின் தன்மை தனக்கேறாமல் நிற்பனென்றதாம்.

2nd Sutra. He is one with the souls (*Abetha*) He is different from them (*Betha*). He is one and different from them (*Bethabetha*). He stands in *Samavaya* union with His

Gnana Sakti and causes the souls to undergo the processes of evolution (births) and retura (*Samharam*) by inducing their good and bad acts (*Karma*).

"அவை தானேயா" யென்பதற்குப் பிரமாணங்கூறுகின்றது. இது ஈண்டு அத்துவிதம் என்ற சொல்லானே ஏகமென்னில், ஏகமென்று சுட்டுவது உண்மையின், அத்து விதம் என்ற சொல்லே அன்னிய நாத்தியை உணர்த்தலாயிற்று. இவ்வான்மாக்கள் பலவும் முதல்வன் தானேயாய் நிற்குமென்றது. அல்லது சர்வான்மாக்களிடத்தும் கர்த்தா இரண்டற நிற்கு முறைமை கூறுதலுமாம்: -

**கட்டும் உமுறுப் கரணமும் கொண்டு உள்ளம்**
**இட்டதொரு பேர் அழைக்க என் என்றாங்கு - ஒட்டி**
**அவன் உளம் ஆகில்லான் உளம் அவன் ஆ மாட்டாது**
**அவன் உளமாய் அல்லனுமாம் அங்கு.** (6)

(இ-ள்.) கட்டும் உறுப்பும் - என்பு தோல் நரம்பு இறைச்சி முதலாயினவற்றால் கட்டப்பட்ட தேகத்தையும்,

கரணமும் -- ஐம்பொறி முதலாகிய கருவிகளையும்,

கொண்டு உள்ளம் - கொண்டு நின்று ஆன்மா,

இட்டது ஒரு பேர் அழைக்க ஏன் என்றாங்கு - தேகத்துக்கிட்ட ஒருபெயரை ஒருவன் சொல்லி அழைக்கத் தான் அதுவாய் நின்று ஏனென்றாற்போல,

ஒட்டி - சர்வான்மாக்களிடத்தும் வேற்றக்கலந்து. ஒட்டிநின்று

அவன் - கர்த்தா அவ்வாறு ஒட்டி நின்றவிடத்தும்,

உளம் ஆ கல்லான் - அந்த ஆன்மாக்களாவா னல்லன்,

உளம் அவன் ஆ மாட்டாது - அப்படி வேற்றக்கலந்து நிற்கின்ற ஆன்மா அந்தக் கர்த்தாவாக மாட்டாது,

அவன் உளம் ஆய் அல்லனும் ஆம் ஆங்கு - கர்த்தா ஆன்மாவுமாய் அல்லனுமாய் நிற்பன் அவ்விடத்து எ-று.

என்றது, ஆன்மாக்களிடத்தே கர்த்தா வேற்றக்கலந்து நின்றும், நீங்கி நிற்பனெனனும் பட்சத்துக்குத் தேகத்துடனே ஆத்துமா வேறறக்கலந்து நின்று நீங்கி நிற்றல் சபட்சமாயினவாறு காண்க. - எனலே - ஆன்மாவும் தேகமும் வேறென்றதாம், (1)

The soul, standing in its body composed of bones, muscles, &c., and in union with the senses, answers to the name given for its body, when any-body addresses it, and identifies itself with the body. Similarly, though the Lord stands in a

similar intimate relation with the soul, He is not the soul, and the soul cannot become the Lord. In the human state, He is one and not one with the soul. (1)

வேதத்தில் கர்த்தாவும் ஆன்மாவும் இரண்டல்ல வெனக் கூறியதென் போர்க்கு இரண்டென்பதும் ஆன்மாக்களுக்குக் கர்த்தாவை ஒழிந்து சேட்டை இல்லை என்பதுங் கூறுகின்றது: -

**ஒன்று என்றது ஒன்றேகாண் ஒன்றே பதிபசுவாம்**
**ஒன்று என்ற நீ பாசத்தோடு உளைக் காண் – ஒன்று இன்றால்**
**அக்கரங்கள் இன்றாம் அகர உயிர் இன்றேல்**
**இக்கிரமத்து என்னும் இருக்கு.** **(7)**

(இ-ள்.) ஒன்று என்றது ஒன்றே காண் - வேதம் ஒன்றென்று சொல்லுகின்றதற்கு ஒத்தாரும் மிக்காரும் இன்றி நித்தமுத்தசுத்தனாய் நிற்கின்ற தனிமுதலைக்காண்,

ஒன்றேபதி - அந்தத் தனிமுதலே கர்த்தா, அது ஆன்மா அன்று.

ஒன்று என்ற நீ பசு ஆம் -- ஒன்றென்று சொல்லுகின்ற நீயே ஆன்மாவாம்,

பாசத்தோடு உளைகாண் -- நீ பாசத்தோடு கட்டுப்பட்டு நின்றாய் காண், நீ பாசபந்தனெனவே அவன் சுத்தனென்பது மீட்சிமொழி ஆயிற்று.

அகர உயிர் இன்றேல் அக்கரங்கள் இன்று ஆம் - அகரமாகிய உயிர் இல்லை ஆயின், ஒழிந்து நின்ற அக்கரங்கள் இல்லையாம் ஆறுபோல

ஒன்று இன்றேல் - இந்த ஒன்றாகிய கர்த்தா இல்லையாயின், ஆன்மாக்களுக்கும் சேட்டை இல்லை,

இக்கிரமத்து என்னும் இருக்கு - இந்தமுறைமையாகச் சொல்லும் வேதம் எ-று.

என்றது - கர்த்தாவும் ஆன்மாவும் வேறறநின்ற பட்சத்துக்கும் கர்த்தாவை இன்றி ஆன்மாக்களுக்குச் சேட்டை இல்லை என்னும் பட்சத்துக்கும் அகரவுயிரும் அட்சரங்களும் சபட்சமாயினவாறு காண்க.

The vedic Text, 'Ekam evadwithiyam Brahma' ‘Ekam Eva Rudro Nadwitiyaya thas theh' means that there is only one Supreme Being without a second. And this one is the Pathi and not the soul. You who say (ignorantly) you are one (with the Lord) are the soul and are bound up with *Pasa*. As we say that without (the primary sound) “A” all other letters will not sound, so the Vedas say “without the Lord, no other things will exist.”

கர்த்தாவும் ஆன்மாக்களும் இரண்டற நின்ற முறைமை கூறுகின்றது: -

**பண்ணையும் ஓசையும் போலப் பழமதுவும்**
**எண்ணுஞ் சுவையும் போல் எங்குமாம் - அண்ணல்தாள்**
**அத்துவிதம் ஆதல் அருமறைகள் ஒன்று என்னாது**
**அத்துவிதம் என்று அறையும் ஆங்கு.** (8)

(இ-ள்.) பண்ணையும் ஓசையும் போல - பண்ணுக்கு நாதம் நின்று அவற்றின் சொருபங்களை நிறைப்பித்தாற்போலவும், எனவே பபண்ணும் ஓசையும் பாடுவோனை இன்றி இல்லாமையான் முதல் மூன்று ஆயிற்று.

பழமதுவும் - பழமும் அதனில் உள்ள இரதமும்போலவும், எனவே பழத்திலே இரதம் நிறைந்து நின்றாற்போலப் பதியும் பிரவஞ்சமும் அநாதியே இப்படி இருக்கும் என்றதாம்.

எண்ணும் சுவையும்போல் - எள்ளும் அதனில் உள்ள தைலம் போலவும், எனவே எள்ளும் தைலமும் பிரியத்தக்க நிறைவாயிருக்கதுபோலக் கர்த்தாவும் பிரியத்தகும் நிறைவாயிருப்பன் என்றதாம்.

எங்கும் ஆய் அண்ணல் தாள் -- பிரவஞ்சமெல்லாம் ஒழிவற நிறைந்து கர்த்தாவினது சத்தியானது,

அத்துவிதம் ஆதல் - இரண்டற நின்று அனன்னிய மாதலால்,

அருமறைகள் ஒன்று என்னாது - அரியவேதங்கள் ஒன்றென்று சொல்லாமல்,

அத்துவிதம் என்று அறையும் ஆங்கு - இரண்டன்மை என்று சொல்லும், முடிக்குமிடத்து எ-று.

எனவே, இரண்டன்மை என்றது ஒன்றென்னுஞ்சொல் இன்மையினால் அன்று. இரண்டன்மை யென்ற சொல்லாலே ஒன்றெனில், அப்படிச் சொல்லுகின்றவன் ஒருவனுண்டு. ஆகையால், ஒன்றன் சானால் இரண்டன்மையென்ற சொல்லாலே இரண்டுமன்று. இதனால், வேற்றக் கலந்து நின்ற முறைமை கூறலாயிற்று. கர்த்தா பிரவஞ்சத்தை வேறற நின்று சேட்டிக்கின்றானென்னும் பட்சத்துக்குப் பண்ணும் ஓசையும் சபட்சமாகவும், வேறற அநாதியிலே நிற்கின்ற பட்சத்துக்குப் பழமுமிரதமும் சபட்சமாகவும், அப்படி ஒன்றாயிருந்தும் வேறாயும் உள்ளானென்னும் பட்சத்துக்கு எள்ளு மெண்ணெயும் சபட்சமாகவும் கூறியவாறறிக. (2)

The *Arul Sakti* of the Lord which pervades the whole universe is inseparably and eternally connected with the world, just like the sound in the tune and the flavour in the fruit. So, the rare Vedas declare that *Brahm* is *Adwaitham* and not *Ekam* with the universe. (2)

அத்துவிதம் என்றதனை ஒன்று என்பதாகக் கருதி அகம்பிரம மென்பாரை மறுத்து முன் சொன்னதனையே வலியுறுத்துகின்றது: -

**அரக்கொடு சேர்த்தி அணைத்த அக்கற்போல்**
**உருக்கி உடங்கு இயைந்து நின்று - பிரிப்பு இன்றித்**
**தானே உலகாம் தமியேன் உளம் புகுதல்**
**யானே உலகு என்பன் இன்று.** 9

(இ-ள்.) உருக்கி அரக்கொடு சேர்த்தி அணைத்த அக்கல்போல் - அரக்கை உருக்கி அதனுடன் சேர்த்து அணைத்த கற்பொடி அவ்வசக்கினோடு ஒருங்கியைந்து பிரிப்பின்றி நின்றாற்போல,

உடங்கு இயைந்து நின்று - கர்த்தா உயிர்களில் ஒருங்குகூடி நின்று,

பிரிப்பு இன்றித்தானே உலகு ஆம் - பிரிவில்லாமல் தானே பிரவஞ்சமென்னும்படி இருப்பன்,

தமியேன் உளம்புகுதல் - இந்திரியங்களை நீங்கி யான் தமியனானவிடத்து என்னிடத்தே புகுதலாலே, -- புகுதல் புதிதாகப் புக்கதன்று, அநாதியில் எகீபவித்து நின்ற முறைமை, இந்திரியங்களை நீங்கினவிடத்துப் பிரகாசித்ததென அறிக.

யானே உலகு என்பன் இன்று - யானே பிரவஞ்சரூபியென்று சொல்வன், இம்முத்தித்தசையில் எ-று.

இதிலே கர்த்தா பிரவஞ்சத்தோடியைந்து அத்துவிதமாய் நிற்பனென்னும் பட்சத்துக்கு அரக்கொடு கூட்டிப்பிடித்த சாணைக்கல் சபட்சமாயினவாற்றிக. (3)

Just like the whetstone composed of gold, wax and sand, God is one with the world and is different from it and He is neither (Bethabetharn). When God enters my soul, when I am freed from Pasam, I identify myself with God, and say I am all the world.

ஆணையி னிருவினை புரிய என்பதற்குப் பிரமாணங் கூறுகின்றது. இது கர்த்தாவினுடைய ஆணையினாலே ஒழிந்து ஆன்மாக்களுக்குப் புண்ணிய பாவங்கள் கூடா என்பதும், அவை கூடுமிடத்து முன்புள்ளவை ஒழிந்து கூடா என்பதும், கூட்டுமிடத்து விருப்பு வெறுப்பின்றிக் கூட்டுவன் என்பதும் கூறுகின்றது: -

**உள்ளதே தோற்ற உயிர் அணையும் அவ்வுடலில்**
**உள்ளதாம் முற்செய்வினை உள் அடைவே - வள்ளலவன்**
**செய்பவர் செய்திப் பயன் விளைக்குஞ் செய்யேபோல்**
**செய்வன் செயல் அணையா சென்று.** 10

(இ-ள்.) உள்ளதே தோற்ற - முன்பு உள்ள கன்மத்துக்குப் பொருந்தி உள்ளதொரு தேகம்வந்து தோன்ற,

அவ்வுடலில் உயிர் அணையும் - அந்தத்தேகத்தே ஆன்மா சென்று பொருந்தும்,

முன் செய்வினை உள்ள டைவே உள்ளது ஆம் - முன்செய் தவினை அனுபவித்தற்கு ஏதுவான முறைமையிலே மேலைக்கு வினை யுள்ளதாம்,

வள்ளல் அவன் - விரும்பியது கொடுக்கும் வள்ளலாகிய கர்த்தாவானவனே, எனவே அவன் பெத்த முத்தி இரண்டையுங் கொடுப்பனென்றதாம்.

செய்பவர் செய்திப்பயன் - யாதொரு வேளாண்மையைச் செய்யுமவர்கள் செய்த தொழிற்பயனை,

விளைக்கஞ் செய்யே போல் - வயல்கொடுப்பதன்றி அத்தொழில் தானே கொடுக்கமாட்டாததுபோல,

செய்வன் - உயிர்களுக்குக் கொடுப்பன், எனவே செந்நெல் இடப் பூரிவிளையாதென்பதாம். கர்த்தாவுக்கு விருப்பு வெறுப்பில்லை யென்பதாயிற்று,

செயல் சென்று அணையா - இருவினை தாமே உயிர்கட்குப் பயனாய்வந்து பொருந்தா எ-று.

எனவே... அந்த வயல் விகாரமின்றி இருக்கப் பலன் விளைந்தாபோல, கர்த்தாவும் விகாரமின்றி யிருக்க, அவன் சந்நிதி மாத்திரத்திலே உயிர்கட்கு வினைப் பயன் விளையுமென்றதாம். கர்த்தா விருப்பு வெறுப்பற்று ஆன்மாக்களைப் பிரித்துக் கூட்டுவன் என்னும் பட்சமும், அஃது எதனா லென்னில் வினையாலென்னும் எதுவும், அஃது என்போல என்னில் செய்போல் என்னும் சபட்சமும், வினை இல்லையாயின் செயலில்லை என்னும் விபட்சமுங் கூறியவாறு காண்க. (4)

The soul joining the body caused by its previous *Karma* eats the fruits thereof. Similarly, our present actions (*Karma*) furnish the seed for our body in the next birth. God the all bountiful makes the soul eat the fruits of previous *Karma* (without suffering any change). just as the soil makes the cultivator reap as he sowed. (4)

ஆன்மா சிற்றறிவுடையது. ஆதலால், கன்மத்துக் கீடான தேகத்தைத் தானே பொருந்தி அதன் பயனை நுகர மாட்டாதா என்பதும், அதனை நுகர் வித்தற்குக் கர்த்தா வேண்டும் என்பதுங் கூறுகின்றது: -

**அவ்வினையைச் செய்வதனில அவ்வினைஞர் தாம் சென்றங்கு**
**அவ்வினையைக் காந்த பசாசம் போல் - அவ்வினையைப்**
**பேராமல் ஊட்டும் பிரானின் நுகராரேல்**
**ஆர்தான் அறிந்து அணைப்பார் ஆங்கு.** 11

(இ-ள்) அவ்வினையைச் செய்வதனில் - அவ்வினைப் பயன்களைச் செய்வதற்கு இடமாகிய உடம்பின்கண்,

அவ்வினைஞர் தாம் சென்று அங்கு - அவ்வினை களைச்செய்யும் ஆன்மாக்கள் தாம்போய்ப் பொருந்தியலிடத்து,

அவ்வினையை - அந்தப்புசிப்பதான கன்மத்தை,

காந்த பசாசம்போல் - காந்தத்தையும் இரும்பையும் ஒக்க ஒருவன் கூட்டுமாறுபோல,

அவ்வினையைப்பேராமல் ஊட்டும் - அந்தக் கன்மபலங்களைக்கூட்டித் தப்பாமல் புசிப்பிக்கும்,

பிரானில் நுகாரேல் - கர்த்தாவாலே புசியார்கள் ஆயின்,

ஆர்தாம் அறிந்து அணைப்பார் - யாவர் தாம் அவற்றை அறிந்து கூட்டவல்லார்,

அங்கு - மலத்தில் மறைப்புண்டுகிடக்கும் அக்காலத்தில் எ-று.

Just as iron is attracted to the magnet when a person brings it in position, so the souls performing *Karma* join the body in which the *Karma* is affected and eat the fruits by the *Arul* of God. If they do not so enjoy by His Arul, who else could kuow and make them eat the fruits of *Karma* in the most unchangeable manner, in that condition, where they lie helpless, without self knowledge, and self action, enshrouded by Mala. (5)

ஆணவமலம், மாயா மலம், கன்மமலம் என்னு மூன்றுமலமும் அநாதி என்பதும், கர்த்தாத் தன் சந்நிதியில் அவை காரியப்பட்டுவரத் தான் நிருவிகாரியா யிருப்பனென்பதுங் கூறுகின்றது: -

**நெல்லிற்கு உமியும் நிகழ் செம்பினில் களிம்பும்**
**சொல்லில் புதிதன்று தொன்மையே - வல்லி**
**மலகன்மம் அன்று உளவாம் வள்ளலால் பொன்வாள்**
**அலர்சோகம் செய் கமலத்து ஆம்.** 12

(இ-ள்.) நெல்லிற்கு உமியும் நிகழ் செம்பினில்களிம்பும் - நெல்லின்கண் உமியும் விளங்கிய செம்பினிடத்துக் களிம்பும்,

சொல்லின் புதிது அன்று தொன்மையே - சொல்லுங்கால் புதிதாயுள்ள தன்று, அநாதியே உள்ள தாம், புதிதன்றென்பதனைத் தனித்தனிக் கூட்டுக.

வல்லிமலம் கன்மம் அன்று உளஆம் - மாயாமலமும், ஆணவமலமும், கன்மமலமும், அவைபோல அநாதியே உள்ளனவாம்,

வள்ளலால் - இவற்றைப் பேராகஞ்செய்வது கர்த்தாவால்,

பொன்வாள் அலர் சோகம் செய்கை - ஆதித்தனுடைய கிரணங்கள் அலர்வனவற்றை அலர்த்தியும் குவிவனவற்றைக் குவிவித்தும் செய்யுஞ் செயல் போலச் செய்தல்,

மலத்து - ஆணவமலத்தைப் போக்குதல் காரணமாக, ஆம் - ஆகும் எ-று.

ஆன்மா அநாதியே மலசம்பந்தன் என்றும், மலமூன்றும் ஒரு காலத்துள்ளன என்றுங் கூறியபட்சத்துக்கு, நெல்லிற்குமியும் செம்பிற் களிம்பும் போல என்று சபட்சம் காட்டியவாறும், கர்த்தா அவிகாரியாயிருந்து பஞ்சகிருத்தியம் பண்ணுவன் என்னும் பட்சமும், மலம் போக்குவதற்கென ஏதுவும் ஆகிய இவற்றிற்கு ஆதித்தனைப் போல என்னும் சபட்சங் காட்டியவாறும் அறிக. ஆன்மா அனாதிமலசம்பந்தன் என்றும், ஆதித்தனுடைய சந்நிதியில் அலர்வன அலர்ந்தும் குவிவன குவிந்தும் வர, அவன் விகாரமற்றிருந்தாற்போல, கர்த்தாத் தன் சந்நிதியில் அவை தொழிற்பட்டுவர விகாரமற்றிருப்பன் என்றும், ஆதித்தனுடைய ஒரு கிரணமே அவ்வவ்வவசரத்தில் பலவானாற்போல, கர்த்தாவினுடைய சிற்சத்தியும் அவ்வவ் வவசரத்திற்கேற்க இச்சாசத்தியெனவும், ஞானசத்தியெனவும், கிரியாசத்தியெனவும் பலவாம் என்றும் உணர்க.

The husk of the paddy or the rust of the copper is not new but co-existed with the grain or copper; so the three *Mala*, *Maya*, *Karma* and *Anava* co-exist with the soul and were not acquired by it at any intermediate time. These undergo change in the presence of God, just as the Sun's rays cause one Lotus to open and another to close. (6)

ஆணையிற் போக்குவரவு புரிய என்பதற்குப் பிரமாணங் கூறியது. இது ஆன்மாவுக்குச் தேகம் விட்டால் அறிவில்லை என்றும் மிண்டொரு தேகம் எடாதென்றும் சொல்வோர்க்கு அவை உண்டென்கின்றது: -

**கண்ட நனவைக் கனவு உணர்வில் தான் மறந்து**
**விண்படர்ந்து அத்தூடு வினையினால் - கண்செவிகெட்டு**
**உள்ளதே தோற்ற உளம் அணுவாய்ச் சென்று மனம்**
**தள்ள விழும் கருவில் தான்.** 13

(இ-ள்.) கண்ட நனவை - ஆன்மா நனவினிடத்துக் கண்டவைகளை,

கனவு உணர்வில் தான் மறந்து - கனவு காணுங்காலத்தில் மறந்து உணர்வு வேறுபட்டது போல அறிவுவேறுபட்டு,

அத்தூடு விண்படர்ந்து வினையினால் - ஆன்மா சூக்கு மதேகத்துடனே துறக்க முதலியவற்றிற்போய் முன்பு செய்த கன்மங்களுக்கீடான பயன்களை அனுபவித்துப் பின்பு,

கண்செவிகெட்டு - கண்செவிமுதலாகிய உறுப்புகளை உடைய தூலசரீரம் இறந்தவிடத்து,

உள்ள தேதோற்ற - உள்ள தாகிய சூக்குமசரீரம் நாக சொர்க்க முதலிய போகங்களுக்கேற்ற தேகமாகக் காரியப்பட,

உளம் அணு ஆய்ச் சென்று - அவ்வானமா அணுரூபியாகச் சென்று,

மனந்தள்ள - மனமானது செலுத்த,

விழும் கருவில் தான் - அந்தச்சூக்கும தேகத்துடனே அமைந்த கருவினிடத்து விழும் எ-று.

கருவில் விழுதலாவது... ஆன்மா தூலதேகத்தை விட்டுச் சூக்கும தேகத்தோடு சாணளப்பான் புழுப்போலச் சென்று கருவிற் பதிதலாம் என்றறிக. கனவின்கண் உண்டாகிய அறிவு கனவின்கண் மாறிச் சீவித்தாற்போல, ஆன்மாதேகத்துக் கீடாக அறிவுமாறிச் சீவித்து நிற்கும் என்றும், அறிவு கெடாதென்றும், தேகமாறும் என்றும் சூக்கும தேகத்தினுடனே சென்று நரகசொர்க்கந் துய்க்கும் என்றும் கூறியபட்சத்துக்குக் கனவு சபட்சமாயினவாறு காண்க. நரகத்துக்கு யாதனா சரீரமும், சுவர்க்கத்துக்குப் போக சரீரமும், கன்மபூமிக்கு மிசிர சரீரமும் எனச் சரீரம் மூன்று பகுதிப்படும் என் றுணர்க. (7)

The soul passing at death from its *Sthula Sarira* composed of eyes, ears, &c., into its *Sukshuma Sarira* which it had already, undergoes its experiences in Heaven or Hell; and forgetting such experiences, just as a dreamer forgets his experience of the waking state, passes as an atom in its *Sukshuma* state into a suitable womb at conception time, impelled thereto by the desire created by its previous *Karma*. (7)

தூலத்தோடு சூக்குமமுங் கெடும் என்போர்க்கும், அறிவு கெடும் என்போர்க்கும், அச்சுமாறா தென் போர்க்கும், தூல தேகம் அழிந்தவிடத்துக் குடாகாய ஆகாயக் கூத்தாட்டால் என்போர்க்கும், அவர் கூறியவா றல்ல என்றும், அறிவம் தூல தேகமு மாறிச்சீவித்து நிற்கும் என்றுங் கூறுகின்றது: -

**அரவுதன் தோல் உரிவும் அக்கனவும் வேறு**
**பரகாயம் போய்வரும் அப்பண்பும் - பரவில்**
**குடாகாய ஆகாயக் கூத்தாட்டாம் என்பது**
**அடாது உள்ளம் போமாறு அது.** 14

(இ-ள்.) அரவுதன் தோல் உரிவும் - பாம்பு தன்னுடைய தோலை உரித்துப் பிறிதொருதோலைப் போர்த்துப்போதலும்,

அக்கனவும் - ஆன்மா நனவுடம்பினீங்கிக் கனவுடம்பிற் செல்லுதலும்,

வேறு பாகாயம் போய் வரும் அப்பண்பும் - யோகிகள் தம் முடம்பினீங்கிப் பாகாயத்திற்போய்த் திரும்புந்தன்மையுமாகிய இவ்வுவமைகள்,

பரவில் - விரிந்து வழங்குதலால்,

குடாகாய ஆகாயம் - குடத்தில் நின்ற ஆகாசம் குடமுடைந்த விடத்து மகா காசத்துடனே கூடினாற்போல்வதொரு,

கூத்தாட்டு ஆம் என்பது அடாது - கூத்தாட்டாமென்று சொல்வது பொருந்தாது,

உள்ளம்போம் ஆறு - ஆன்மா ஒரு தேகத்தை விட்டு ஒருதேகம் எடுக்கும் முறைமை,

அது - அரவும் கனவும் பரகாயப் பிரவேசமும் ஆகிய அவ்வுவமை யேயாம் எ-று.

அரவு தன்றோலுரிவென்ற உவமை, தூல சரீரத்தோடு சூக்கும் சரீரமும் கெடும் என்போர்க்குச் சூக்குமசரீரம் கெடாதென்றதாம். அக்கனவுமென்ற உவமை, தூல வுடம்புடனே கூடி நனவின்கட் கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறிந்த அறிவு கெடாமல் கனவின்கட் சூக்கும தேகத்துடனே கூடி நிற்குமென்றதாம். பாகாயம் போய் வருமப் பண்பென்ற உவமை, அச்சுமாறா தென்போர்க்கு அதுமாறுமென்றதாம். குடாகாயவாகாயக் கூத்தாட்டா மென்ப தடாதென்றது, ஏகான்ம வாதியையும் மாயாவாதியையும் மறுத்ததாம். சூக்குமங் கெடாது என்றும், அறிவுகெடாது என்றும், அச்சுமாறும் என்றும் கூறிய பட்சங்களுக்கு அரவு தன்றோ லுரிவும் கனவும் பரகாயப் பிரவேசமும் என்னும் சபட்சங்கள் கூறியவாறு காண்க. (8)

The analogies of the serpent passing out of its old skin and the mind from the conscious into the dream condition and the *Yogi* into another body are often properly pointed out to explain the passing of the soul from its *Sthula* into the *Sukshuma Sarira*. Against this view, the analogy of the air of the pot passing into the atinosphere after the breaking of the pot, is instanced to support the view, that the soul takes no other body after death. This does not serve; it only illustrates the fact of the soul passing from the *Sukshuma Sarira* itself. (8)

நீக்கமின்றி நிற்குமன்றே என்பதற்கு ஏது, அவன் ஏகானேகம் இரண்டும் இன்றிச்சர்வவியாபியாய் நிற்றலானென்பது. அதற்குப் பிரமாணங்கூறுகின்றது: -

**எங்குமுளன் என்ற அளவை ஒன்று அன்று இரண்டென்னில்**
**எங்கு உளன் அன்று எவற்று எவனும் - அங்கண்**
**அவை அவன் அன்றில்லைப் பொன்னொளிப் போல் ஈசன்**
**அவையுடைமை ஆளாம் நாம் அங்கு.** 15

(இ-ள்.) எங்கும் உளன் என்ற அளவை - காத்தா அவன், அவள், அது என்னும் அவற்றுள் எங்கும் நிற்கின்றானென்ற பிரமாணத்தினாலே,

ஒன்று அன்று - ஒருவனாதல் கூடாது,

இரண்டு என்னின் - அவன் இருபொருளாய் நிற்பன் என்றால்,

எங்கும் உளன் அன்று - எவ்விடத்தும் பரிபூரணமாக நிறைந்து சிற்பவனாதல் கூடாது,

எவற்று எவனும் - எவ்விடங்களிலும் உள்ள எப்பொருளுமாகிய,

அங்கண் அவை அவன் அன்று இல்லை - அவ்விடத்து அவன் அவள் அது என்றவை யெல்லாம் கர்த்தாவை ஒழிந்து இல்லையாதலால் எனவே எங்குமுளன் அல்லனென்றல் பொருந்தாது,

பொன் ஒளிபோல் ஈசன் - கர்த்தா ஆதித்தனும் பிரகாசமும் போல் ஒன்றா தற்கும் இரண்டாதற்கும் பொதுவாய் இசைந்து நிற்பன்,

அவை உடைமை - அந்தச் சதாசிவ முதவியவும் பிரவஞ்சமும், கர்த்தாவுக் குடைமையாம்,

நாம் ஆள் ஆம் அங்கு - நாம் அடிமையே யாவோம் கர்த்தாவினிடத்து எ-று.

கர்த்தா ஓரிடத்திருப்பானும் அல்லன், பலவாகக் கண்டிக்கப்பட்டிருப்பானும் அல்லன், எங்கும் ஒழிவற நிறைந்து நிற்பனென்னும் துணி பொருட் பட்சத்துக்கு ஆதித்தனும் பிரகாசமும் போல என்னும் சபட்சங் காட்டியவாறுகாண்க. (9)

If God is all-pervading (one vith the souls and matter), He cannot be one. If he is two, He cannot be all-pervading. (He cannot ba said to be not all-pervading as) there is no body or soul which exists without Him. He pervades everything by His *chit-sakti*, just like the light of the Sun. The whole universe is His property and the souls are His servants.

(9)

**இரண்டாஞ்சூத்திரம் முற்றிற்று.**

# மூன்றாஞ் சூத்திரம்.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ எனின் ஆன்மப் பிரகாசம் உணர்த்து தனுதலிற்று: -

**உளது இலது என்றலின் எனதுடல் என்றலின்**
**ஐம்புலன் ஒடுக்கம் அறிதலின் கண்படின்**
**உண்டிவினை இன்மையின் உணர்த்த உணர்தலின்**
**மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா.**

(இ-ள்.) உளது - ஆன்மா உளது, உளதென்றது, ஆன்மா உளதென விற்பூட்டாகப் பொருள் கொள்க.

இலது என்றலின் - எவற்றினையும் அன்றன்றெனவிட்டு ஆன்மா இலதென்று நிற்பது உளது ஆதலின், அதுவே அவ்வான்மாவாம்

எனது உடல் என்றலின் - எனது உடம்பென்று சொல்லு தலால் உடலுக்கு வேறாக ஆன்மாவுளது), எனவே-என்பொருள் என்புழி யானென்பதற்குப் பொருள் வேறானாற்போல, உடம்பு வேரு தலால் அவ்வுடம்பிற்கு வேறாக யானெனப்படும் ஆன்மா, உளது.

ஐம்புலன் ஒடுக்கம் அறிதலின் - சத்தமுதலிய ஐம்புலன்களையும் செவிமுதலிய இந்திரியங்களோடுகூடி அறிதலால், வேறே ஆன்மா வுளது. அவத்தைகளில் ஒடுங்கு முறைமை அறிதலால் வேறே ஆன் மாவுளது. அறிதலின் என்ப்தை 'ஐம்புலன் என்பதனோடுக்கூட்டுக.

கண்படில் உண்டிவினை இன்மையின் - துயிலுமிடத்து ஊணும் செயலும் இல்லை, ஆதலால் அந்தத் தேகத்திற்கு வேறாக ஆன்மா உளது.

உணர்த்த உணர்தலின் - அறிவிக்க அறிகையால், ஆன்மாவுளது,

மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா - மாயாகாரியங்களால் யாக்கப்பட்டு இயன்ற சூத்திரப் பாவைபோலும் உடம்பினிடத்து அதற்கு வேராக ஆன்மா உளது எ-று.

ஆன்மா உளதென்பதை இலதென்பது முதலியவற்றோடுங் கூட்டுக.

இல்லை என்று சொல்லப்பட்டது ஒன்று உண்டாகையாலும், எனது உடம்பென்று சொல்லுகையாலும், சத்தமுதலாகிய ஐம்புலன்களையும் அறிதலாலும், சாக்கிர முதலிய அவத்தைகளி லொடுங்கு முறைமையை அறிதலாலும், துயிலுமிடத்து ஊணும் செயலும் இன்மையாலும், உணர்த்த உணர் தலாலும், மாயா வியந் திர தேகத்தின் கண்ணே அந்தத் தேகத்துக்கு வேறாக ஒரான்மா உளதாம் என்றுணர்க. இதனுள் ஆன்மா உண்டென்னும்

பட்சத்துக்கு இலதென்றலின், என துடலென் றலின், ஐம்புலனறி தலின், ஒடுக்கமறிதலின், கண்படில் உண்டிவினையின்மையின், உணர்த்த உணர்தலினெனப் பலசபட்சங்கள் காட்டியவாறுகாண்க.

3rd Sutra. It rejects every portion of the body as not being itself; It says my body; it is onscious of drearns; it exists in sleep without feeling pleasure or pain or movements; it knows from others; This is the soul which exists in the body formed as a machine from *Maya*.

இலதென்றலின் ஆன்மா உளதென்பதற்குப் பிரமாணம் கூறிய முகத்தானே பதி பசு பாசமாகிய முதல் மூன்றும் இல்லை. உடம்பே அறியும் என்றவனைப்பற்றி அந்த மூன்று முதலும் உண்டென்றும், உடம்பறியாது உடம்புக்கு வேறாகிய ஆன்மா அறியுமென்றுங் கூறுகின்றது: -

**அன்று அன்று என நின்று அனைத்தும்விட்டு அஞ்செழுத்தாய்**
**நின்ற ஒன்று உளது அதுவே நீ அனைத்தும் – நின்று இன்று**
**தர்ப்பணம்போல் காட்டலால் சார்மாயை நீயல்லை**
**தற்பரமும் அல்லை தனி.** 16

(இ-ள்.) அன்று அன்று என - சத்த தாதுக்களும், அவயவா திகளும், இந்திரியங்களுமாகிய இவற்றுள் ஒவ்வொன்றையும் இது நான் அன்றென்று,

நின்று அனைத்தும் - நின்று எல்லாவற்றையும்,

விட்டு - கண்டுவிட்ட இட த்து.

அஞ்சு எழுத்து ஆய் நின்று ஒன்று உளது - அகரமுதலிய சூக்கும பஞ்சாக்கா ரூபமாய் அறிந்துவந்த தோர் அறிவு நிலைபெற்றுள்ளது,

அதுவே நீ - அவ்வறிவுதானே நீ என்பதறி,

அனைத்தும் நின்று - பிருதிவி தத்துவ முதலிய காரியம் அனைத்துமாய் உன்னோடு கலந்து நின்று,

இன்று - இப்பெத்த காலத்திலே,

தர்ப்பணம்போல் காட்டலால் - கண்ணுக்குக் கண்ணாடிபோல் உனக்கு அறிவை விளக்கி நிற்றலால்,

சார்மாயை நீ அல்லை - நின்னாற் சாரப்பட்ட மாயை நீ அல்லை

தற்பரமும் அல்லை - அதீதமாகிய சிவமும் நீ அல்லை,

தனி - நீ அவைகளுக்கு வேறாகிய ஒரு பொருள் எ-று.

கண்ணாடி அடுத்த தொன்றைக் காட்டி நின்றாற்போல, சடமாயுள்ள மாயை ஆன்மாவுக்கு இன்பதுன்பங்களை விளக்கி நிற்கும் என்றும், கண்ணாடி கண்ணுக்கு ஆதித்த பிரகாசம் அன்றி யாதொன்றையும் காட்டவொண்ணாத துபோல, ஆன்மா இந்திரிய முதலியவற்றினிடமாக நின்று சீவிக்கு மிடத்துக் கர்த்தாவால் அன்றிச் சீவியாதென்றும் கூறினாராயிற்று. எனவே முதல் மூன்றாயின. கர்த்தா இன்றிச்சீவியாதென்னும் பட்சத்துக்குக் கண்ணாடியும் அடுத்தபொருளும் ஆதித்தனும் ஆகிய சபட்சமும், அடுத்த பொருளும் ஆதித்தனும் இல்லாதபோது கண்ணாடிக்குக் காட்டுத்தன்மை இல்லை என்னும் விபட்சமும் காட்டியவாறு காண்க. (1)

Standing in intimate and inseparable connection with each and every part of the body and its organs, an intelligence of the form of Sri *Panchatchara* is found to exist which is not one or other of these. That Thou art. Thou art not *Maya*, with which thon art united, as it only enables thy uuderstanding to shine better as the eye-glasses make the eye see better. Thou art neither the Supreme Being ('Tat Param) who is above thyself and Maya. Thou art different from both. (1)

எனதுடலென்ரலி னான்மா உளதென்றது, என்பதி என்மனை என்றாற்போல, என்கை என்காலென நிற்பது உளதாகலின், அதுவே அவ்வான்மாவாம் என்றது: -

**எனது என்ற மாட்டின் எனது அலாது என்னாது**
**உனதலாது உன்கைகால் யாக்கை - எனதென்றும்**
**என்னறிவது என்று உரைத்து நீ நிற்றிகாண்**
**உன்னில் அவை வேறாம் உணர். 17**

(இ-ள்.) எனது என்ற மாட்டின் - பதி மனைவி முதலிய புறப்பொருளையே தனித்தனி எனதென்று சொல்லிக்கொண்டு நின்றற்போல,

எனது அலாது என்னாது - அப்பொருளை எனது அன்றென்று வேறுகாணாமல்,

உனது அலா உன் கை கால் ஆக்கை - உன்னுடையது அல்லாத கையையும் காலையும் உடம்பையும்,

எனது என்றும் என் அறிவது என்றும் - தனித்தனி என்னுடையதென்றும், அப்படி அறிந்த பாச அறிவை எனது அறிவென்றும்

உரைத்து நீ நிற்றிகாண் - சொல்லிக்கொண்டு நீ ஒருபொருளாக வேறு நிற்கின்றாய் காண்,

உன்னின் - ஆராய்ந்து பார்த்தாய் ஆயின்,

அவை - அக் கை கால் முதலியவை,

வேறு ஆம் உணர் - உனக் கன்னியமாம் அதனை அறிவாயாக எ-று.

அறியப்படுவன யாவையும் அறிந்து யானினைந்தேன், யான் செய்தேன், யான் சொன்னேன் என்று கூறுவது ஒன்று உளது ஆதலின், அதற்கு வேறாய் ஆன்மா ஒன்று உண்டென்றும், என் கை கால் யாக்கையென்று சொல்லுதல் ஒன்றுளது ஆதலின், அவற்றிற்கு வேறாய் ஆன்மா ஒன்று உண்டென்றும், கூறுதல் காண்க. எனது உடலென்றலின் உடம்புக்கு ஆன்மா வெறென்னும் பட்சத்துக்கு உலகவழக்கம் சபட்சமாயிற்று. (2)

As thou speakest of thy wife and thy house as thine and as identical with thyself, so thou speakest of the hands and thy feet and thy impression and sensation, as though they are not different from you. If examined deeply, thou wilt Gud the body, arns, &c. to be different from thyself. (2)

ஐம்புலன் அறிதலின் ஆன்மா உளதென்றது. ஐம்புலனாகிய சத்த, பரிச, ரூப, ரச, கந்தங்களை, இந்திரியங்கள் ஒன்றறிந்ததை ஒன்றறியாமையின், இவ்வைந்தினாலும் ஐம்புலன் அறிவது உளது ஆதலின், அதுவே அவ்வான்மாவாம் என்றது: -

**ஒன்று அறிந்தது ஒன்று அறியாது ஆகி உடல்மன்னி**
**அன்றும் புலனாய அவ் அஞ்செழுத்தை - ஒன்று அறிதல்**
**உள்ளதே ஆகில் அது நீ தனித்தனி கண்டு**
**உள்ளல் அவை ஒன்றல்ல ஓர். 18**

(இ-ள்.) ஒன்று அறிந்தது ஒன்று அறியாது ஆகி - ஒரு விடயத்தை அறிந்த இந்திரியம் மற்றொரு விடயத்தை அறியாததாகி,

உடல் மன்னி - உடம்பின் கண்ணே நிலைபெற்று,

அன்றும் புலன் ஆய் அவ்வஞ்செழுத்தை - அப்படி மாறுபடும் சத்தமுதலிய புலன்களைச் சூக்கும பஞ்சாக்கரத்தாற் செலுத்தப்பட்டு ஆராய்ந்தறிகின்ற அவ் வைம்பொறிகளின் தொழிற்பாட்டை,

அறிதல் ஒன்று உள்ளதே ஆயின் - உருவ முதலியவற்றை அறிவதோர் பொருள் உள்ளதேயாம் எனின்,

அது நீ - அவ்வாறு உணர்வது யாது? அதுவே நீயாகிய ஆன்மா,

அவை தனித்தனி கண்டு உள்ளல் - அவ்வந்திரியங்கள் தத்தம் விடயங்களை வேறு வேறு கண்டு அறிதல் மாத்திரையே அன்றி எல்லாவற்றையும் அறியமாட்டாமையால்,

ஒன்று அல்லை ஓர் - அவ்விந்திரியங்களில் நீ ஒன்றல்லை, அதனை ஆராய்ந்து அறிவாயாக எ-று.

செவியாதி இந்திரியங்கள் சத்தாதி விடயங்களில் அழுந்திப்பு சித்து அறிந்து பின்பு நீங்கினவிடத்து, அவற்றைக் கருதி நிற்பது யாது அதுவே நீயாகிய ஆன்மா என்று அறிவாய் என்றதாம். (3)

If there is something which understands the actions of all the five senses in the body which are moved by *Sri Panchatchara* and of which when experiencing the sensations, one sense does not feel what another sense feels, that something thou art. As these senses except feeling each differently have no thought that they feel, understand that thou art not one of them. (3)

ஒடுக்கமறிதலின் ஆன்மா உளதென்றது, நனவின்கட் கனவுகண்டாம் என்றும், கண்டிலம் என்றும் நிற்பது உளது ஆதலின், அதுவே அவ்வான்மா வாம் என்றது: -

**அவ்வுடலின் நின்றுயிர்ப்ப ஐம்பொறிகள் தாம்கிடப்பச்**
**செவ்விதின் அவ்வுடலிற் சென்று அடங்கி - அவ்வுடலின்**
**வேறொன்று கொண்டு விளையாடி மீண்டு அதனை**
**மாறல், உடல் நீ அல்லை மற்று.** 19

(இ-ள்.) அவ்வுடலில் நின்று உயிர்ப்ப - முன்னர் நீ அன்றென்று சொல்லி வந்த தூல உடம்பில் நின்று பிராணவாயு உச்சுவாச நிச்சுவாசஞ்செய்ய,

ஐம்பொறிகள் தாம்கிடப்ப - செவி முதலாகிய பொறிகள் ஐந்தும் சேட்டை இன்றி ஒழிந்து கிடக்க,

செவ்வி தின் அவ்வுடலில் அடங்கிச் சென்று - ஆன்மாவானது வருத்தம் இன்றித் தொழிற்பாடெல்லாம் அடங்கி அவ்வுடம்பிலே சென்று,

அவ்வுடலின் வேறு ஒன்று கொண்டு - அந்தத் தூலவுடம்பு போல அதனின் வேறாயதோ ருடம்பை எடுத்துக்கொண்டு,

விளையாடி - கனவிலே கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று விளையாடி,

மீண்டு அதனை மாறல் - மீள அதனை மாறிச்செல்லுதலால்,

உடல் நீ அல்லை மற்று - நீ அந்தச் சூக்குமதேகம் அல்லை, அதனின் வேறு ஆவை எ-று.

இது சொப்பனத்தில் நிகழு முறைமைபற்றி ஆன்மா உளதென்று சாதித்தது. (4)

When, in sleep, the senses which are alive in the body, lose their action and the body loses all its external actions, thou enterest another body, (*Sukshuma Sarira*) inside thy own, in dream and undergoest other experiences of sight, hearing and the like, pleasure,

and pain and the like and then changest it for the visible body (*Sthula Sarira*) when waking. Thou art not therefore the *Sukshuma Sarira*; Thou art different. (4)

கண்படில் உண்டிவினையின்மையின் ஆன்மா உளதென்றது, ஒடுங்கின விடத்து இன்ப துன்பம் சீவனம் பிரகிருதிக்கு இன்மையின் ஒடுங்கா தவிடத்து இன்பதுன்பம் சீவியா நிற்பது உளது ஆதலின், அதுவே அவ்வான்மாவாம் என்றது: -

**கண்டறியும் இவ்வுடலே காட்டு ஒடுங்கக் காணாதே**
**உண்டிவினை இன்றி உயிர்த்தலால் - கண்டறியும்**
**உள்ளம் வேறு உண்டு ஆய் ஒடுங்காது உடல் நண்ணில்**
**உள்ளதாம் உண்டிவினை ஊண்.** 20

(இ-ள்.) கண்டு அறியும் இவ் வுடவே - கண்டு அறிதற்கு இடமாகிய இவ்வுடம்பின் கண்ணே,

காட்டு காணாதே ஒருங்கக் - காட்டுகின்றனவாகிய கருவிகள் தொழிற்படாமல் ஒடுங்க,

உண்டி வினை இன்றி -- ஒடுங்கினவிடத்தில் ஊணும் செயலும் பிரகிருத்திக்கு இல்லையாகவும்,

உயிர்த்தலால் - பிராணவாயு நிலைபெற்று இயங்குதலால்,

கண்டு அறியும் உள்ளம் - கண்டு அறியும் தன்மையையுடைய ஆன்மாவானது,

வேறு உண்டு - பிராணவாயுவில் நின்றும் வேறாயுண்டு,

ஆய் - ஆராய்ந்தறி,

ஒடுங்காது உடல் நண்ணின் - அவ்வுயிர் ஒடுங்காது அந்த உடம்பின்கண் எய்திற்றாயின்,

வினை உண்டி ஊண் உள்ளது ஆம் - உண்டியும் செயலும் உடையதாம் எ-று.

சுழுத்தி துரியங்களின் இயல்பு பற்றி உயிருண்மை சாதிக்கப்பட்டது. இது வரையில் சார்மாயை நீயல்லை என்றதனை வலியுறுத்தியவாறு. (5)

(In profound sleep) the body, which has cognition of the world, losing it, has no feeling of pleasure or pain and no movements, though the breath (respiration) fully plays. Hence, there is an intelligence which has such perception other than breath. Understand that when the soul is active in the body, it has such feelings and movements. (5)

உணர்த்த வுணர்தலின் ஆன்மா உளதென்றது, அவன் "அறிந்தாங்கறிவனென்று அறிவிக்க அறிந்து, உபதேசியாய் நிற்பது உளது ஆதலின், அதுவே அவ்வான்மாவாம் என்றது: -

**அறிந்தும் அறிவதே ஆயும் அறியாது**
**அறிந்ததையும் விட்டு அங்கு அடங்கி - அறிந்தது**
**எது? அறிவும் அன்றாகும் மெய்கண்டான் ஒன்றின்**
**அது அது தான் என்னும் அகம்.** 21

(இ-ள்.) அறிந்தும் - கருவிகளோடுகூடி விடயங்களை அறியுமிடத்து ஒன்றனை அறிந்தும்,

அறிவதே ஆயும் - ஒன்றனை அறியப் புகுவதாயும்,

அறியாது - ஒன்றை அறியாது ஒழிந்தும்,

அறிந்ததையும் விட்டு - அறியப்பட்ட விடயத்தையும் இடையீடின்றி அறியமாட்டாது விட்டு,

அங்கு அடங்கி - அவ்விடத்து அடங்கி,

அறிந்தது எது - அப்படி அறிந்துவந்த பொருள் யாது,

அறிவும் அன்று ஆகும் - அது எல்லாவற்றையும் எக்காலத்திலே அறிகின்ற பேரறிவாகிய கர்த்தாவும் அன்றாம்,

மெய்கண்டான் - சத்தியத்தை தரிசித்தவன்,

ஒன்றின் - மனம் ஒருங்கி ஆராயுமாயின்,

அது அது தான் என்னும் அகம் - அறிவிற்கும் வேறாய் அது அதுவே தானெனச் சார்ந்ததின் வண்ணமாய் நின்றறியும் இயல்பையுடைய உயிராம். எ-று.

அறியாது என்புழி எண்ணும்மை விகாரத்தால் தொக்கது.

கர்த்தா சருவஞ்ஞன் சுகதுக்கங்களில்லாதவன் ஆதலாலும், ஆன்மா கிஞ்சிஞ்ஞன் அறிவிக்க வறிபவன் அவத்தைகளிலே அகப்பட்டுச் சுக துக்கங்களை அனுபவிப்பவன் ஆதலாலும், சீவான்மாவும் பரமான்மாவும் ஒன்றென்ற வாதியை மறுத்து வேறென்றதாம். - (6)

When becoming conscious of objects, it only apprehends one at a time, and when proceeding to apprehend another, becomes unconscious of what it knew before, and when it undergoes the five avasthas it becomes perfectly unconscious of everything. What is it

which so apprehends? It is not Intelligence (*Arivu*). If the truth-seeker examines, it is the soul whose understanding becomes identical with what it becomes united to. (6)

மாயா வியந்திர தனுவினுள் ஆன்மா உளது என்றது, அவைதாம் வெவ்வேறு பெயர்பெற்று நிற்றலா னென்பது. மாயா காரியங்களால் யாக்கப்பட்டியன்ற சூத்திரப் பாவைபோலும் உடம்பின் கண்ணே அம்மாயாகாரியங்கள் வெவ்வேறுபெயர் பெற்று நிற்றலால், அவ்வுடம்பிற்கு வேறாய் ஆன்மா உளது என்றது: -

**கலைஆதி மண் அந்தம் காணில் அவை மாயை**
**நிலையாவாம் தீபமே போல - அலையாமல்**
**ஞானத்தை முன்னுணர்ந்து நாடில் அது தனுவாம்**
**தானத்தின் வேறாகுநம் தான்.** 22

(இ-ள்.) காணில் கலை ஆதி மண் அந்தம் - ஆராய்ந் தரியப் புகுந்தால் கலையாதிகளும், மனாதிகளும், சோத்திரா திகளும், வாக்காதிகளும், சத்தாதிகளும், வானாதிகளும் தத்துவங்களே யாம்,

அவைமாயை நிலையா ஆம் - இவை மாயா காரியங்கள் ஆதலால் நிலைபெறுதல் இன்றித்தோன்றி நின்றழிவனவாம்,

தீபமேபோல - விளக்குப்போல,

ஞானத்தை அலையாமல் - அவை தொக்க விடத்துத் தோன்றுவதாகிய ஞானத்தின் இயல்பை அசையாமல் கருத்தை ஒருக்கி,

முன் உணர்ந்து - முன்னர் அறிந்து,

நாடில் அது தனு ஆம் - விசாரித்துப் பார்த்தால் அந்தக் கலையாதி மண்ணந்தம் உயிர்க்குடம்பாம்,

தான் அத்தின் வேறு ஆகும் - உயிர் அவ்வுடம்பின் வேறாம் எ-று

தான் - அசைநிலை.

கண் விளக்கோடுகூடி அல்லது அறியாதது போல, சீவன் தூல சூக்ஷ்ம சரீரத்துடனே கூடி நின்று அல்லது அறியாது என்பதாம். கண் விளக்கின் வேறானாற்போல உயிர் உடம்பின் வேறாம். உயிர் உடம்பின் வேறாதலென்னும் பட்சத்திற்குக் கண்ணும் விளக்கும் சபட்சமாயினவாறு காண்க.

(7)

If the intelligence is the result of the conjunction of the bodily organs and senses, these on examination, resolve themseives into the *Tatwas* which begin with *Kula* and end with eartla, and these are products of *Maya* which is not permanent (changeable or destructible.) If, after understanding attentively the nature of intelligence, this com-

bination is examined, it is simply the body (*Sthula*) and (*Sukshuma*) which is to the soul what ihe lamplight is to the eye. Hence the soul or intelligence is different from the body.

(7)

**மூன்றாஞ் சூத்திரம் முற்றிற்று.**

## நான்காம் சூத்திரம்.

இதுவும் ஆன்மப் பிரகாசம் உணர்த்துதல் நுதலிற்று. இச்சூத்திரம் வேறு கூறவேண்டியது என்னை எனின், மேற் பிரமாணத்தால் அறிவிக்கப்பட்ட ஆன்மாவுக்கு இலக்கணங் கூறுகின்றது: -

**அந்தக் கரணம் அவற்றினொன்று அன்று அவை**
**சந்தித்தது ஆன்மாச் சகல மலத்து உணராது**
**அமைச்சு அரசு ஏய்ப்ப நின்று அஞ்ச அவத்தைத்தே.**

(இ-ள்.) அந்தக்கரணம் அவற்றின் ஒன்று அன்று - அந்தக்கரணமாகிய மனம், புத்தி, ஆங்காரம், சித்தம் என்னும் நான்கனுள் ஆன்மா ஒன் றன்று,

ஆன்மா அவை சந்தித்தது - அவ்வந்தக்கரணங்களுடனே ஆன்மா கூடிநின்று,

சகசமலத்து உணராது - செம்பிற் களிம்புபோலச் சகசமாய் நிற்கின்ற ஆணவமலத்தாலே ஒன்றையும் அறியாது,

அமைச்சு நின்று அரசு ஏய்ப்ப - மந்திரிகளோடுகூடிநின்று தன்தொழிலை நடாத்தும் அரசன் போல,

அஞ்சவத்தைத்தே - சாக்கிரமுதலிய அஞ்சவத்தையும் பொருந்தும் எ-று.

ஆன்மா அந்தக்கரணங்களுள் ஒன்றன்று ஆயினும், அமைச்சரோடு கூடித் தன்தொழில் நடாத்தும் அரசன்போல, சகசமலத்தால் உணர்வின்மையின் உணர்வு நிகழுமாறு அவ்வந்தக்காரணங்களோடு கூடி நின்று அஞ்சவத்தை உடைத்தாம் எனக்கொள்க.

அஞ்சவத்தை அடைதலாவது, பூவுலகத்து அரசனானவன் தன் மந்திரி முதலானவர்களோடும் சேனையோடும் பவனிவந்து தன்னில் லிடத்திற் புகும் போது வாய்தல் தோறும் நிறுத்தத் தக்கவரை விட்டு நீங்கி, உள் வாயிலுக்குக் காவலும் வைத்து, பின்பு தானொருவனே அந்தப் புரத்திற் புகுதுவன். அது போல, ஆன்மாவும் தூல சூக்கும சரீரத்திலே நின்று சாக்கிர சொப்பனா வத்தைகளில் நிறுத்தத் தக்க கருவிகளை நிறுத்திப் பிராண வாயுவைக் காவலாக வைத்துச் சுழுத்தியாதிகளிற் செல்லுத்தலாம்.

4th Sutra. The soul is not one of the *Andakarana*. It is not conscious when it is in conjunction with *Anavamala*. It becomes conscious only when ite meets the *Andakarana*, just as a king understands through his ministers. The relation of the soul to the five *Avastha* is also similar.

அந்தக் கரணம் அவற்றின் ஒன்றன்று என்றது. அவை தாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான், அந்தக்கரணங்கள் தமக்குக் கீழுள்ளவற்றை நோக்கும் இடத்துச் சித்தாயும்; தம்மை நோக்கும் இடத்து அசித்தாயும் நிற்றலால் என்றும் சித்தாயே நிற்கும் ஆன்மாவானது அந்தக்கரணங்களுள் ஒன்றன்றாம்: -

**மனம் ஆதியால் உணர்தல் மன்னு புலன்கள்**
**மனம் ஆதி மன்புலனின் அல்லன் - மனமேல்**
**உதித்து ஒன்றை உள்ளம் உணர்தல் அதனில்**
**உதிக்கும் கடல் திரையை ஒத்து.** 23

(இ-ள்) மனம் ஆதியால் உணர்தல் மன்னு புலன்கள் - மனம் புத்தி, ஆங்காரம், சித்தங்களாலே பொறிகளின் வழியாக அறியப்படுவன நிலைபெற்ற விடயங்களாம்.

மனம் ஆதி மன்புலனின் அல்லன் - மனமுதலியன அவ்விடயங்களின் வேறானாற்போல, ஆன்மாவும் மன முதலியவற்றின் வேறாம்,

மனமேல் உதித்து ஒன்றை உள்ளம் உணர்தல் - மனத்துக்கு மேலாகிய புத்தியில் தோன்றியதொன்றை ஆன்மா அறிதலாம்,

அதனின் - அதனாலே,

கடல் திரையே ஒத்து உதிக்கும் - அந்த இரண்டு உணர்வும் கடல் திரைபோலப் பரம்பரையாய் ஆன்மாவினிடத்து வந்து உதிக்கும் எ-று.

கடற்கரை ஆன்மா, திரைகள் பொறிஉணர்வும், அந்தக்கரண உணர்ச்சியும், திரை கரை சேர்தல் இவ்வுணர்ச்சிகள் ஆன்மாவின்கட் சேர்தலாம், பொறி உணர்வும், அந்தக்கரண உணர்வும் ஆன்ம உணர்வின்கண் வந்துசேரும் என்னும் பட்சத்திற்குக் கடற்றிரை கரைசேர்தல் சபட்சம் ஆயினவாறு காண்க.

(1)

*Manas* and other *Andakarana* bave perception of permanent senisations. The soul perceives the product of the perception by the *Buddhi* after such *mental* perceptions. These perceptions by *Manas* and *Buddhi* reach the soul as the waves rising in the sea reach the shore. As the *Andakarana* are different from the permanent sensations, so the soul is different from the *Andakaırana*. (1)

அவை சந்தித்தது ஆன்மா என்றது, அந்தக்கரணங்களின் இயல்பும், அவற்றிற்கு ஆன்மா வேறென் பதுங் கூறுகின்றது: -

**சிந்தித்து ஆய்ச் சித்தம் தெளியாதாய் ஆங்காரம்**
**புந்தியாய் ஆய்ந்து மனமாகிப் - பந்தித்து**
**வெவ்வேறு தானே துணிந்து உள்ளம் இவ்வேறாம்**
**அவ்வேறாம் போது போல் ஆங்கு.** 24

(இ-ள்) சித்தம் ஆய்ச் சிந்தித்து - சித்தம் ஆகி நின்று சிந்தித்தும்,

ஆங்காரம் ஆய் தெளியாது - ஆங்காரமாய் நின்று ஒன்றெனைத் தெளிவேனெனத் தெளிவு பிறவாது எழுந்தும்,

புந்தி ஆய் ஆய்ந்து - புத்தியாய் நின்று இது இன்னதெனத்தெளிந்தும்,

மனம் ஆகிப் பந்தித்து -- மனமாய் நின்று இஃதின்ன தாகுமேனப் பற்றியும்,

வெவ்வேறே துணிந்து உள்ளம் இவ்வேறுஆம் - இப்படி வெவ்வேறாக உணர்தலால் புருடன் இவ்வந்தக்காணங்களின் வேறாவன்,

போது அவ்வேறு ஆம் போல் - சூரியன் முதலியவைகளோடு கூடிநின்று நாழிகை முதலிய பகுப்புகள் செய்யும் காலதத்துவம் அச்சூரியன் முதலியவற்றின் வேறானாற்போல,

ஆங்கு - மனமாதியா லுணரும் அவ்விடத்து எ-று.

ஆன்மா சித்தமுதலிய அந்தக்கரணங்களோடு கூடிநின்று சிந்தித்தல் முதலியவாகஉணர்ந்தும், தான் அவ்வந்தக்காணங்களாகாது அவற்றிற்கு வேறாவன் என்னும் பட்சத்துக்கு, காலதத்துவம் சூரியன் முதலியவற்றோடு கூடிநின்று நாழிகை நாள் முதலிய பாகுபாடு செய்தும், அச்சூரியன் முதலியனவாகாது அவற்றிற்கு வேறாகும் என்பதுசபட்சமாயினவாறு காண்க. தான்- அசை. (2)

While perceiving so, the soal as *Chittam* considers; as *Manas* it doubts; as *Ahankaram*, it wrongly concludes; as *Buddhi* it determines properly. As it thus apprehends differently when it is united to each, it is different from them, just as the sun, though marking the divisions of time, is different from it. (2)

அந்தக் கரணங்களுடனின்று செலுத்தும் அக்கரங்கள் இவையென்பதும், அவற்றால் அறிவு மாறிமாறித் தோன்றும் என்பதும் கூறுகின்றது: -

**அகாரம் உகாரம் அகங்காரம் புத்தி**
**மகாரம் மனம் சித்தம் விந்து - பகாது இவற்றை**
**நாதம் உளவடிவாம் நாடில் பிரணவமாம்**
**போதம் கடற்றிரையே போன்று.** 25

(இ-ள்) அகங்காரம் அகாரம் புத்தி உகாரம் - ஆங்காரத்தை அகாரம் செலுத்தும், புத்தியை உகாரம் செலுத்தும்,

மனம் மகாரம் சித்தம் விந்து - மனத்தை மகாரம் செலுத்தும் சித்தத்தை விந்து செலுத்தும்,

இவற்றை பகாது உள்வடிவு நாதம் ஆம் - இவைகளைப் பகுக்காமல் ஆன்மாவை நாதம் செலுத்தும்,

நாடின் பிரணவம் ஆம் - ஆராயுமிடத்தில் பிரணவம் ஆகும்,

போதம் - இவை கூடினவிடத்தில் ஆன்மாவுக்கு உண்டாகும் அறிவு உதித்தும் ஒடுங்கியும் வருதல்,

கடல் திரையேபோன்று - கடலிடத்துப் புதிது புதிதாக அலைகள் தோன்றியும் ஒடுங்கியும் வருதல்போலும். எ-று.

பகாதிவற்றை என்பதனை நாடினென்பதனோடு கூட்டிப்பொருள் கொள்க.

அந்தக்கரணங்களையும், ஆன்மாவையும், செலுத்தும் அக்கரங்களைப் பகாது ஆராயும் இடத்து, அவ்வக்கரங்கள் பிரணவம் ஆம். அவ்வவதரத்தில் ஆன்மாவுக்கு உணர்வு நிகழ்தல் கடற்றிரைபோலும் ஆம். அக்கரங்கள் அந்தக்கரணங்களை வெவ்வேறு செலுத்துதல்பற்றி ஆன்மாவினிடத்தில் உணர்வு உதித்தொடுங்கி வருதல் என்னும் பட்சத்துக்குக் கடலினிடத்துப் புதிது புதிதாய்த் திரைகள் தோன்றியும் ஒடுங்கியும் வருதல் சபட்சமாயினவாறு காண்க.

(3)

The letter 'A' is the symbol of *Ahankaram*; 'U' that of *Buddhi*; “M” that of *Manas*; *Vinthu* that of *Chittam*; and *Natham* which is inseparable from all these letters, is the symbol of the soul. The five letters constitute *Pranava*; when examined, consciousness arises when the soul and andakarana meet, just as the tides rise and fall during the conjunction of the sun and the moon. (3)

அக்கரங்கள் சடம் ஆகையால், அவற்றை அதிதெய்வங்கள் அதிட்டிக்கு முறைமை கூறுகின்றது: -

**எண் நிலவு ஓங்காரத்து ஈசர் சதாசிவமாம்**
**நண்ணிய விந்துவொடு நாதத்து - கண்ணில்**
**பகர் அயன் மாலோடு பரமன் அதிதெய்வம்**
**அகர உகரம் மகரத் தாம்.** **26**

(இ-ள்.) எண் நிலவு ஓங்காரத்து - எண்ணத்தின்கண் விளங்கிய பிரணவத்தில்,

ஈசர் சதாசிவம் ஆம் - ஈசரும் சதாசிவமும் அதிதெய்வங்களாம்,

நண்ணிய விந்துவொடு நாதத்து - பொருந்திய விந்துநாதங்களுக்கு,

கண்ணின் - ஆராயுமிடத்தில்,

பகர் அயன்மாலோடு பரமன் அதி தெய்வம் - சொல்லப்பட்ட பிரமாவும்விட்டுணுவும் உருத்திரனும் அதிதெய்வங்கள்,

அகர உகரம் மகரத்து - அகார் உகார மகாரங்களுக்கு,

ஆம் - ஆகும் எ-று.

அந்தக்காணங்கள் அவ்வக்கரங்களோடு கூடிநிற்பினும், அவை சடமாகையால், அவற்றை அதிட்டிக்கும் அதிதெய்வங்களை ஒழிந்து பிரேரகப்படா என்பதாம். மனாதிகளுக்குச் சொரூபம் அக்கரமென்பதும், அக்கரங்களுக்கு அதிதேவதைகள் சதாசிவன் முதலாயினார் என்பதும், சாத்திரப்பிரமாணமாம் என அறிக. (4)

*Iswara* and *Sadasiva* are the deities respectively of *Vinthu* and *Natham*; *Brahma*, *Vishnu* and *Rudra* are deities respectively of 'A' ‘U' and 'M'. (4)

ஆன்மா சகசமலத்தினால் உணர்வின்று என்றது, அது தான் ஞான திரோதமாய் மறைத்துக்கொண்டு நிற்றலான், அந்தச் சகசமலமாவது ஞானத்திற்குத் திரோதமாய் அதனை மறைத்துக்கொண்டு நிற்றலினால், ஆன்மா சகசமலத்தினால் உணர்வின்று என்றதாம்: -

**மாயா தனுவிளக்காம் மற்று உள்ளம் காணாதேல்**
**ஆயாதாம் ஒன்றை அதுவதுவாய் - வீயாத**
**வன்னிதனைத் தன்னுள் மறைத்து ஒன்றாம் காட்டம் போல்**
**தன்னை மலம் அன்றணைதல் தான். 27**

(இ-ள்.) மாயா தனுவிளக்குஆய் - மாயா காரியமாகிய தேகத்தைத் தனக்கு விளக்காகக்கொண்டு,

மற்று உள்ளம் - மற்று அந்தத் தேகத்துக்கு அன்னியமாகிய ஆன்மாவானது,

காணாதேல் - காணாதாயின்,

ஒன்றை ஆயாது ஆம் - ஒரு விடயத்தையும் அறியமாட்டாதாம்,

அது அது ஆய் - விறகு முதலியவைகளுள் அது அது ஆய் நின்று,

வீயாத வன்னிதனை - கெடாத நெருப்பை,

தன்னுள் மறைத்து - தனக்குள்ளே மறைத்து,

ஒன்று ஆம் காட்டம்போல் - ஒன்றே யாய் நிற்கும் விறகுபோல,

தன்னை அன்று மலம் தணை தல் தான் - ஆன்மாவை அநாதியிலே தானே ஆணவமலம்பற்றி மறைத்து நிற்றல் தான் எ-று.

ஆன்மபோதத்தை ஆணவமலம் மறைத்து நின்றதென்னும் பட்சத்துக்கு வன்னிதனைத் தன்னுள் மறைத்தொன்றாங் காட்டம் சபட்சமாயினவாறு காண்க. ஆணவமலம் இருளும், மாயாமலம் விளக்கும் போல் வனவாம் என அறிக. ஆணவமலம் உள்ளளவும் மாயாதேகம் விளக்காய் நிற்கும். ஞான சூரியனாலே ஆணவமலம் நீங்குமிடத்து மாயாதேகம் விளக்கன்றாம் என அறிக.

(5)

The soul will not know any thing, unless it receives the light through its body caused by *Maya*, as the eye apprehends objects by the light of the lamp. *Anavamala* exists in the soul eternally, becoming one with it aud concealing its lustre as does the firewood conceal the heat or fire present in it. (5)

"அமைச்சர சேய்ப்பநின் றஞ்சவத்தைத்தே" என்றது, ஆன்மா சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதமாயுள்ள பஞ்சாவஸ்திதனாய் நிற்கும் என்றது. அதுதான் மலசொரூபத்தில் மறைந்து அரூபசொரூபமாய் நிற்றலான்: -

**ஒன்று அணையா மூலத்து உயிர் அணையும் நாபியினில்**
**சென்றணையும் சித்தம் இதயத்து - மன்ற ஏய்**
**ஐயைந்தாம் நல்நுதலில் கண்டத்தின் வாக்காதி**
**மெய்யாதி விட்ட அகன்று வேறு.** 28

(இ-ள்) ஒன்று அணையா மூலத்து - கருவிகளுள் ஒன்றும் அணையாது துரியாதீதமெனப்படும் மூலாதாரத்தில், ஆன்மா ஒன்றே நிலைபெறும்.

நாபியினில் உயிர் அணையும் - துரியத்தான மெனப்படும் உந்தியில் புருடதத் துவத்தோடு பிராணவாயு கூடித்தொழிற்படும்,

இதயத்தில் சென்று சித்தம் அணையும் - சுழுத்தித்தானம் எனப்படும் இதயத்தில் முன்னர்க் கூறப்படும் புருடதத்துவம் பிராணவா யு ஆகிய இவைகளோடு கூடிச் சித்தம் தொழிற்படும்,

கண்டத்து மன்றவே ஐ யைந்து ஆம் - சொப்பனத்தானம் எனப்படும் கண்டத்தில் தேற்றமாகப் பொருந்திய இருபத்தைந்து கருவிகள் தொழிற்படும், அவையாவன, வசனாதி ஐந்தும், சத்தாதி ஐந்தும் பிராணாதி வாயுக்கள் பத்தும், மனாதி அந்தக்கரணம் நான்கும், புருடன் ஒன்றும் என்க.

நல்நுதலில் வாக்கு ஆதி மெய் ஆதி - சாக்கிரத்தானம் எனப்படும் இலாடத்தில் வாக்காதி கன்மேந்திரியம் ஐந்தும், மெய்யாதி ஞானேந்திரியம் ஐந்தும் ஆகிய இப்பத்தோடும் (அவ்விருபத்தைந்து கருவிகளும்) தொழிற்படும்.

விட்டு அகன்று வேறு - விட்டு நீங்கி வேறாம் எ-று.

கண்டத் துவாக்காதி மெய்யாதி விட்டகன்று வேறைந்தாம் எனவும், நன்னுதலில் வாக்காதி மெய்யாதி ஐயைந்தாம் எனவும் கொண்டு கூட்டிப் பொருள் கொள்க. (6)

In the *Jakra Avastha* of the soul, when it is in the region of the forehead it has 35 active organs including the 10 external senses. In its *Swapna Avastha*, when in the region of the throat, it has 25 organs excluding the 10 external organs. In the *Sushupti Avastha* when in the region of the heart, it has 3 organs including *Chittam*. In. *Thuria Avastha*, when in the region of the navel, it has only two, namely *Purusha* and *Pranavayu*; In *Thuriyathitha Avastha*, when in the region of *Mulathara* it is pure *Purusha* having none of these organs. (6)

அதீதத்தை அடைந்த ஆன்மா அங்கு நின்று மறுபடியும் அப்படியே அங்கங்கு அவத்தைப்பட்டு மேற்சென்று இலாடத்தானத்தல சாக்கிர சாக்கிர முதலிய ஐந்து அவத்தைப்படுமென்றும் சுத்தாவத்தையும் இவைபோலுண் டென்றும் கூறுகின்றது: -

**இலாடத்தே சாக்கிரத்தை எய்திய உள்ளம்**
**இலாடத்தே ஐந்தவத்தை எய்தும் - இலாடத்தே**
**அவ்வவ இந்திரியத்து அத்துறைகள் கண்டு அதுவே**
**அவ்வவற்றின் நீங்கல் அது ஆங்கு.** **29**

(இ-ள்) இலாடத்தே சாக்கிரத்தைஎய்திய உள்ளம் - இலாடத்தர்னத்திலே சாக்கிர அவத்தையைப் பொருந்தின ஆன்மா, கீழாலவத் தை பொருந்தின துபோல,

இலாடத்தே ஐந்து அவத்தை எய்தும் - அந்த இலாடத் தானத்திலேதானே சாக்கிரச் சாக்கிரமுதலிய ஐந்து அவத்தையும் பொருந்தும்,

இலாடத்தே அவ்வவ இந்திரியத்து அத்துறைகள் கண்டு -அந்த இலாடத் தானத்தே அந்தந்த இந்திரியங்களால் அவ்வவ்விடயங்களை உணர்ந்து,

அதுவே - அப்போது அப்போதே,

அவ்வவற்றில் நீங்கல் - அவ்வவ்விடயங்களினின்று நீங்குதல் போல,

அது ஆங்கு - அவ்விடத்துக் கூறப்படும் சுத்தாவத்தையுமாம் எ-று.

இவற்றை உபதேசத்தாலறிக. (7)

The soul, which in *Jakra avastha* is in the region of the forehead, undergoes all the five *avastha* in the same region. That is to say, it becomes conscious of each perception through each of the organs and, at the same time, becomes separated from them. *Sutta avastha* are like these five in mumber. (7)

**நான்காம் சூத்திரம் முற்றிற்று.**

---

# ஐந்தாம் சூத்திரம்.

இச்சூத்திரம் இவ் வான்மாக்களிடத்துத் தமது முதலுபகாரம் உணர்த்துதல் நுதலிற்று: -

**விளம்பிய உள்ளத்து மெய்வாய் கண்மூக்கு**
**அளந்து அறிந்து அறியா ஆங்கு அவை போலத்**
**தாம்தம் உணர்வின் தமியருள்**
**காந்தம் கண்ட பசாசத்து அவையே.**

(இ-ள்) விளம்பிய உள்ளத்து மெய்வாய் கண் மூக்கு - முன் சொல்லப்பட்ட ஆன்மாவாலே மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஞான இந்திரியங்கள்,

அளந்து அறிந்து அறியா - தந்தம் விடயங்களை இஃதின்னதென்று அளவிட்டறிந்தும், அப்படி அறிகின்ற தம்மையும், தம்மைச் செலுத்தும் உயிரையும் அறியமாட்டா,

ஆங்கு அவைபோலத் தாம் தம் உணர்வின் றமி அருள் - அவ்விந்திரியங்களைப்போல, உயிர்களும் அவத்தையினின்று வினைப்பயன்களை அறிந்து அனுபவிக்கும் தம்மையும் தம்மைச் செலுத்தும் திருவருளையும் அறியமாட்டா)

காந்தம்கண்ட பசாசத்தவையே - காந்தங்கண்ட இரும்பு அதன் சந்தி திமாத்திரையில் வலித்துக்கொள்ளப் படுவதுபோல, கர்த்தாவின் சந்நிதிமாத்திரையினால் உயிர்கள் அப்படி யுணர்தலாம். ஆதலால் அதுபற்றிக் கர்த்தா விகாரியாகான் எ-று.

காந்தம் தன் சந்நிதியில் இரும்புசேட்டிக்கையில் விகாரம் இன்றி இருந்தாற்போல, கர்த்தாவம் தன் சந்நிதியில் ஆன்மாக்கள் சேட்டிக்கையில் விகாரம் அற்றிருப்பானென அறிக. பொறிகள் ஆன்மாவாலே அறிந்தும் அப்படி அறிகின்ற தம்மையும், அறியும்படி செலுத்துகின்ற உயிரையும் அறியமாட்டா என்பது உபமானம். உயிர்கள் அஞ்சவத்தையினின்று வினைப்பயன்களை

அறிந்து அனுபவிக்கும் தம்மையும், தம்மைச் செலுத்தும் திருவருளையும் அறியமாட்டா என்பது உபமேயமென அறிக.

5th Sutra. The senses while perceiving the object cannot perceive themselves or the soul; and they are perceived by soul. Similarly, the soul while perceiving cannot perceive itself (while thinking cannot think thought) and God. It is moved by the *Arul Sakti* of God, as the magnet moves the iron, while Himself remains immoveable or unchangeable.

விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண் மூக்களந் தறிந்த
றியா என்றது, ஆன்மா ஒற்றித்துக் காணின் அல்லது அவை
ஒன்றையும் விடயியா. ஆகலான், ஈண்டு ஐயுணர்வுகளால்
ஆன்மா உணருமென்றது: -

**ஐம்பொறியை ஆண்டு அங்கு அரசாய் உளம் நிற்ப**
**ஐம்பொறிகள் உள்ளம் அறியாவாம் - ஐம்பொறியில்**
**காணாதேல் காணாது காணுமும் உளம் காணாதேல்**
**காணாகண் கேளா செவி.**

(இ-ள்.) உளம் ஐம்பொறியை ஆண்டு அங்கு அரசு ஆய் நிற்ப - ஆன்மா ஐந்திந்திரியங்களையும் அரசன் இருமஞ்செய்வாரை ஆளுதல்போல் ஆண்டு இலாடத்தானத்தே நிற்கையினாலே,

ஐம்பொறிகள் உள்ளம் அறியா ஆம் - அவ்விந் திரியங்கள் ஐந்தும் ஆன்மாவை அறியமாட்டாவாம்,

பொறியின் காணாதேல் காணாது - இந்திரியங்களில் நின்று அறியாதாயின், ஆன்மா ஒன்றையும் அறியாது.

காணும் உளம் காணாதேல் - இப்படி அறிகிற ஆன்மா அவ்விந்திரியங்களைப் பற்றாதாயின்,

கண்காணா செவிகேளா - கண்ணுங்காணா, செவியுங்கேளா, ஏனைய பொறிகளுந் தத்தம் விடயங்களை விடயியாவாம் எ-று.

இதில் ஆன்மா இந்திரியங்களுடனே கூடி நின்று காணும்பட்சமும், இந்திரியங்களாலே அறியாதாயின் அறியாதென்னும் விபட்சமுங் கூறியவாறு காண்க. (1)

The soul has regal sway over the five senses; these are not conscious of the soul and its sway, and the soul itself will have no consciousness except through the five Senses; but if the soul itself is not active the eye though seeing cannot see, and the ear though hearing, cannot hear. (1)

காந்தங்கண்ட பசாசத்தவையே என்றது, இவ்வான்மா தன்னாலே உணரும் இந்திரியங்களைப்போல, தானும் தன்னை உணராது நிற்றலால், இதுவும் தமது முதலாலே உணருமென்றது: -

**மன்னுசிவன் சந்நிதியில் மற்று உலகம் சேட்டித்தது**
**என்னும் மறையின் இயல்மறந்தாய் - சொன்ன சிவன்**
**கண்ணா உளம் வினையால் கண்டு அறிந்து நிற்கும்காண்**
**எண்ணான் சிவன அசத்தை இன்று.** 31

(இ-ள்.) மன்னு சிவன் சந்நிதியில் மற்று உலகம் சேட்டித்தது - நிலைபெற்ற சிவனுடைய சந்நிதியிலே பிரவஞ்சம் செயற்பட்டுவருகின்றது.

என்னும் மறையின் இயல் மறந்தாய் - என்று சொல்லும் வேதப்பொருளையும் மறந்தாய்,

சொன்னசிவன் - அவ்வேதத்தில் எடுத்து ஓதப்படுங்கர்த்தா,

கண்ணா - காட்டாக இருக்க,

உளம் - ஆன்மாவானது,

வினையால் கண்டு அறிந்து நிற்கும் - வினைக்கீடாகப் பொருத்திய தொரு விடயத்தைக் கண்டறிந்து நிற்கும்,

காண் - இவ்வேறுபாட்டை நீ காண்பாயாக,

சிவன் அசத்தை எண்ணான் இன்று - கர்த்தா தன் சந்திதியின் - அசத்தெல்லாம் சூனியமாகலின், உயிர்போல அவற்றை அனுபவியான் எ-று.

ஆன்மா கர்த்தாவாலே இந்திரியங்களிடமாக நின்று காணும் பட்சமும், அஃது எதனால் என்னின், வினைக்கீடாக என்னும் எதுவும் கூறியவாறு காண்க.

(2)

Thou who last even forgotten the text of the *Veda* which says that the world (animate and in-animate) becornes developed in the presence of *Siva*, understand that the soul knows (the world; only according to its *Karma* with the light of *Siva*. As all *Asat* is *sunya*, He cannot experience *Asat*. (2)

உயிர் முதல்வனாலே உணர்ந்து முகல்வனுக்கு வேறாதலும், ஒன்றாதலும் இன்றி, அம்முதல்வனில் அடங்கி நிற்குமென்பது: -

**வெய்யோன் ஒளியில் ஒடுங்கி விளங்காது**
**வெய்யோனை ஆகாத மீன்போல - மெய்யவனில்**
**கண்டுகேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் ஐம்புலனைக்**
**கண்டு உடனாய் மன்னுதலைக் காண்.** 32

(இ-ள்.) வெய்யோன் ஒளியின் ஒடுங்கி விளங்காது - ஆதித்தனுடைய பிரகாசத்திலே அடங்கி அதற்கு வேறாய் விளங்கித்தோன்றாமல்,

வெய்யோனை ஆகாத மீன்போல - அந்த ஆதித்தனே ஆகாத நாள் மீன்கள் போல,

மெய்யவனில் - மெய்ப்பொருளாகிய கர்த்தாவினால்,

கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் ஐம்புலனை - கண்டுங்கேட்டும் உண்டும் உயிர்த்தும் பரிசித்தும் அறியப்படும் ஐம்புலன்களையும்,

கண்டு - ஆன்மா உணர்ந்து,

உடன் ஆய் மன்னுதலைக் காண் - வேறாதலும் ஒன்றாதலும் இன்றி, உடன் ஆய் நிலைபெறு தலை விசாரித்துப்பார் எ-று.

ஆன்மா கர்த்தாவினாலே ஐம்புலனையும் உணர்ந்து உடன் மன்னும் என்னும் பட்சத்திற்கு ஆதித் தன் ஒளியில் அடங்கி அவ்வொளியின் வேறும், அவ்வொளியும் ஆகாத நாள் மீன் சபட்சமாயினவாறு காண்க. (3)

Just as the stars which lose their individual light in the light of the sun and yet do not become the sun itself, so the soul receiving impressions from all the five senses with the aid of God who is the only Truth, becomes indistinguishable and inseparable from Him (without becoming one or different from Him.) (3)

கர்த்தா அருளுடையனென்றும் அருளும் அவனும் குணகுணியாய் நிற்பனென்றும் உணர்த்துகின்றது: -

**அருளுண்டாம் ஈசற் அதுசத்தி அன்றே**
**அருளு அவன் அன்றி இல்லை - அருளின்**
**அவன் அன்றே இல்லை அருட்கண்ணார் கண்ணுக்கு**
**இரவிபோல் நிற்கும் அரன் ஏய்ந்து.** 33

(இ-ள்.) ஈசற்கு அருள் உண்டு ஆம் - கர்த்தாவுக்குத் திரோதசத் தியாலே மறைத்துக் கன்மங்களை ஆன்மாக்களுக்குப் புசிப்பிப்பது ஒழிந்து, ஒரு காலத்தும் அருளில்லையோ? எனின், அருள் உண்டு ஆம்.

அதுசத்தி - அவ்வருளானது கர்த்தாவினது சத்தியேயாம்,

அன்றே - அந்த அருட்சத்தி கர்த்தாவுக்கு என்றுண்டானது எனின், கர்த்தா என்றுளன் அன்றே உளது,

அருளும் அவன் அன்றி இல்லை - அவ்வருட்சத்தியுங் கர்த்தாவை ஒழிந்து வேறாதல் இல்லை,

அவன் அன்றே அருள் இன்று இல்லை - கர்த்தாவும் அநாதியிலே அருளை ஒழிந்து வேறாதல் இல்லை,

அருட்கண்ணார் கண்ணுக்கு - திரோத நீங்கி அருளைத் தமக்குத் தாரகமாகப் பெற்றவர்கள் காட்சிக்கு,

இரவிபோல் நிற்பன் அரன் ஏய்ந்து - ஆதித்தன் தன்னொளியோ டியைந்து தாதான்மியமாய் நிற்பது போலக் கர்த்தாவும் அவ்வருளோடியைந்து தாதான்மியமாய் நிற்பன் எ-று.

அருட்கண்ணார் கண்ணுக்குக் கர்த்தா அருளோடியைந்து நிற்பனென்னும் பட்சத்துக்கு இரவி தன்னொளியோடு இயைந்து நிற்றல் சபட்சமாயினவாறு காண்க. (4)

The *Arul* of *Isa* exists eternally with Him. It is His *Sakti*. Without Him, *Sakti* does not exist; and without *Sakti*, He cannot be. *Hara* (and His *Sakti*) appear as one to the *gnanis*, as the sun and its light appear as one to the eye. (4)

**ஐந்தாம் சூத்திரம் முற்றிற்று.**

---

# ஆறாஞ் சூத்திரம்.

இச்சூத்திரம் சத்தும் அசத்தும் வரையறை செய்து உணர்த்துதல் நுதலிற்று:

**உணருரு அசத்து எனின் உண்ராது இன்மையின்**
**இருதிறன் அல்லது சிவசத்தாம் என**
**இரண்டு வகையின் இசைக்குமன் உலகே.**

(இ-ள்.) உணர்உரு எனின் அசத்து - முதற்பொருள் அளவைகவால் அறியப்படும் இயல்பை உடைய தென்முல் அறியப்பகம் பிரவஞ்சம்போல அசத்தாம்,

உணராது இன்மையின் - அறியப்படாத இயல்பை உடையதென்றால் அறியப்படாத முயற்கோடு போலச் சூனியப்பொருளாம் ஆதலால்,

இருதிரன் அல்லது - இந்தவிரண்டு உறபாடும் இல்லாமல்,

இரண்டு வகையின் பொத்து ஓம் என - அறியப்படாமையும் அறியப்படுதலும் ஆகிய இரண்டு வகையாலும் சிவசத்தாகும் என்று,

மன்னுலகே இசைக்கும் - மெய்யுணர்வில் நிலைபெற்ற உயர்ந்தோர் சொல்லுவர் எ-று.

அறிவினால் அறியப்பட்டவை எல்லாம் பொய்யென்றது. அவை தோன்றி நின்றிறுதலை உடைத்து ஆதலால், அறியப்படாதது இல்லேயாம் என்றது - அமை மயிர்க்கயிறும், ஆகாயப்பூவும், முயற்கோடும் போல்வது ஆதணல் என்க.

6th Sutra. That which is perceived by the senses is *asat* (changeable.) Thnt wlich is not so perceived do not exist. God is neither the one nor the other, and hence called *Siva Sat* or *Chit Sat* by the wise: *Chit* or *Siva* when not understood by the human intelligence and *Sat* when perceived with divine wisdom.

உணருருவசத்தெளி னுணரா தின்மையின் என்றது, ஈண்டு அறிவினாலறியப்பட்ட சுட்டு அசத்தென்றது. அவை தாம் பிரகாசமாய்கிறே அப்பிரகாசமாய் நிற்றலான்: -

**அசத்து அறியாய் கேள் நீ அறிவு அறிந்த எல்லாம்**
**அசத்தாகும் மெய்கண்டான் ஆயின் - அசத்து அலாய்**
**நீரில் எமுத்தும் நிகழ் கனவும் பேய்த்தேரும்**
**ஓரில் அவை இன்று ஆம் ஆறு ஒப்பு.** 34

(இ-ள்.) அசத்து அறியாய் நீ கேள் - அசத்தின் இயல்பை அறியாதவனே நீ கேட்பாயாக,

அறிவு அறிந்த எல்லாம் அசத்து ஆகும் - அறிவினால் அறியப் பட்டவையெல்லாம் அசத்தேயாம்,

மெய்கண்டான் ஆயின் - உண்மையைத் தரிசித்தவன் ஆராய்ந்து பார்த்தான் ஆயின்,

அசத்து அலாய் - அசத்காரியம் அல்லாத அறிவை உடையவனே,

நீரில் எழுத்தும் நிகழ்கனவும் பேய்த்தேரும் - நீர்மேலெழுத்தும், நிகழாநின்ற கனவிற்காட்சியும், வெண்டேருமாம்,

ஒரின் - ஆராயின்,

அவை இன்றும் ஆறு ஒப்பு - அப்படி அறியப்படுவனவாகிய பிரவஞ்சம் அசத்தாகு முறைமைக்கு உவமையாம் எ-று.

பிரவஞ்சம் அசத்தென்னும் பட்சத்துக்கு நீரிலெழுத்தும் கனவும் பேய்த்தேரும் சபட்சமாயிரவாறறிக. (1)

Hear, O! thou who net ignorant of the real natare of *Asat*. All those that are perceived by the human faculties and senses will be found to be *Asat* by him who has understood *Sat*.

0! Thou who art not *Asat*. If similes are required to illustrate that the world is *Asat*, they are the figures formed on the water, the dreams and the cloud-car. They disappear before Him, as does darkness before the sun. (1)

இருதிறனல்லது. சிவசத்தாமென, இரண்டுவகையினிசைக்கு மன்னுலகே என்றது, இனிப்பிராகாசத்தினுக்குப் பிரகாசிக்க வேண்டுவது இன்மையானும், அப்பிரகாசததினுக்கு ப்பிரகாசம் இன்மையானும், இவ்விரண்டு தன்மையும் இன்றி வாக்கு மனாதீதகோசரமாய் நின்ற அதுவே சத்தாயுள்ள சிவமென்றுணரற்பாற்று: -

**எண்ணிய சத்தன்று அசத்தன்று ஆம் என்றால் என்**
**கண்ணி உளது என்றல் மெய்கண்டான் - எண்ணி**
**அறிய இரண்டு ஆம் அசத்து ஆதல் சத்தாம்**
**அறிவு அறியா மெய் சிவந்தாள் ஆம்.** 35

(இ-ள்.) எண்ணியசத்து அன்று அசத்து அன்று ஆம் என்றால் - கருதப்பட்ட சத்தும் அன்று அசத்தும் அன்றாம் என்றால்,

கண்ணி உளது என்றல் என் - அப்படிக்கருதி ஒருபொருள் உளதென்பது என்ன?

மெய்கண்டான் - உண்மையைத் தரிசித்தவன்,

எண்ணி அறிய - ஆராய்ந்தறிய,

இரண்டு அசத்து ஆம் - விடயமாவதும் சூனியமும் ஆகிய இரண்டும் அசத்தேயாம்,

ஆதல் - ஆகையால்,

சத்து ஆம் அறிவு அறியாமெய் - சத்தென்று சொல்லப்படும் சுட்டறிவினால் அறியப்படாத மெய்ப்பொருள்,

சிவன் தாள் ஆம் - அன்னியம் இன்றி உணரப்படும்சிவனருளாம் எ-று.

If the meaniog of the expression that God is neither what can be proved and koown by us nor what cannot be known is asked, he who has found the truth will say that He exists. He cannot be seen by the human understanding as He will then become *Asat*. He must be seen by the *Arul Sakti* of *Siva* who cannot be known by man. This *Arul Sakti* is His Foot.

## இதுவுமது.

**உணர்ப அசத்தாதல் ஒன்று உணராது ஒன்றை**
**உணரு நீ தான் உணராய் ஆயின் - உணரும் உனில்**
**தான் இரண்டாம் மெய்கண்டான் தன்னால் உணர்தலால்**
**தான் இரண்டாய்க் காணான் தமி.** 36

(இ-ள்.) உணர்ப அசத்து ஆதல் - உன்னால் அறிவனவாகிய கருவிகள் எல்லாம் அவ்வசத்தாம் ஆகையால்,

ஒன்று ஒன்றை உணராது - அக்கருவிகளுள் ஒன்றும் ஒன்றாகிய கர்த்தாவை அறியமாட்டாது,

உணரும் நீ தான் உணராய் - கருவிகளாலே அறிந்துவருகிற மீயும், அக்கர்த்தாவை அறியமாட்டாய்,

ஆயின் - நீ ஆராய்வாய் ஆயின்,

உணரும் உனின் இரண்டு ஆம் - உணர்கின்ற உன்னில் வேறாம்,

மெய்கண்டான் தன்னால் உணர்தலால் - உண்மையைத் தரிசித்தவன் சிவனுடைய அருளால் உணர்வன் ஆதலால்,

தான் இரண்டு ஆக்காணான் தமி - தான் வேறாயிருந்து அறிவானல்லன் தனிமுதலாகிய கர்த்தாவை எ-று.

எனவே மெய்கண்டான் அபேதமாக நின்று காண்பன் என்றதாம். (3)

The faculties by which the Soul perceives are *Asa*. Therefore, none of them can perceive the One. Even thou. who so perceivest, cannot understand Him. If examined. what thou perceivest will be different from thee. He who has understood himself will pereive himself to be not different from Him, as he merges bis personality in Him and understands through His *Arul*. (3)

## இதுவுமது.

**பாவகமேல் தான் அசத்தாம் பாவனா அதீதம் எனில்**
**பாவகமாம் அன்றென்னில் பாழ் அதுவாம் – பாவகத்தைப்**
**பாவித்தல் தான் என்னில் பாவகமாம் தன்னருளால்**
**பாவிப்பது பரம் இல் பாழ்.** 37

(இ-ள்.) பாவகமேல் தான் அசத்து ஆம் - மன முதலியவற்றோடு கூடிநின்று பாவிக்கும் பாவகம் என்றால் சுட்டு ஆதலால் அது அசத் தாம்,

பாவனா தீதம் எனில் பாவகம் ஆம் - அப்பாவனையைக் கடந்தது என்னில், ஒன்றும் அறிதல் இன்றிக் கேவலம் ஆதலால், அது பாவக மாத்திரையேயாம்,

அன்று என்னின் பாழ் அது ஆம் - இவ்விரு திறனும் அன்றி அநிர்வசனமாகப் பாவிக்கப்படுவது என்றால், அது சூனியப் பொரு ளாம்,

பாவகத்தைப் பாவித்தல் தான் என்னின் பாவகம் ஆம் - பாவனைக் கெய்தாத பொருளை எய்தியதாக வைத்துப் பாவகம் செய்தது என்னில், பாவனா தீதம் போலப் பாவனை மாத்திரையேயாம்,

தன் அருளால் பாவிப்பது பரம் - அப்பாவகங்களை ஒழித்துத் தனது திருவருளால் பாவிக்கப்படுவதாம் பரம்பொருள்,

பாழ் இல் - பாவனைக் கெய்தாமையற்றிப் பாழாதல் இல்லை எ-று (4)

If God is capable of being meditated by man, He becomes *Asat*. If He is regarded as a Being beyond human meditation, He will be a mere fiction. If He is meditated as neither, He will be a nonentity. If He is meditated as an object of meditation thongh He is beyond human meditation, this will be also a fiction, The *Param* can only be meditated with the aid of His *Arul*. Therefore, He is not a nonentity. (4)

## இதுவுமது.

**அறிய இரண்டு அல்லன் ஆங்கு அறிவு தன்னால்**
**அறியப் படான் அறிவின் உள்ளான் - அறிவுக்குக்**
**காட்டு ஆகி நின்றானைக் கண்ணறியா மெய்யென்னக்**
**காட்டாது அறிவு அறிந்து கண்டு.** **38**

(இ-ள்.) அறிய இரண்டு அல்லன் - ஆன்மா தன்னறிவால் அறிகைக்குத் தன்னின் வேறல்லன்,

ஆங்கு அறிவு தன்னால் அறியப்படான் - அவ்விடத்துத் தன் னறிவினாலே அறியப்படான்,

அறிவின் உள்ளான் - தன்னறிவுக்கு உள்ளுமாய் நிற்பான் ஆதலால்,

அறிவுக்குக் காட்டு ஆகி நின்றானை - தன்னறிவிற்குக் காட்டாகி நின்று அறிவிக்கும் கர்த்தாவை,

மெய் அறியா கண் என்ன - தனக்குக் காட்டாகி நின்ற உயிரை அறியமாட்டாத கண்ணொளி போல,

காட்டாது அறிவு அறிந்து கண்டு - அறிவானது தான் கண்டறிந்து ஆன்மாவுக்குக் கர்த்தாவைக் காட்டமாட்டாது எ-று.

ஆங்கறிவு தன்னால் அறியப்படா னென்பதன்முன் அறிவிலுள்ளா னென்பதனைக்கூட்டிப் பொருள் கொள்க.

எனவே திருவருள் தாரகமாய் நின்று அறியவேண்டுமென்பதாயிற்று. கர்த்தா உயிர்க்குக் காட்டாகி நின்று அறிவிக்கின்றானென்னும் பட்சத்துக்குக் கண்போல என்னுஞ் சபட்சங் காட்டியவாறறிக. (5)

To be known by the soul, He is not different from itself. As He is even present in its understanding it cannot know Him. As He in fact makes the soul see, its understanding cannot comprehend and point Him out to the soul, just as the eye which the soul enables it to see and yet is one with it cannot see the soul.

## இதுவுமது.

**அதுவெனும் ஒன்று அன்று அதுவன்றி வேறே**
**அதுவென்று அறி அறிவும் உண்டே - அதுவென்று**
**அறிய இரண்டல்லன் ஆங்கு அறிவு நிற்றல்**
**அறியும் அறிவே சிவம் ஆம். 39**

(இ-ள்) அது என்னும் ஒன்று அன்று - சத்தாகிய சிவம் அது என்று அநிர்வசனமாய்க் கூறப்படுவதொரு சூனியம் அன்று,

அது அன்றி வேறே - அந்த ஞேயமே அன்றி அதனின் வேறாக,

அது என்று அறி அறிவும் உண்டே - வாக்குமனாதீதமாய் நிற்பதொரு பொருளென்று அறிகின்ற ஞா தாவும் உள்ளதேயாம்,

அது என்று அறிய இரண்டு அல்லன் - அது வென்று சுட்டியறியுமாறு கர்த்தா தன்னின் வேறல்லன்,

ஆங்கு அறிவுள் நிற்றல் அறியும் அறிவே சிவமும் ஆம் - அவ்விடத்தில் தன்னறிவினிடத்துக் கலந்து வேற்றுமை தோன்றாது நிற்றலால், அறிவிறந்தறிகின்ற அவ்வான்மா சிவமேயாம் எ-று.

உம்மை சிவமாகியும் ஆகாமையை விளக்கி நின்றது.

ஆன்மாவுக்கு அறிவாய் நிற்றலாலே அவன் அறிவால் அறியும் ஆன்மா சிவமுமாம் என்று பொருள் உரைப்பாருமுளர். காண்பானுங் காட்டுவானும் போல, அறிகிறவன் ஆன்மா, அறிவிக்கிறவனே சிவன் அவன் கலந்து நிற்கையால் நீ அந்தச் சிவம் என்று மயங்கி நின்றது ஒழிந்து நீ அச்சிவன் அல்லை என்றறிக என்பதாம். (6)

God is not one who can be pointed out as “That." If so, not only will He be an object of knowledge, it will simply a *Gnatha* who understands Him as such. He is no different from the soul as an object of knowledge. He becomes one with the soul pervading its understanding altogether. The soul so feeling itself is also Sivam. (6)

**ஆறாஞ்சூத்திரம் முற்றிற்று.**

# ஏழாஞ் சூத்திரம்.

இதுமேலதற்கோர் புறனடை கூறுகின்றது, ஈண்டு சத்தினிடத்து அசத்துப் பிரகாசியா தென்றது: -

**யாவையும் சூனியம் சத்து எதிர் ஆகலின்**
**சத்தே அறியாது அசத்து இலது அறியா**
**இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா.**

(இ-ள்.) சத்து எதிர் யாவையும் சூனியம் ஆதலின் - சிவசத்தினுடைய சந்நிதியில் உணருருவாகிய அசத்தெல்லாம் பாழ் ஆகலால்,

சத்தே அறியாது - சத்தாகிய சிவம் அசத்தாகிய பிரவஞ்சத்தை அறியமாட்டாது,

அசத்து இலது அறியாது - அசத்தாகிய பிரவஞ்சம் சடமாதலால், சத்தாகிய சிவத்தை அறியமாட்டாது,

இருதிறன் அறிவு உளது - இரு திறன் அறிவுளது ஒன்று உண்டு,

இரண்டு அலா ஆன்மா - அது சத்தாதல்தன்மையும் அசத்தாதல் தன்மையும் ஆகிய இரண்டும் இன்றிச் சதசத்தாய் உள்ள உயிராம் எ-று.

ஈச்சுரன் பிரவஞ்சம் நடத்து முறை எப்படியெனில், இந்திரசாலம் காட்டுவானுக்கு இல்லையாய், காண்பார்க்கு உண்டானவாறு போல பிரவஞ்சத்தை அவன் அறிதலில்லை ஆகையால், சத்தே அறியாதென்றார்.

7th Sutra. In the presence of *Sat*, every thing else (cosmos-*Asat*) is *Sunyam* (is non - apparent.) Hence *Sat* cannot perceive *Asat*. As *Asat* does not exist, it cannot perceive *Sat*. That which perceives both, cannot be either of them. This is the Soul (called *Sathasat*).

யாவையுஞ் சூனியஞ் சத்தெதி ராதலின் சத்தே யறியாதென்றது, ஈண்டு சத்தினிடத்து அசத்துப் பிரகாசியா தென்றது மெய்யினிடத்துப் பொய் அப்பிரகாசமாய் நிற்றலான்: -

**அன்னியம் இலாமை அரற்கு ஒன்று உணர்வு இன்றாம்**
**அன்னியமிலான் அசத்தைக் காண்குவனேல் - அன்னியமாய்க்**
**காணான் அவன்முன் கதிர்முன் இருள்போல்**
**மாணா அசத்து இன்மை மற்று.** 40

(இ-ள்.) அன்னியம் இலாமை அரற்கு - ஆன்மாக்களோடு அன்னியம் இன்றி உடனாய் நிற்கும் கர்த்தாவுச்கு,

உணர்வு ஒன்று இன்று ஆம் ~ சுட்டி அறிய இருப்பது ஒன்றில்லையாம் ஆகையால்,

அன்னியம் இலான் அசத்தைக் காண்குவனேல் - வேற்றுமை யில்லானாகிய சிவன் அசத்தை அறிவானானால்,

அன்னியம் ஆய்க் கானான் - வேறாக அறிவான் அல்லன்,

அவன் முன் - அக்கர்த்தாவினெதிர்,

கதிர்முன் இருள் போல - சூரியன் முன் அந்தகாரம்போல.

மாணா அசத்து இன்மை - மாட்சிமை இல்லாத அசத்தாகிய பிசவஞ்சம் இல்லை ஆகையால் எ-று.

மற்று - அசைநிலை.

சத்தின் முன்னர் அசத்து நில்லாதென்னுந் துணிபொருட் பட்சத்துக்குக்கதிர்முன் இருள் போல் என்பது சபட்சமாயினவாறுகாண்க.

Hara who is not separate (from *Pasu* and *Pasa*) cannot know them as objects. So, He cannot know *Asat* as different even when He knows it. Evil *Asat* ceases to exist before Him, as does darkness before the Sun. (1)

அசத்தில தறியாதென்றது, இனி அசத்தினுக்கு உணர்வின்று என்றது. அது தான் நிரூபிக்கின் இன்றாம் ஆதலால்: -

**பேய்த்தேர் நீர் என்று வரும் பேதைக்கு மற்று அணைந்த**
**பேய்த்தேர் அசத்து ஆகும் பெற்றிமையின் – வாய்த்து அதனைக்**
**கண்டுணர்வார் இல்வழியின் காணும் அசத்து இன்மை**
**கண்டுணர்வார் இல்லது எனக் காண்.** 41

(இ-ள்.) பேய்த்தேர் நீர் என்று வரும் பேதைக்கு -- கானலைநீரோடன்று கருதிவருகின்ற அறிவில்லாதவனுக்கு,

மற்று அணைந்த பேய்த்தேர் அசத்து ஆகும் பெற்றிமையின் - கிட்டிப் பார்த்தவிடத்து அக்கானல் பொய்யாந் தன்மைபோல,

வாய்த்து - ஆசாரியன் உபதேசிக்கும் உபதேசமொழிகிடைத்து

அதனைக் கண்டு உணர்வார் இல்வழியில் - அவ்வசத்தின் இயல்பை ஆராய்ந்தறிவார் இல்லாதவிடத்து,

அசத்து இன்மை காணும் - சத்தாந் தன்மையே காணப்படும்,

கண்டு உணர்வார் இல்லது எனக்காண் - அவ்வசத்தின் இயல்பை ஆராய்ந் தறிய வல்லவர்க்கு அவ்வசத்து அறிவில்லதேயாம் என்று காண்பாயாக எ-று.

பிரவஞ்சம் பொய் என்றும், அதற்கறிவில்லை என்றும், அருள் தாரகமாக நின்று காணுமளவும் அது சத்தாகத் தோன்றும் என்றும், அருள் தாரகமாய் நின்று காணுமிடத்து அது பொய்யாம் என்றுங் கூறிய துணிபொருட் பட்சத்துக்குப் பேய்த்தேர் சபட்சமாயினவாறுகாண்க. (2)

The ignorant man who follows a mirage as water, will find it to be false when he reaches it. So, the soul whom God's grace has not reached will find *Asat* to be *Sat*. As *Asat* does not exist, it cannot know (*Sat*.) Therefore learn that *Asat* has no understanding. (2)

இருதிறனறிவுள திரண்டலாவான்மா என்றது, இவ்விரண்டினையும் அறிவதாய் உபதேசியாய் நின்ற அறிவு இரணடன் பாலும் உளதாயுள்ள அதுவே அவ்வான்மாவாம் என்றது: -

**அரு உருவம் தான் அறிதல் ஆய் இழையாய் ஆன்மா**
**அரு உருவம் அன்று ஆகும் உண்மை - அரு உருவாய்த்**
**தோன்றி உடன் நில்லாது தோன்றாது நில்லாது**
**தோன்றல் மலர் மணம் போல் தொக்கு.** **42**

(இ-ள்.) ஆய் இழையாய் அரு உருவம் ஆன்மா அறிதல் - பரமசிவன் ஆராயப்பெற்ற ஆபரணத்தையுடைய உமையவளே சத்து அசத்தென்னும் இரண்டினையும் ஆன்மாவே அறிதலால்,

[ஆய் இழை ஆய் ஆன்மா - நுணுகிய நூல்களை ஆராய்வதாகிய உயிரே; அரு உருவம் அறிதல்...]

அரு உருவம் அன்று ஆகும் - அது அவ்விரண்டும் அன்றி வேறாகும்,

உண்மை அரு உரு ஆய்த் தோன்றி உடன் நில்லாது - அவ்வான்மாவின் உண்மைத்தன்மை அருவமும் உருவமும் போலத் தோன்றி அவற்றோடு ஒப்பநிற்பதும் அன்று,

தோன்று துதில்லாது - விளங்காது சூனியமாய் நிற்பதும் அன்று,

மலர் மணம் போல் தொக்குத் தோன்றல் - மலரின் வாசனை அதனிடத்தே அடங்கித் தோன்றுதல் போலச் சத்திலும் அசத்திலும் சார்ந்து அதின் வண்ணமாய் அடங்கித்தோன்றுவதென்றார் எ-று

சத்தைக்கூடிச் சத்தாகியும், அசத்தைக்கூடி அசத்தாகியும் நிற்கும், எனவே ஆன்மா சதசத்தாம் என்பதாயிற்று. மலரின்மணம் அடங்கித் தோன்றுதல் போல, ஆன்மா சத்திலும் அசத்திலும் சார்ந்து அதின் வண்ணமாய் அடங்கித் தோன்றுதலால், தனித்தறியப்படுவது ஒன்றன்றி, அவ்விரண்டனையும் அறியுமுகத்தால் அறியப்படுவதாமெனக் கொள்க. ஆன்மா தனித்து நில்லாதென்னும் பட்சத்துக்கு மலரும் மணமுஞ் சபட்சமாயினவாறு காண்க. தான்-அசை (3)

O Thou who art engaged in deep studies, the soul has knowledge of both *Sat* and *Asat* and hence is neither of them. It does not appear as equivalent to either of them, nor is it nonentity being neither of them. Its nature is like the sniell of the flower which at one time was non-apparent, though existing in the plaut and at anotlier time became apparently visible.

(3)

ஆன்மாசத்தாதல் அசத்தாதல் ஆகாமல் சதசத்தானவாறு எங்ஙனே என்போர்க்குக் கூறுகின்றது: -

**மயக்கமது உற்றும் மருந்தின் தெளிந்தும்**
**பெயர்த்து உணர் நீ சத்து ஆகாய் பேசில் - அசத்தும் அலை**
**நீ அறிந்து செய்வினைகள் நீ அன்றி வேறு அசத்துத்**
**தான் அறிந்து துய்யாமை தான்.** **43**

(இ-ள்.) மயக்கமது உற்றும் மருந்தின் தெளிந்தும் - ஒரு பிணி வந்தடுத்தபோது விடயத்தை இன்னதென்று அறியாமல் மயக்கத்தைப் பொருந்தியும், அதற்கான மருந்து பெற அம்மயக்கநீங்கி அதை இன்னதெனத்தெளிந்தும்,

பெயர்த்து உணர் நீசத்து ஆகாய் - இப்படி மாறிமாறி உணர்ந்து வருகின்றநீ சிவசத்தோடு ஒப்ப அறியும் சத்தி உடையாய் அல்லை,

பேசின் - சொல்லுமிடத்தில்,

அசத்தும் அலை - அசத்தாவாயும் அல்லை,

நீ அறிந்து செய்வினைகள் - நீ முன்னறிந்து செய்தவினைகளை,

நீ அன்றி -- இப்பொழுது நீயே அல்லாமல்,

வேறு அசத்துத்தான் அறிந்து துய்யாமை - நின்னின் வேறான அசத்தாகிய பாசம் அறிந்து அனுபவிக்கமாட்டாமையால் எ-று.

தான்- அசைநிலை.

மயக்கமதுற்று மருந்திற் றெளித்தும் என்றது, பசிவந்துற்றபோது மயக்கத்தைப் பொருந்தியும், பின்பு புசித்தபோது தெளிந்தும் அறிவு பெயர் தலை உடையை என்றுமாம்.

கர்த்தா ஒருதன்மைத்தான அறிவையுடையன்; நீ அறிவு பெயர் தலை உடையை; ஆதலால், கர்த்தா நீ அல்லை என்றதாம். (4)

Thou art not *Sat*, as thy understanding is changeful and imperfect, becoming deranged in disease and recovering its brightuess when medicines are administered. Thou art neither *Asat* as thou hast to eat the fruits of *Karma*, knowingly performed by thyself, and which *Asat* cannot know and enjoy.

## இதுவுமது.

**மெய்ஞ்ஞானம் தன்னில் விளையாது அசத்தாதல்**
**அஞ்ஞானம் உள்ள அணைதல்காண் - மெய்ஞ்ஞானம்**
**தானே உள அன்றே தண் கடல் நீர் உப்புப் போல்**
**தானே உளம் உளவாய்த் தான்.** **44**

(இ-ள்.) மெய்ஞானம் தன்னில் - மெய்ம்மையாகிய சித்தெனப்படும் சிவத்தின் எதிர்,

அசத்து ஆதல் அஞ்ஞானம் விளையாது - பொய்யாதலால் அஞ்ஞானம் தோன்றாமல்,

உள்ளம் அணைதல்காண் - அவ்வுயிர்களைப் பற்றி நிற்றல்காண்,

மெய்ஞானம் தானே உளது அன்றே - சிவனுடைய சுத்தஞானம் என்று உளதென்னில் அநாதியே உள்ளதாம்,

தண்கடல் நீர் உப்புப்போல் - குளிர்ந்த கடலின்கண் உளதாதல் இன்றி அக்கடலிடத்து உளதாகிய நீரைப்பற்றி நிற்கும் உப்புப்போல

தானே உளம் உள ஆய்த் தான் - அவ்வஞ்ஞானம் பொருந்துதற்கு உரிமை உடைய உயிர்கள் உள்ளனவாயிருக்க எ-று,

கடல் என்று உண்டு அன்றே நீரும் உண்டு; நீர் என்று உண்டு அன்றே உப்பும் உண்டு அவைபோல, பதி என்று உண்டு அன்றே பசு உண்டு; பசு என்று உண்டு அன்றே பாசமும் உண்டு எனவே கடல்பதிக்கும், நீர் பசுவுக்கும், உப்புப் பாசத்திற்கும் உவமையாம். உப்பானது நீரைப்பொருந் திநிற்பது ஒழிந்து கடலிற் பொருந்தாமை போல பாசஞானம் பசுஞானத்தைப் பொருந்தி நிற்பது ஒழிந்து பதிஞானத்தைப் பொருந்தாது என்பது விளங்கி நின்றது அறிக.

பாசஞானம் ஆன்மாவுடனே கூடிநிற்பது ஒழிந்து கர்த்தாவுக்கு முன் நில்லாது என்னும் பட்சத்துக்குக் கடல்நீர் உப்புச் சபட்சமாயினவாறு காண்க. (5)

Ignorance (Agnanam) will not arise from God who is the true intelligence as it is *Asat* (like darkness before light). The sou! which is ever united to God is co-eternal with Him. The connection of ignorance with the soul is like the connection of Salt with the water of the sea. (5)

**எழாம் சூத்திரம் முற்றிற்று.**

# எட்டாம் சூத்திரம்.

இது ஞானத்தினை உணரு முறைமையினை உணர்த்துகின்றது: -

**ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்து எனத்**
**தம் முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்**
**அன்னியம் இன்மையிம் அரன் கழல் செலுமே.**

(இ-ள்.) ஐம்புலவேடரின் - ஆன்மா செவி, மெய், கண், வாய் மூக்கென்னும் ஐம்பொறியாகிய வேடருடனே,

அயர்ந்தனை வளர்ந்தென - கூடிநின்று வளர்ந்து உன்னுடைய உண்மையை மறந்தாய் என்று,

தம்முதல் குருவும் ஆய் - தம் முதல்வனாகிய கர்த்தா குரு வடிவமுங்கொண்டுவந்து,

தவத்தினில் உணர்த்த - முற்சனனங்களிலே செய்த சரியா கிரியா யோக தவப்பயனால் ஞானத்தைப் பிறப்பித்து அறிவிக்க,

விட்டு அந்நியம் இன்மையின் - அறிந்த அளவில் அவ்வேடரைவிட்டு நீங்கி எக்காலத்திலும் நீக்கமில்லா தாகிய நிலையைப் பெற்று,

அரன்கழல் செலுமே - கர்த்தாவினுடைய திருவடிகளை அடையும் எ-று.

8th Sutra. The Lord appearing as *Guru* to the Soul which had advanced in *Tapas* (Virtue and Knowledge instructs him that he has wasted himself by living among the savages of the five senses; and on this, the soul, understanding its real nature, leaves its former associates, andnot being different from Him, becomes united to His Feet.

தவத்திலுணர்த்த என்றது, ஈண்டிவ்வான்மாக்களுக்கு முற்செய்தவத்தால் ஞான நிகழும் என்றது. மேற்சரியா கிரியாயோகங்களைச் செய்துழி நன்னெறியாகிய ஞானத்தைக்காட்டி அல்லது கொடா ஆகலான்: -

**தவம் செய்வார் என்றும் தவலோகம் சார்ந்து**
**பவஞ் செய்து பற்று அறுப்பார் ஆகத் - தவஞ் செய்த**
**நற்சார்பில் வந்து உதித்து ஞானத்தை நண்ணுதலைக்**
**கற்றார்சூழ் சொல்லுமாம் கண்டு.** **45**

(இ-ள்.) என்றும் தவம் செய்தார் - எக்காலத்தினும் சரியை கிரியை யோகமாகிய தவங்களைச் செய்தவர்கள்,

தவலோகம் சார்ந்து - தாங்கள் செய்த தவத்திற்கீடாகிய சர்லோக சாமீப சாரூபமாகிய பதங்களைப்பொருந்தி, ஆண்டு உளவாகிய இன்பங்களை அனுபவித்து,

பவம் செய்து பற்று அறுப்பார் ஆக - மீளவும் நிலத்தின்கட்பிறந்து அப்பற்றினை நீக்கிக்கொள்ளும் பொருட்டு,

தவம் செய்த நல்சார்பில் வந்து உதித்து - தவஞ்செய்தற்கு உரிய உயர்ந் தகுலத்தின் கண் வந்து தோன்றி,

ஞானத்தை நண்ணுதலை - அப்பற்று அறுத்துச் சிவஞானத்தைப்பொருந்துதலை,

கற்றார்சூழ் கண்டு சொல்லும் ஆம் - வேதாகமங்களைக்கற்று உணர்ந்தோருடைய சூழ்ச்சி அந்நூற்கருத்து உணர்ந்து சொல்லும் எ-று. (1)

Those who have performed *Tapas* enjoy its fruits in the various *Tapalokas* (Heavens). And then they attain good births, so that they may get rid of even these desires, by eating the fruits of these desires, and attain *Gnanam*. This is what the learned in the *Shasters* say. (1)

யாகாதி கன்மங்கள் முத்திக்கு ஏது அன்று என்பதும் இருவினை ஒப்பே அதற்கு அடுத்த சாதனம் என்பதுங் கூறுகின்றது: -

**பசித்து உண்டு பின்னும் பசிப்பானை ஒக்கும்**
**இசைத்து வருவினையில் இன்பம் - இசைத்த**
**இருவினை ஒப்பில் இறப்பில் தவத்தான்**
**மருவுவன் ஆம் ஞானத்தை வந்து.** **46**

(இ-ள்.) இசைத்து வருவினையில் இன்பம் - காமியப்பயன்களை வீதித்து வருகின்ற நூல்களில் கூறிய வேள்வி முதலிய அறங்களின் பயனாகிய இன்பமானது,

பசித்து உண்டு பின்னும் பசிப்பானை ஒக்கும் - முன்னர்ப் பசித்துண்டு பின்னும்பசிப்பானுக்கு அவ்வுணவினால் வரும் இன்பத்தை ஒக்கும் ஆதலால்,

இசைத்த இருவினை - சொல்லப்பட்ட அறம் பாவம் என்னும் இருவினைகளும்,

இறப்பு இல் தவத்தான் ஒப்பில் - தம்மைப்போல அனுபவமாத்திரையாற் கெடுதல் இல்லா தசரியை முதலிய தவங்களால் நேரா காத்தலால்,

ஞானத்தைவந்து மருவுவன் ஆம் - குருவைத்தேடிவந்து ஞானத்தைப் பொருந்துவன் எ-று.

எனவே ஞானம் பெற்றே வீடு பெறவேண்டும் என்பது ஆயிற்று. (2)

The bliss secured by the much-praised sacrificial acts will be like the pleasure derived by the hungry man after eating and who again becomes hungry. The soul will join its *Gnana Guru* when by its indestructible *Tapas* (*Sariya*, *Kriya* aud *Yoga*) its good and bad Karma become perfectly balanced. (2)

தம்முதல் குருவாயென்றது, இனி இவ்வான்மாக்களுக்குத் தமது முதல் தானே குருவா யுணர்த்தும் என்றது, அவன் அன்னியம் இன்றிச்சை தன்னிய சொரூபியாய் நிற்றலான்:

**மெய்ஞ்ஞானம் தானே விளையும் விஞ்ஞானகலர்க்கு**
**அஞ்ஞான அச்சகலர்க்கு அக்குருவாய் - மெய்ஞ்ஞானம்**
**பின்னுணர்த்தும் அன்றிப் பிரளயா கலருக்கு**
**முன்னுணர்த்தும் தான் குருவாய் முன்.** **47**

(இ-ள்.) விஞ்ஞானகலர்க்கு மெய்ஞானந்தானே விளையும் - கர்த்தர் ஆணவமலம் ஒன்றையும் உடைய விஞ்ஞானகலர்க்குத் தன்மை யினின்றவாறே தத்துவ ஞானத்தை விளைப்பன்,

அன்றிப்பிரளயாகலருக்கு - அவ்வாறன்றி ஆணவமலமுங் கன்மமலமும் உடையராகிய பிரளயாகலருக்கு,

தான் குருவாய் முன் உணர்த்தும் - தன்னியற்கை வடிவே குரு வடிவாய்க்காட்டி முன்னாக நின்று தத்துவஞானத்தை உபதேசிப்பான்

அஞ்ஞான அச்சகலர்க்கு அக்குருவாய் - அவித்தையைப் பொருந்திய ஆணவமாயை கன்மம் என்னும் மும்மலங்களோடு கூடிய அந்தச்சசகலர்க்கு அவர் வடிவுபோலும் வடிவுடைய குருவாகி,

பின் மெய் ஞானம் உணர்த்தும் - அவ்வடிவின் பின்னாக மறைந்து நின்று தத்துவஞானத்தை உணர்த்துவன்,

முன் - அவ்வேறுபாட்டை அறிவாயாக எ-று. (3)

God imparts *Gnanam* to *Vignanakalars* as they dwell in Himself; to *Pralayalkalars*, He appears as *Guru* in His divine form and imparts *Gnanam*; and to *Sakalars*, He appears as *Guru* concealing himself in human form and imparts *Gnanaam*. (3)

இது மூவகை ஆன்மாக்களுக்கும் ஓரியல்பின் உணர்த்தாது தன்மையினும் முன்னிலையினும் பின்னிலையினும் உணர்த்து தற்குக் காரணங் கூறுகின்றது: -

**அறிவிக்க அன்றி அறியா உளங்கள்**
**செறியுமாம் முன்பின் குறைகள் - நெறியின்**
**குறையுடைய சொற்கொள்ளார் கொள்பவத்தின் வீடு என்**
**குறைவில் சகன் சூழ் கொள்பவர்க்கு.** **48**

(இ-ள்.) உளங்கள் அறிவிக்க அன்றி அறியா - ஆன்மாக்கள் கர்த்தா முறையின் அறிவிக்க அறிவது அன்றி அறியும் இயல்பின அல்ல,

குறைகள் முன்பின் செறியும் ஆம் - அறிவித்தால் அறிவதாகிய குறைகள் முன்னிலையிலும் பின்னிலையிலும் பொருந்துவனவாம்,

நெறியின் - தத்தமக்குரியவழியில்,

குறை உடைய சொல் கொள்ளார் - குறைவினையுடைய உபதேச மொழியைக் கொண்டு உணரவேண்டாத விஞ்ஞானகலர்க்கு,

கொள்பவத்தின் வீடு என் - கொள்ளப்பட்ட தன் உண்மை மாத்திரையின் வீடு பயக்கும் உணர்வு உண்டென்று அறிவாயாக.

குறைவில் சகன்சூழ் கொள்பவர்க்கு - குறைபாடில்லாத சகக்கடவுளது உபதேசமொழியைக்கொண்டு உணரும் இயல்பினையுடைய பிரளயாகலர் சகலர்க்கு எ-று.

குறைவில் சகன் சூழ் கொள்பவர்க்கென்பதனோடு குறைகள் முன்பின் செறியுமாம் என்பதனைக் கூட்டிப்பொருள் கொள்க. (4)

The souls will not attain *Gnanam* unless imparted by God in order. Those (*Pralayakalar* and *Sakalar*) who are instructed by the Perfect Lord of the world, receive such instructions in the 2nd and 3rd persons respectively. Those (*Vignana Kalar*) who do not receive such imperfect instruction, attain *Moksha Gnanam* from God by intuition. (4)

இது சிவன் அஞ்ஞானசகலர்க்கும் குருவாதல் உபசாரம் அன்று, உண்மை என்கின்றது: -

**இல்லா முலைப்பாலும் கண்ணீரும் ஏந்திழைபால்**
**நல்லாய உளவாமால் நீர்நிழல்போல் - இல்லா**
**அருவாகி நின்றானை ஆரறிவார் தானே**
**உருவாகித் தோன்றானேல் உற்று.** **49**

(இ-ள்.) நல்லாய் - நன்மையை உடையமாணாக்கனே! ஏந்திழைபால் இல்லா முலைப்பாலும் கண் நீரும்-ஏந்திய ஆபசணத்தை உடையாளிடத்துக் குழவியைக் காணுமுன் இல்லனவாய முலைப்பாலும் கண்ணீரும்,

உளவாம் - குழவியைக்கண்ட பின்னுளவாம்,

நீர்நிழல்போல் - நீரினிடத்தே நிழல்போல்,

இல்லா அரு ஆகி நின்றானை - உயிர்களிடத்துப் புலப்படுதல் இல்லாத அருவமாய் நின்ற சிவனை,

ஆர் அறிவார் - ஆர் தாமறிவார்.

தானே உரு ஆகி உற்றுத்தோன்றானேல் - அவன் குருவடிவமாய் வந்து தோன்றி நின்று உணர்த்தானாயின் எ-று.

அருவாய் நின்ற சிவனை உருவாகவுங் காணலாம் என்னும் பட்சத்துக்கு முலைப்பாலுங் கண்ணீரும் நிழலும் சபட்சமாயினவாறு காண்க. ஆல் - அசைநிலை. (5)

The milk and tears, which did not exist before, appear in the person of the well-adorned mother after the birth of the child as the result of her love. Who will therefore understand the Lord who is present in the soul, unperceived like the *Akas* in the water, if he did not appear in the form of the Divive *Guru*? (5)

ஐம்புலவேடரி னயர்ந்தனை வளர்ந்தென என்றது, இனி இவ்வான்மாக்கள் ஐயுணர்வுகளான் மயங்கித் தம்மை உணரா என்றது. அவை தாம் பளிங்கிலிட்ட வன்னம் போலக் காட்டிற்றைக் காட்டி நிற்றலான்: -

**பன்நிறம் காட்டும் படிகம் போல் இந்திரியம்**
**தன்நிறமே காட்டும் தகைநினைந்து - பன்னிறத்துப்**
**பொய்ப்புலனை வேறுணர்ந்து பொய்பொய்யா மெய்கண்**
**மெய்ப்பொருட்குத் தைவமாம் வேறு.** **50**

(இ-ள்.) பல் நிறம் காட்டும் படிகம்போல் - தன்னைச்சார்ந்த பல வன்னங்களையும் காட்டிநிற்கும் படிகம்போல்,

இந்திரியம் தன் நிறமேகாட்டும் தகைநினைந்து - தன்னைச்சார்ந்த இந்திரியங்களின் இயல்பையே தன்மாட்டு விளக்கி நிற்கும் பொதுத்தன்மையைச் சிந்தித்தறிந்து,

பல் நிறத்துப் பொய்ப்புலனை வேறு உணர்ந்து - அந்நிறங்கள் படிகத்திற்குவேறு என்று அறியுமாறுபோல, பலவகை இயல்பை உடைய பொதுத் தன்மையைச்செய்யும் பொறிகளைத் தன்னின் வேறு என்று தெளிந்து,

பொய்பொய்யா மெய்கண்டால் - அவ்வழியால் ஆய பொதுவியல்பு பொய்யாய் ஒழியுமாறு தனது சிறப்பியல்பைக்கண்டான் ஆயின், வேறு மெய்ப்பொருட்குத் தைவம் ஆம்-அசத்தாகிய பொறிகளுக்கு வேறுகிய சிவசத்துக்கு அடிமையாவன் எ-று.

இந்திரியங்களுடைய சொரூபத்துக்கு ஆன்ம சொரூபம் வேறு என்னுந் துணிபொருட் பட்சமும், அஃதெதனாலென்னின் பொய்யாதலால் என்னும் ஏதுவும், அஃதென்போல என்னிற் பன்னிறமும் படிகமும் போல என்னுஞ் சபட்சமுங் காட்டியவாறு அறிக.

The soul, who, after reflecting that the knowledge derived from the material senses is only material, like the colors reflected on a mirror, and that these color-like sensations are different from itseif, and after perceiving such false knowledge as false, understands the Truth, will become the servant of God who is different from such *Asat*. (6)

விட்டன்னிபமின்மையி னரன் கழல் செலுமே என்றது, இனி இவ்வான்மா தன்னை இந்திரியத்தின் வேறாவான் காணவே தமது முதல் சீபாதத்தை அணையும் என்றது. ஊசல் கயிறு அற்றால் தாய் தரையே யாந்துணை யான்: --

**சிறைசெய்ய நின்ற செழும் புனலின் உள்ளம்**
**சிறைசெய் புலன் உணர்வில் தீர்ந்து - சிறைவிட்டு**
**அலைகடலில் சென்று அடங்கும் ஆறுபோல் மீளாது**
**உலைவு இல் அரன் பாதத்தை உற்று.** 51

(இ-ள்.) சிறைசெய்ய நின்ற செழும்புனலின் உள்ளம் - ஒருவன் அணை கட்ட அந்தவணையிலே கட்டுண்று நின்ற ஆற்று நீர்போல, கருவிகளாலாய பாசஞானம் தளை செய்யத்தளை உண்டு நின்ற உயிர்,

சிறைசெய்புலன் உணர்வில் தீர்ந்து - அக்கருவிகளாலாய பாசஞானத்தளையில் நின்று நீங்கி,

சிறைவிட்டு அலைகடலில் சென்று அடங்கும் ஆறுபோல் - அவ்வணை முறிந்து அலைகடலின்கண்ணே சென்று அந்நீரேயாய் அடங்கும் ஆற்று நீர்போல,

உலைவு இல் அரன்பாதத்தை உற்று மீளாது - தனக்குக் கேடில்லாத சிவபிரானது திருவடியைக்கூடிப் பின்புமீளுதல் செய்யாது எ-று

கடலிலே சென்ற ஆற்றுநீர் மீண்டும் அதன்வழியே ஏறினாலும் அந்த உப்பு நீராய் ஏறினாற்போல, பின்பு இந்திரியங்களுடனே ஆன்மா கூடினாலும் பசு கரணமாய் நில்லாது சிவகரணமாய் நிற்குமென்றதாம். இந்திரியங்களை நீங்கிச் சிவனது திருவடியைக் கூடிய ஆன்மா மீளுதல் செய்யாது என்னும் பட்சத்துக்குச் சிறைவிட்டு நீங்கின ஆற்றுநீர் கடலிற்சென்று அடங்கும் ஆறுபோல என்பது சபட்சமாயினவாறு காண்க. (7)

The soul which becomes bound with *Pasam*, like the river flood when stopped by an embankment, will not leave the Divine Feet of the Lord, who is unchangeable, after once attaining Them, on being freed from the ties of the world, like the flood which reaches the sea on the embankments being destroyed. (7)

ஆன்மாக்கள் சிவனது திருவடியைக் கூடின் மீளாதென்பதை வலியுறுத்துகின்றது: -

**எவ்வுருவும் தான் என்னில் எய்துவார் இல்லை தாள்**
**இவ்வுருவின் வேறேல் இறைஅல்லன் - எவ்வுருவும்**
**கண்போல் அவயவங்கள் காணா அக் கண் இல்லார்**
**கண்பேறே காண அக் கழல்.** 52

(இ-ள்.) எவ்வுருவும் தான் என்னில் தாள் எய்துவார் இல்லை - எல்லா உருவங்களும் சிவனே என்னில், அச்சிவனது திருவடியைக்கூடுதற்கு வேறே ஒரு முதலில்லையாம்,

இவ்வுருவின் வேறேல் இறை அல்லன் - அதனால் கர்த்தா இருதவுருவத்திற்கு வேறாய் நிற்பன் என்னில், ஏகதேசியு மாய்க் கர்த்தாவும் அல்லனாவன், அதனியல்பு என்னெனில்,

எவ்வுருவும் - எல்லாவுருவங்களும் கலப்பினால் சிவமேயாயினும் தம்முள் ஒப்பனவல்ல,

அவயவங்கள் கண்போல் காணா - உயிர் ஐம்பொறிகளிலும் ஒப்பரிற்பினும் மெய்வாய் மூக்குச் செவிகள் நேத்திரேந்திரியம் போல விடயத்தை வியாபித்துக்கண்டறிய மாட்டா,

அக்கழல் அக்கண் இல்லார் கண்பேறே காண் - அக்கழல் நினைவார்க்கு உளதாகிய மேம்பாடு அக்கண்ணொளியிழந்தவர் கண்பேற்றின் உளதாகு மேம்பாடுபோலும் எனக்கண்டறிவாயாக எ-று. (8)

If every object is God, then no body need attain God's feet. If He is not every thing, He is not God. Everything cannot see Him, as though the eye sees all objects, all the other

senses cannot see. Understand the supremacy of eyesight in persons who recover their eyesight. (8)

இது கர்த்தாவின் திருவடியை உற்ற ஆன்மா பயிற்சி வசத்தால் மீளவருமாயின் மீளாதவாறு செய்து கொள்ளும் உபாயம் இது என்கின்றது: -

**ஐம்பொறியின அல்லை எனும் அந்த தரசிவனை**
**ஐம்பொறியை விட் அங்கு அணைசகலன் - ஐம்பொறியின்**
**நீங்கான் நீர்ப் பாசிபோல் நீங்குமல கன்மம்வரின்**
**நீங்கானை நீங்கும் நினைந்து.** **53**

(இ-ள்.) ஐம்பொறியின் அல்லை எனும் அந்ததர - ஐம்பொறிகள் போல ஏகதேசவிளக்கம் உடையை அல்லை என்று உபதேசிக்கப்படும் சித்தாந்த மகாவாக்கியத்தைப் பெற்றுடைய மாணாக்கனே,

ஐம்பொறியைவிட்டு அங்கு சிவனை அணைசகலன் - ஐம்பொறிகளால் ஆகிய புலனுணர்வை நீங்கி அவ்விடத்துச் சிவன் திருவடியைஅடைந்த சகலன்,

ஐம்பொறியின் நீங்கான் - ஐம்பொறிகளால் அத் திருவடியை நீங்கான்,

நீர்ப்பாசிபோல் நீங்கும் மலகன்மம் வரின் - நீரிடத் துண்டாகிய பாசி கல்லை விட்டெறிந்தபோது நீங்கிப்பின்பு பரக்குமாறுபோல, நீங்கிய மலகன்மங்கள் வாதனைவயத்தாற் பின்பு வந்து கூடுமாயின்,

நீங்கானை நினைத்து நீங்கும் - தன்னை விட்டு நீங்காத கர்த்தாவைச் சிந்தித்து நீக்கிக்கொள்ளும் எ-று.

சிவனுடைய திருவடியைக் கூடினபொழுது மலமாயா கன்மம் நீங்கு மென்றும், திருவடியை நீங்கின பொழுது அம்மல மாயா கன்மம் வந்து கூடு மென்றும் சொல்லும் பட்சத்துக்கு நீர்ப் பாசிபோலென்னுஞ் சபட்சங்காட்டிய வாறறிக (9)

O Thou, who hast found that thou art not the five senses! The *Sakala* who has reached the Divine *Guru*, after leaving the knowledge of the five senses, yet is not separated from the five senses. If the result of *Mala* and *Karma* again surrouud him, as the separated moss covers the water mgain, a little while after a stone is thrown, let him remove it by contemplating on Him who is never separate from him. (9)

**எட்டாஞ் சூத்திரம் முற்றிற்று.**

## ஒன்பதாஞ் சூத்திரம்.

இது ஆன்ம சுத்திபண்ணு மாறுணர்த்துதல் நுதலிற்று.

**ஊனக்கண் பாசம் உணராப் பதியை**
**ஞானக் கண்ணினில் சிந்தை நாடி**
**உராத்துனைத் தேர்த்து எனப் பாசம் ஒருவத்**
**தண் நிழலாம் பதிவிதி எண்ணும் அஞ் செழுத்தே.**

(இ-ள்) ஊனக்கண் பாசம் உணராப்பதியை - குறை உணர்வாகிய பசு ஞானத்தாலும் பாசஞானத்தாலும் அறிதற்கரிய சிவனை,

ஞானக் கண்ணினில் சிந்தை நாடி - அவனது திருவடி ஞானத்தால் தன்னறிவின் கண்ணே ஆராய்ந்தறிக,

உராத்துனைத் தேர்த்து எனப் பாசம் ஒருவத் தண் நிழல்பதி ஆம் -- அத்திருவடி ஞானத்தாற் பாசக்கூட்டம் பரந்து திரிதலினிடத்து அதிவேகமுடைய பேய்த்தேரின் இயில்பிற்றாய்க் கழிவதென்று அறிந்து நீங்கவே, பிறவித்துயராகிய வெப்பத்திற்குக் குளிர்ந்த நிழலாய் வெளிப்பட்டுச் சிவன் விளங்குவன்.

அஞ்செழுத்தே விதி எண்ணும் - பாசத்தை ஒருவிஞானத்தைப் பெற்று ஞேயத்தைக்கண்ட காட்சி சலியாமைப்பொருட்டு அப்பொருள் பயக்கும் திருவைந்தெழுத்து அவ்வி திப்படி அறிந்து கணிக்கப்படும் எ-று.

9th. Sutra. The soul, on perceiving in itself with the eye of *Gnanam*, the Lord who cannot be perceived by the human intellect or senses, and on giving up the world (*Pasa*) by knowing it to be false as a mirage, will find its rest in the Lord. Let the soul contemplate *Sri Panchatchara* according to Law.

ஊனக்கண்பாச முணராப்பதியை ஞானக்கண்ணிற் சிந்தை நாடி என்றது, ஈண்டு அம்முதலை ஞானக்கண்ணினாலே காண்க என்றது. அவன் வாக்கு மனாதீதகோசரமாய் நிற்றலான்: -

**நாடியோ என்போ நரம்புசீக் கோழையோ**
**தேடி எனையறியேன் தேர்ந்தவகை - நாடி அரன்**
**தன்னாலே தனையும் கண்டு தமைக்காணார்**
**என்னாம் என அறிவார் இன்று.** 54

(இ-ள்.) நாடியோ என்போ நரம்புசீ கோழையோ - நாடியோ எலும்போ நாம்போ சீயோ கோழையோ என்னும் இவற்றுள்,

தேடி எனை அறியேன் - யாதென்று யான் என்னைத் தேடியும் அறிகின்றிலே னென்று,

தேர்ந்த வகை நாடி - தேர்கின்ற கூறுபாட்டாலே அதனைத் தெளிவிப்பதோர் அறிவு உண்டென ஆராய்ந்து,

அரன் தன்னாலே தன்னையும் கண்டு - சிவனுடைய அருளாலே சிவனையுங்கண்டு,

தமைக்கானார் என்னாம் என அறிவார் இன்று - அப்படி அறியும் பொருளாகிய தங்களை உணர் தலைச் செய்யா தார் மற்றெவ்வியல்பின சென்று தம்மை அறியவல்லவர் இம்முத்திக்காலத்து எ-று. (1)

A person after examining the nerves, bones, pus, phlegm of which he is composed of and not finding, what he is, arrives at the knowledge that he must uuderstand with some other intelligence; and unless he then understands his God and his own self with the aid of *Hara*, how else is he to understand his own self? (1)

இது சிவஞானத்தாலே சிவனைக் காண்டலை வலியுறுத்துகின்றது: -

**காட்டிய கண்ணே தனைக்காணா கண்ணுக்குக்**
**காட்டாய உள்ளத்தைக் கண்காணா - காட்டிய**
**உள்ளம் தனைக்காணா உள்ளத்தின் கண்ணாய**
**கள்வன் தான் உள்ளத்திற் காண்.** 55

(இ-ள்.) சாட்டிய கண்ணே தனைக்காணா - உயிராற் காட்டப்பட்டு ஒரு விடயத்தைக் காண்கின்ற கண்ணானது தன்னியல்பைக் காணமாட்டாது.

கண்ணுக்குக் காட்டாய உள்ளத்தைக் கண் காணா - தனக்கு அவ்விடயத்தைக் காண்பித்து முதலாய் நிற்கும் உயிரையும் அது காணமாட்டாது,

காட்டிய உள்ளம் தனைக்காணா - கர்த்தாவினாலே காட்டப்பட்டு ஒன்றனை உணர்கின்ற உயிர் தன்னியல்பை அறியமாட்டாது.

உள்ளத்தின் கண் ஆய கள்வன் தான் - அவ்வறிவின் கண்ணும் உடனாய் நிற்கும் கள்வன் அக்கர்த்தா ஆகலால்,

உள்ளத்தில் காண் - அவனை அவ்வறிவின் கண்வைத்து நாடித் தெளிவாயாக எ-று. (2)

The eye, which points out all things cannot see itself nor can it see the soul which enables it to see. And the soul, which enables the eye to see, cannot see itself nor Gol who enables it to see. As God is one with the soul when it so uuderstands, so examine the way in which he so exists in thy understanding. (2)

உராத்தனைத் தேர்த்தெனப் பாசமொருவத் தண்ணிழலாம் பதி என்றது, இனி அசத்தாயுள்ள வன்னபேதங்களை அசத்தென்று காண உளதாய் நிற்பது ஞானசொரூபமென்று
உணரற்பாற்று: -

**நிற்குணனாய் நின்மலனாய் நித்தியா னந்தனாய்த்**
**தற்பரமாய் நின்ற தனிமுதல்வன் - அற்புதம்போல்**
**ஆனா அறிவாய் அளவு இறந்து தோன்றானோ**
**வானே முதல்களையின் வந்து.** 56

(இ-ள்.) நிர்க்குணன் ஆய் நின்மலன் ஆய் - சத்துவமுதலாகிய முக்குணங்களையும் நீங்கி நிற்பானாய், மலகன்மங்களிற் பொருந்தானாய்,

நித்தியா னந்தன் ஆய் - எக்காலத்தும் அழிவில்லாத சுகசொரூபனாய்,

தற்பாம் ஆய் நின்ற தனிமுதல்வன் - மேலாயுள்ள பொருட்கும் மேலாய் நின்ற தனிமுதலாகிய சிவன்,

அற்புதம்போல் ஆனா அறிவு ஆய் - ஆச்சரியம்போல விட்டு நீங்காத அறிவாய்,

அளவு இறந்து வந்து தோன்றானோ வானே முதல்களையின் - தனது சுட்டறிவின் அளவைக் கடந்துவந்து வெளிப்படானோ, ஆகாயமுதலாகிய அசத்தை அசத்தென்று கண்டு நீங்கியவழி எ-று. (3)

Will not the Lord who is *Nirguna*, *Nirmala*, eternal Happiness, *Tatparam* (above all things) and beyond comparison, and appears to the soul when it gets rid of the *Tatwas* such as *Akas*, &c., will not He appear as a far transcending Wonder and as an inseparable Light of its understanding? (3)

இதுவானே முதல் களைந்தவழி அங்ஙனந் தோன்றுவதும் வேறொன்று அன்று, ஞான சொரூபமாம் என்றதனை வலியுறுத்து கின்றது: -

**சுட்டி உணர்வதனைச் சுட்டி அசத்தென்னச்**
**சட்ட இனியுளது சத்தேகாண் - சுட்டி**
**உணர்ந்த நீ சத்து அல்லை உண்மையைத் தைவம்**
**புணர்ந்ததனால் பொய்விட்டுப் போம்.** 57

(இ-ள்.) சுட்டி உணர்வதனைச் சுட்டி அசத்து என்ன - இது இது என்று சுட்டி அறியப்படுவனவாகிய எல்லாப்பொருளையும் ஒவ்வொன்றாகச் சுட்டி அசத்தென்று கண்டுகழித்துச் சென்றவிடத்து,

இனிச் சட்ட உளது சத்தே காண் - முடிவின்கட் செம்மையே கோசசமாவது சத்தேயாம், அதனை அறிவாயாக,

சுட்டி உணர்ந்த நீசத்து அல்லை - அசத்தோடு கூடிச் சுட்டி அறிந்து வந்த நீ சத்தாவாய் அல்லை,

உண்மையைத் தைவம் புணர்ந்து - சுட்டி அறிந்து வந்த நீ அதனை ஒழிந்து சத்தின் வயத்தினையாய் அதனைப் புணர்ந்தால்,

அதனால் பொய் விட்டுப்போம் - அப்புணர்ச்சியினாலே சுட்டுணர்வாகிய பொய் நின்னைவிட்டு நீங்கும் எ-று.

எனவே அசத்தை நீங்கிச் சத்தாதல் பயனாயிற்று. (4)

When thou seest all the world as *Asat*, then understand what remains is clearly *Sat*. Yet thou who hitherto hadst knowledge of the world art not *Sat*. If thou unitest thyself to *Sat* and obtainest its Divine Form, *Asat* will also together leave thee. (4)

இதன்கருத்து ஆன்மா சிவரூபனுமாய்ச் சுத்தனுமான விடத்து ஆன்ம சுபாவம் இல்லை என்பது கூறுகின்றது: -

**கண்டதை அன்று அன்று எனவிட்டுக் கண்டு அசத்தாய்**
**அண்டனை ஆன்மாவில் ஆய்ந்துணரப் - பண்டு அணைந்த**
**ஊனத்தைத் தான் விடுமாறு உத்தமனின் ஒண்கருட**
**சானத்தின் தீர்விடம்போல் தான்.** **58**

(இ-ள்) கண்டதை அன்று அன்று என விட்டுக்கண்டு அசத்து ஆய் - சுட்டி உணரப்பட்ட பிரவஞ்சத்தை இது சத்து அன்று இது சத்து அன்றென ஒவ்வொன்றாக நோக்கி அசத்தென்று ஒழித்து,

அண்டனை ஆன்மாவில் ஆய்ந்து உணர - தன்னறிவின் கண்ணே சுட்டுணர்வின்றி நின்ற கடவுளை ஆராய்ந்து சோகமெனப் பாவிப்பான் ஆயின்,

உத்தமனில் பண்டணைந்த ஊனத்தைத் தான் விடும் ஆறு - அப்பாவகத்தால் அத்துவிதமாய் விளங்கித்தோன்றும் முதல்வனால் அஜாதியாய்க் கூடிகின்ற பொதுவியல்பைத் தான் விட்டு நீங்குமாறு,

ஒள் கருட சானத்தில் தீர்விடம்போல் தான் - ஒள்ளிய கருடத்தியானத்தில் விளங்கித்தோன்றும் கருடனால் அப்பாவகன் விடத்தைத் தீர்த்துக்கொள்ளு மாறுபோலாம் எ-று.

சோகம் பாவனையால் மல நீங்குமென்னும் பட்சத்துக்குக் கருடத் தியானத்தால் விடந்தீருமென்னுஞ் சபட்சங்காட்டியவாறறிக. (5)

When the soul leaves *Asat* on finding that what he had known is not *Sat*, and examines the Lord of the universe in itself and perceives Him as itself, it leaves its *Pasam* by His aid, as the snake bitten man is curud by the Snake charmer contemplating on *Garuda*. (5)

விதியென்னு மஞ்செழுத்தே யென்றது, இனி இவ்விடத்து ஸ்ரீபஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரிக்கவென்றது. இவ்வான்மாக்களுக்கு ஞானம் பிரகாசித்து அஞ்ஞானத்தை வேம்புதின்ற புழுப்போல நோக்கிற்றை நோக்கி நிற்கும் ஆகலின், அது நீக்குதற்கெனக்கொள்க: --

**அஞ்செழுத்தால் உள்ளம் அரனுடைமை கண்டு அரனை**
**அஞ்செழுத்தால் அர்ச்சித்து இதயத்தில் - அஞ்செழுத்தால்**
**குண்டலியில் செய்து ஓமம் கோதண்டம் சானிக்கில்**
**அண்டனாம் சேடனாம் அங்கு.** **59**

(இ-ள்.) அஞ்செழுத்தால் உள்ளம் அரன் உடைமை கண்டு - பஞ்சாக்கரத்தாலே ஆன்மா சிவனுக்கடிமையாதலை உணர்ந்து, அரனை அஞ்செழுத்தால் இதயத்தில் அர்ச்சித்து அப்படியுள்ள சிவனை அஞ்செழுத்தினால் இதயகமலத்திற் பூசித்து,

அஞ்செழுத்தால் குண்டலியில் ஒமம் செய்து - அஞ்செழுத்தாலே குண்டலித்தானமாகிய உந்தியிலே அக்கினி காரியமும் பண்ணி,

கோதண்டஞ் சானிக்கில் - புருவமத்தியில் சிவோகம் பாவனை செய்வான் ஆயின்,

அங்கு அண்டன் ஆம் சேடன் ஆம் - அப்பாவினக்கண் விளங்கிச் சிவஞான சொரூபியாவன் அச்சிவனுக்கு அடிமையும் ஆவன் எ - று

பஞ்சாக்கரத்தின் உண்மையை விதிப்படி செபிக்கவே அஞ்ஞானமாகிய பிரவஞ்சம் சீவியாது என்பது சம்பிரதாய வழக்கால் காட்டியவாறு காண்க. (6)

If the soul perceives by pronouncing *Sri Panchatchara* that it is the servant of *Hara* and does puja to Him in the region of the heart by means of *Sri Panchatchara* and performs *Homam* by the same means in the region of *Kundalini* (navel) and contemplates Him between the eyebrows, the Lord will appear to the soul aud the soul will become His servant. (6)

ஆன்மா விளக்கமுறச் சிவனை தரிசிக்கவேண்டும் என்பதனை உண்மை முகத்தால் உணர்த்துகின்றது: -

**இந்துவில் பானுவில் இராகுவைக் கண்டு ஆங்குச்**
**சிந்தையில் காணில் சிவன் கண்ணாம் - முந்தவே**
**காட்டாக்கின் தோன்றி கனல்சேர் இரும்பென்ன**
**வாட்டானாம் ஓது அஞ்செழுத்து.** 60

(இ-ள்.) இந்துவில் பானுவில் இராகுவைக் கண்டாங்கு - சந்திரனிடத்தினும் ஆதித்தனிடத்தினும் காணப்படாத ராகு கேதுக்களைக் கண்டாற்போல,

சிந்தையில் காணின் - உணரப்படாத சிவனைத் தன்னிதய பங்கயத்தில் அஞ்செழுத்தில் வைத்துக்காணும் ஆயின்,

முந்தவே காட்டாகிச் சிவன் தோன்றிக் கண்ணாம் - கோலினாற் கடையவே நெருப்புத் தோன்றும் ஆறுபோல, அச்சிவன் ஆண்டுத் தோன்றி அறிவுக்கு அறிவாய் விளங்குவன்,

தான் கனல்சேர் இரும்பு என்ன ஆன் ஆம் - அப்பொழுது தானும் எரிசேர்ந்த இரும்பு போலத் தனது சுதந்தரத்தை விட்டு அம்முதல்வனுக்கு அடிமையாவான். ஆதலால்,

அஞ்செழுத்து ஒது - பஞ்சாக்கரத்தை விதிப்படி நீ ஓதுவாயாக எ-று.

இதய பங்கயத்தில் பஞ்சாக்கரத்தில் சிவனைக் காணும் என்னும் பட்சத்துக்குச் சந்திராதித்தரிலி ராகு கேதுவைக் கண்டாங் கென்பது சபட்சமாயினவாறும், ஆண்டுச் சிவன் தோன்றிக் கண்ணாம் என்னும் பட்சத்துக்குக் காட்டத் தினின்று அங்கி தோன்றும் ஆறுபோல என்பது சபட்சமாயினவாறும் சிவனுக்கு ஆளாம் என்னும் பட்சத்துக்குக் கனல் சேரிரும் பென்ன என்பது சபட்சம் ஆயினவாறும் காண்க. (7)

If the soul sees che Lord in his heart as the shadow Planets *Ragu* and *Kethu* are seen in the Sun and in the Moon, the Lord will appear as the Light of the soul, just as the latent fire appears when pieces of wood are rubbed together. The soul will then become His servant, just as the iron becomes fire when heated. Therefore contemplate on *Sri Panchatchara*. (7)

தத்துவம் முப்பத்தாறுக்கு மேற்பட்ட சிவனை இதயபங்கயத்திற் கண்டு அருச்சிக்கும் ஆறு அவ்விதயபங்கயத்தின் இயல்புணர்த்துகின்றது: -

**மண்முதல் நாளம் அலர் வித்தை கலாரூபம்**
**எண்ணிய ஈசர் சதாசிவராம் - நண்ணில்**
**கலை உருவாம் நாதமாம் சத்தி அதன் கண்ணாம்**
**நிலை அதில் ஆம் அச்சிவன் தாள் நேர்.** 61

(இ-ள்.) நண்ணில் - அவ்வி தய பங்கயத்தை அறியப்புகின்,

மண்முதல்நாளம் - இதயகமலத்துக்குப் பிருதிவிமுதல் இருபத்துநான்கு தத்துவமும் எண்விரல் நீளமாய் உள்ள தண்டாம்.

வித்தைமலர் - வித்தியா தத்துவங்கள் எழும், சுத்தவித்தையும் ஆகிய எட்டுத் தத்துவமும் எட்டிதழாம்,

எண்ணிய ஈசர் சதாசிவமும் கலாரூபம் - எண்ணப்பட்ட ஈசுரம் சதாசிவம் என்னும் இரண்டு தத்துவமும் அறுபத்து நான்கு கேசரவடிவாம்,

சத்திகலை உருஆம் நாதம் அதன் கண் ஆம் - சத்தி தத்துவம் அக்கேசரங்களுக்குள்ளாகிய பொகுட்டாம், சிவதத்துவம் அப்பொகுட்டிற்காணப்படும் ஐம்பத்தொரு பீஜமாம்,

அச்சிவன் தாள் அதில் நிலை ஆம் - அவ்வியல் பிற்றாகிய இதய பங்கயத்தில் முப்பத்தாறு தத்துவமும் ஆதனமாக உடைய அச்சிவனது சத்தி நிலைபெரும்,

நேர் - அதனை அறிந்து திருவஞ்செழுத்தால் அருச்சிப்பாயாக எ-று,

இதனாலே அண்டபிண்டம் அவை சமம் ஆதலால், புறத்திற் காணப்படும் முப்பத்தாறு தத்துவமும் அகத்தினில் சூக்குமமாய் உண்டு என்பது காட்டிக் கர்த்தாவுக்கு இந்நிலையே அந்நிலையெனத் தெளிவித்தவாறு. (8)

If the real nature of the Heart of the Lotus is examined its stalk syill be the 24 *Tatwas* beginning with earth ; its petals will be *Vidya Tatwas* and *Sutta Vidya*; its pollen the 64 Kalas of *Iswara* and *Sathasiva*; its ovary *Sakti*, the essence of the *Kalas*; and the seeds the 51 forms *Natham*; and the *Arul Sakti* of the Lord Siva rests on it. Therefore, contemplate on *Sri Panchatchara*. (8)

**ஒன்பதாஞ்சூத்திரம் முற்றிற்று.**

---

## பத்தாஞ் சூத்திரம்.

இச்சூத்திரம் என்னு தலிறறோ எனின், பாசக்ஷயம் பண்ணுமாறு உணர்த்துதல் நுதலிற்று: -

**அவனே தானே ஆகிய அந்நெறி**
**ஏகன் ஆகி இறைபணி நிற்க**
**மலமாயை தன்னொடு வல்வினை இன்றே.**

(இ-ள்.) அவனே தானே ஆகிய அந்நெறி - சிவன் உடனாய் நின்று அறியவும் வேறு காணப்பமொறு இன்றி யானே அறிந்தேன் என்னும்படி உயிர் தானேயாய் ஒற்றுமைப்பட்டு உயிரின் வழிகின்ற அப்பெத்தரிலைபோல,

ஏகன் ஆகி இறைபணிநிற்க - ஆன்மா அம்முதல்வனோடு உடனாய் நின்று அறியினும் தானென வேறுகாணப் படுமாறு இன்றி அவனோக ஒற்றுமைப்பட்டு அவ்விறை பணியின் வழுவாது நிற்பின்,

மலமாயை தன்னொடு வல்வினையின்றே - ஆணவமலமும் மாயாமலமும் ஆகிய இவ்விரண்டினோடு வலிய கன்மமலமும் இல்லையாய் ஒழியும் எ.று.

சிவனுடனே ஏகனாகி இறைபணி செய்யின் மும்மலமும் நீங்கும் என்றறிக.

10th Sutra. -- As the Lord becomes one with the Soul in its human condition, so let the Soul become one with Him and perceive all its actions to be His. Then will it lose all its *Mala*, *Maya*, and *Karma*.

அவனே தானேயாகிய வந்நெறி யேகனாகியென்றது, ஈண்டு பரமேச்சுரன் இவ்வான்மாவாய் நின்ற முறைமையால் அவனிடத்து ஏகனாகி நின்ற என்றது. அவ்வாறு நிற்கவே யானென தென்னும் செருக்கற்று அவனது சீபாதத்தை அணையம் ஆகலான்: --

**நான் அவன் என்று எண்ணினர்க்கு நாடும் உளம் உண்டு ஆதல்**
**தான் என ஒன்றி இன்றியே தான் அது ஆய் - நான் என ஒன்று**
**இல் என்று தானே எனும் அவரைத் தன் அடிவைத்து**
**இல் என்று தான் ஆம் இறை.** 62

(இ-ள்) நான் அவன் என்று எண்ணினர்க்கும் - நானென்றும் அவனென்றும் பகுத்து உணர்ந்து நிற்பார்க்கும்,

நாடும் உளம் உண்டு ஆதல் - எண்ணுகின்ற உயிருணர்வு முளைத்துத் தோன்றும் ஆதலால்,

தான் என ஒன்று இன்றியே - தானென்று ஒருமுதல் காணப் படுமாறு இன்றி,

தான் அது ஆய் - தான் அவ்வணர் வேயாய்,

நான் என ஒன்று இல் என்று - நானென்று, ஒரு முதல் காணப்படுமாறு இல்லையென்று உணர்ந்து,

தானே எனும் அவரை - முழுவதுந் தானே யெனக் காணும் அவரை,

தன் அடிவைத்து - தனது திருவடியில் அடங்கி நிற்கச்செய்து,

இல் என்று இறைதான் ஆம் - ஆன்மபோதம் இல்லையென்னும்படி கர்த்தா அவ்வாறே ஆவன் எ-று (1)

When the Soul asserts its own knowledge by distinguishing its acts from those of others, the Lord losing His identity, will appear as the Soul. But the Soul which says that there is no such thing as itself and that all actions are His, the Lord unites to His feet and reveals His real self to it. (1)

இறைபணிநிற்க மலமாயை தன்னொடு வல்வினையின்றே என்றது, இனி அம்முதல் பணி வழுவாது நிற்க என்றது. அவனருளால் அல்லது ஒன்றையும் செய்யானாகவே அஞ்ஞான கன்மம் பிரவேசியா ஆகலான்: -

**நாம் அல்ல இந்திரியம் நம்வழியின் அல்ல வழி**
**நாம் அல்ல நாமும் அரனுடைமை - ஆம் என்னில்**
**எத்தனுவில் நின்ற இறைபணியார்க்கு இல்லைவினை**
**முற்செய்வினையும் தருவான் முன். 63**

(இ-ள்.) இந்திரியம் நாம் அல்ல - கண் முதலிய இந்திரியங்கள் நாமாவன அல்ல,

நம்வழியின் அல்ல - அவை தொழிற்படுதலும் நம்வயத்தான் அல்ல,

வழிநாம் அல்ல - ரூபாதி விடயங்களும் நாமாவன அல்ல,

நாமும் அரன் உடைமை - யாமும் கர்த்தாவினுடைமையாவேம் அல்லது சுதந்தார் அல்லேம்,

ஆம் என்னின்--அங்ஙனம் உணர்வாராயின்,

எத்தனுவில் நின்றும் - எவ்வுடம்பினின்றும்,

இறைபணியார்க்கு - கர்த்தாவின் அடிமைத்திறம் உடையார்க்கு

இல்லைவினை - எவ்வினைகளைச் செய்யினும் அவை பந்தம் ஆதல் இல்லை,

முன் செய்வினையும் தருவான் முன் - பிராரத்தவினையும் தன்னைக் கூட்டுவிக்கும் முதல்வன் சந்நிதியில் உடல் ஊழாய்க் கழியும் எ-று. (2)

If the soul determines that the senses are not itself, and that their actions are not its own, and that the perceived objects are also not itself, and that it is the servant of *Hara*, and then arrives at the conclusion, that everything is His work, then none of the actions of the Soul which, thus, attributes every work to Him, will affect it, in whatever body, it may be encased. And *Praraptha Karma* will also then cease. (2)

இது சிவன் பட்சபாதி அல்லன் என்பது கூறுகின்றது: -

**சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடனாதல்**
**சார்ந்தாரைக் காத்தும் சலமிலனாய்ச் - சாரிந்தடியார்**
**தாந்தானாய்ச் செய்து பிறர் தங்கள்வினை தான்கொடுத்தல்**
**ஆய்ந்தார்முன் செய்வினைம் ஆங்கு.** 64

(இ-ள்.) சார்ந்தாரைக்காத்தல் - தம்மை அடைக்கலமாகச் சார்ந்தவரை அவர்க்கு வரும் துன்பத்தை நீக்கிக்காப்பது,

தலைவர் கடன் ஆதல் - தலைமைக்குணம் உடையார்க்குக் கடமையாதலால்,

சார்ந்தாரைக்காத்தும் - கடவுள் தன்னை அடைந்தவரைப் பாதுகாப்பானாகியும்,

சலம் இலன் ஆய் - அதனால் மாறுபாடுடையன் அல்லனாய்,

சார்ந்து அடியார் தாம் தான் ஆய்ச்செய்து - தன்னை அடைந்து தன்னடிமைத் தொழில் செய்வார் தன் போல் ஆகாமியவினைத்தொடர் இலராகச்செய்து,

பிறர் தங்கள் வினை தான் கொடுத்தல் - பிறர்க்குவரும் ஆகாமிய வினையை அவர்க்குக்கொடுப்பான். ஆகையால்,

ஆய்ந்தார் முன் செய்வினையும் ஆங்கு - அவ்விருதிறத்தோரிடத்தும் வந்து கூடுவதாய பிராரத்த வினையை அவ்வாறே செய்வோர் செய்திக்குத் தக்கபயனாய் இருவேறு வகைப்படச்செய்வன் எ-று. (3)

As it is the prerogative of the great to protect those who resort to them, so God raises those who approach Him and yet bears no ill-will (to the rest). He transforms His devotees into His own Form; and the rest who do not approach Him, He makes them eat the fruits of their own Karma. These two functions He performs according to the deserts of each. (3)

இது ஞானிக்கு ஆகாமியவினையும் மாயேயமும் கெட்டொழியும் என்கின்றது: -

**இங்குளி வாங்கும் கலம்போல ஞானிபால்**
**முன்செய் வினை மாயை மூண்டிடினு - பின்செய்வினை**
**மாயையுடன் நில்லாது மற்றவன் தான் மெய்ப்பொருளே**
**ஆய அதனால் உணரும் அச்சு.** 65

(இ-ள்.) இங்குளிவாங்குங் கலம்போல - தன்பால்வைத்தெடுக்கப்பட்ட பெருங்காயத்தின் வாசனையை வாங்கிக்கொள்ளும் பாத்திரம் போல,

ஞானிபால் முன்செய்வினைமாயை மூண்டிடினும் - தத்துவஞானி யினிடத்துப் பயிற்சி வசத்தால் பிராரத்தவினையும் மாயேயமும் மூளும் ஆயினும்,

பின்செய்வினை மாயை உடல் நில்லாது - ஆகாமியவினை மாயேயத்தோடே கெட்டொழியும்,

மற்றவன் தான் மெய்ப்பொருளே ஆய அதனால் - கடவுளுக்கடிமையாய் நிற்பவன் சிவமே ஆகிய அதனால்,

உணரும் அச்சு - அச்சிவனையே நோக்கி நிற்பன் எ-று. (4)

Like the smell which is present in the pot, even after the asafoetida is removed, the effects of the *Gnani's* previous *Karma* will be felt in the material body and yet they will not furnish food for a future birth, as it, baving been transformed into the Lord is fixed in Him. (4)

இது சிவனடியை உணரவல்லார் வாசனை பற்றி விடயங்களில் சென்றார் ஆயினும் பந்தத்திற்கு உள்ளாகாரென்பது கூறுகின்றது: -

**நண் அனல் வேவாத நற்றவர் தம்மினும்**
**பண் அமர் மாச்செலுத்தும் பாகரினும் - எண்ணி**
**அரனடி ஓர்பவர் ஐம்புலனில் சென்றும்**
**அவர் திறல் நீங்கார் அதற்கு. 66**

(இ-ள்.) நண் அனல் வேவாத நற்றவர் தம்மினும் - அக்கினி நடுவிலிருந்தும் அக்கினித்தம்பனத்தினால் வேவாத நல்ல தவமுடையார் போலவும்,

பண் அமர் மாச்செலுத்தும் பாகரினும் - அலங்கரித்தலைப் பொருந்திய புரவியைச் செலுத்தும் பாகரைப்போலவும்,

எண்ணி அரன் அடி ஓர்பவர் - கருதிச்சிவனுடைய திருவடியை உணரவல்லார்,

ஐம்புலனில் சென்றும் - ஐவகைப்பட்ட விடயங்களில் சென்றார் ஆயினும்,

அதற்கு அவர் திறம் நீங்கார் - அதனால் அவர்கள் தந் திறனில் நீங்கிப் பந்தத்திற்குள்ளாகார் எ-று.

சிவனது திருவடியை உணரவல்லவர் விடயங்களில் சென்றார் ஆயினும் பந்தத்தொடக்கிற்கு உள்ளாகாரென்னும் பட்சத்திற்கு, அக்கினித் தம்பனத்தால் அக்கினிக் குட்பட்டவர் வேவாதவாறு போலவும், குதிரையூர்தற்கு வல்லவர் அக்குதிரையின் வேகத்திற்குட்படினும் தந்திரம் நீங்காதவாறு போலவும் என்பன சபட்சங்க ளாயினவாறு காண்க. (5)

Like the *Siddha* who, sitting in fire, is not burnt by it, and like the horseman who, riding on the fleetest animal, does not lose his hold, the *Gnanis* who, ascertaining the true path, fix their thoughts on the Divine Feet of *Hara*, will not, though, having perception, through the senses, be affected by such perception, and leave their true nature. (5)

இது அரனடியடைந்தோர் ஐம்புலனில் சென்றாலும் அவற்றில் தொடக் குண்ணார் என்பது கூறுகின்றது: -

**சதசத்தாம் மெய்கண்டான் சத்தருளிற் காணின்**
**இதமித்தல் பாசத்தில் இன்றிக் - கதமிக்கு**
**எரிகதிரின் முன்னிருள்போல் ஏலா அசத்தின்**
**அருகு அணையார் சத்து அணைவார் ஆங்கு. 67**

(இ-ள்.) சதசத்து ஆம் மெய்கண்டான் - சத்தினும் அசத்தினும்அது அது ஆதல்பற்றிச் சதசத்தாகின்ற தன்னுண்மையை உணர்ந்தோன்,

சத்து அருளின் காணீன் - சத்தாகிய சிவனது திருவருளினால் யாதொரு பொருளையும் காண்பான் ஆயின்,

பாசத்தில் இதமித்தல் இன்றி - பாசமாகிய அசத்தில் இதஞ் செய்தலின்மையால்,

கதம்மிக்கு எரிக திரின் முன் இருள் போல் - கோபமிகுந்து எரிகின்ற சுடரின் முன் அந்தகாரம் இலதாயினவாறு போல,

ஏலா அசத்தின் அருகு அணையார் - ஏற்காத அசத்தாகிய ஐம்புலனிடத்து எய்தி நில்லார்,

சத்து அணைவார் ஆங்கு - சத்தாகிய சிவத்தை அணைந்து நிற்பார் அவ்விடத்து எ-று.

சத்தெதிர் தனது சத்தியேலாத அசத்தாகிய ஐம்புலனென்னும் பட்சத்திற்குக் கதமிக்கெரிகதிர்முன் இருள் போலென்பது சபட்சமாயினவாறு காண்க. (6)

If one, finding the truth that he is *Satasat*, understands only with *Sivagnanam*, he will not be affected by *Anavamala* and will become united to *Sat*. Then will not the affections of the senses influence hiin, just as the darkness will have no effect before tbe fierce light of the Sun. (6)

பத்தாஞ் சூத்திரம் முற்றிற்று.

## பதினோராஞ் சூத்திரம்.

இச்சூத்திரம் என்னு தலிற்றோ எனின், பரமேச்சுரனது சீபாதத்தை அணை புமாறு உணர்த்துதல் நுதலிற்று: -

**காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்**
**காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்**
**அயரா அன்பின் அரன்கழல் செலுமே.**

(இ-ள்.) காணும் கண்ணுக்குக் காட்டும் உளம் போல் - நாட்டச்காணும் தன்மையை உடைய கண்ணுக்கு உருவத்தைக் காட்டுகின்ற ஆன்மாப்போல,

காண உள்ளத்தைக் கண்டு காட்டலின் - அறிவிக்க அறியும் இயல்பை உடைய ஆன்மாவிடயத்தை அறியும்படி சிவன் அதனோடியைந்து நின்று அறிவித்து அறிந்து வருதலால்,

அயரா அன்பின் - அவ்வத் துவித நிலையை மறவாது செய்யும் அன்பினாலே,

அரன் கழல் செலுமே - சிவனுடைய திருவடியாகிய சிவானதானுபூதியைத் தலைப்படும் எ - று.

சுத்தாத்து மா அத்துவித நிலைபை மறவாது கடைப்பிடித்து பின்றுசெய்யும் அன்பினாலே சிவன் திருவடியாகிய சிவானுபூதியைத் தலைப்படும் என்றதாம்.

11th Sutra. - As the soul enables the eye to see and itself sees, so Hara enables the soul to know and itself knows. And this *Adwaitha* knowledge and undying Love will unite it to His Feet.

"காணுங் கண்ணுக்குக் காட்டுமுளம்போல், காணவுள்ளத்தைக் கண்டு காட்டலின்" என்றது ஈண்டு இவ்வான்மாக்கள் அவனை இன்றி அமைந்து ஒன்றையும் விடயியா ஆகலான் அவனும் அவற்றது விடயத்தை உணரும் என்றது: -

**ஐந்தையுமஒக்க உணராது அவற்றுணர்வது**
**ஐந்தும் போல் நின்று உணரும் ஆகலான் - ஐந்தினையும்**
**ஒன்றொன்றாப் பார்த்துணர்வது உள்ளமே எவ்வுலகும்**
**ஒன்றொன்றாப் பார்க்கும் உணர்ந்து.** **68**

(இ-ள்.) ஐந்தையும் ஒக்க உணராது - சுவை, ஒளி, ஊறு, ஓசை நாற்றம் என்னும் ஐந்துவிடயங்களையும் ஒருங்கே உணரமாட்டாது.

அவற்று ஐந்தும் போல் நின்று உணர்வது உணரும் ஆதலால் - அவ்வைந்தினும் ஐம்பொறிபோல அதுவதுவாய்ச் செறிந்து நின்று உணர்வதை உணருந்தன்மைத்து. - ஆதலால்,

ஐந்தினையும் ஒன்று ஒன்று ஆய்ப் பார்த்து உணர்வது - அவ்வைம் புலன்களையும் ஒவ்வொன்றாய் அறிந்து அனுபவிப்பது.

உள்ளமே - ஆன்மாவாம்.

எவ்வுலகும் ஒன்று ஒன்று ஆய் உணர்ந்து பார்க்கும் - அவ் வான்மா வைப்போலப் பலதிறப்படுதல் இன்றி என்றும் ஒரு பெற்றித்தாய சிவம் எல்லா உயிர்களுடைய எல்லா விடயங்களையும் ஒருசேர உணர்ந்து அவ்வுயிர்களுடன் நின்று சிறப்புவகையானும் உணரும் எ-று. (1)

As the soul becomes conscious of such objects only as it comes in contact with each of the senses separately, it cannot apprehend all the objects of the five senses at once, but apprehends them only one by one. But God sees and understands all things at once. (1)

**இதுவுமது.**

**ஏகமாய் நின்றே இணையடிகள் ஒன்றுணரப்**
**போகமாய்த் தான் விளைந்த பொற்பினானல் - ஏகமாய்**
**உள்ளத்தின் கண்ணானான் உள்குவார் உள்கிற்றை**
**உள்ளத்தாற் காணானோ உற்று. 69**

(இ-ள்.) ஏகம் ஆய் நின்றே - சிவனோடு ஒற்றுமைப்பட்டு நின்று, இணை அடிகள் ஒன்று உணர-அவனுடைய அடியிணைகளை ஒரு பெற்றிப்பட்ட ஆன்மா அறியவே,

தான் போகம் ஆய் விளைந்தபொற்பினான் - தான் அவ்வான்மாவுக்குப் பரபோகமாய் விளைகின்ற பொலீவினை உடையன், ஆகலானும்,

ஏகம் ஆய் உள்ளத்தின்கண் ஆனான் - அப்படி உணருங்கால் அவ்வான்ம ஞானத்தினிடத்து ஏகமாய்விட்டு நீங்கா தவன், ஆகலானும்,

உள்குவார் உள்கிற்றை - நினைவார் நினைகின்ற பொருளாகிய தன்னை,

உள்ளத்தால் உற்றுக்காணானோ - அவரறிவோடு கூடி நின்று உற்றறியானோ எ-று.

கண் கண்ணாடியில் நின்றும் தன்னைவிடயித்தாற்போல, சிவன் ஆன்மாவுடன் நின்று தன்னை விட யித்தல் பொருத்தம் உடைத்தென உணர்க.

(2)

When the soul unites itself to God and feels His *Arul* God covers it with his Supreme Bliss and becomes one with it. Will He not know Himself who is understood by the soul through the intelligence of the soul? (2)

அயரா வன்பினரன்கழல் செலுமே" என்றது, இனிப்பத்தியினால், மறவாதேத்த அவனது சீபாதத்தை அணையும் என்றது அவன் அன்னியமின்றிச் செய்வோர் செய்திப்பயன் விளைத்து நிற்றலான்: -

**அருக்கன் நேர் நிற்பினும் அல்லிருளே காணார்க்கு**
**இருட்கண்ணே பாசத்தார்க்கு ஈசன் - அருட்கண்ணால்**
**பாசத்தை நீக்கும் பகல் அலர்த்தும் தாமரைபோல்**
**நேசத்தின் தன்னுணுர்ந்தார் நேர். 70**

(இ-ள்.) அருக்கன் நேர் நிற்பினும் - ஆதித்தன் எல்லார்க்கும் ஒப்ப நிற்பினும்,

காணார்க்கு அல் இருளே - காட்சி உடையார் கண்ணுக்கன்றி அஃதில்லாதார் கண்ணுக்கு இரவின் கண்ணதாகிய இருளேயாம் அதுபோல,

பாசத்தார்க்கு ஈசன் இருள் கண்ணே - சிவன் எவ்விடத்தும் ஒப்ப நிற்பினும் பாசம் நீங்கினவர்க்கன்றி, அஃதுடையார்க்கு அவன் பாசத்தின் கண்ணேயாவன்,

பகல் அலர்த்தும் தாமரைபோல் - ஆதித்தன் பக்குவம் உடைய தாமரையைக் கூம்புதலின் நீக்கி அலர்த்துதல் போல,

நேசத்தின் தன் உணர்ந்தார் நேர் - பருவம் உடையராய்ப் பத்தியினால் தன்னை மறவா துணர்வார்க்கு,

அருள் கண்ணால் பாசத்தை நீக்கும் - சிவன் தனது திருவருட் பார்வையால் பாசத்தை நீக்கி அறிவை அலர்த்துவன் எ-று. (3)

The blind will only see darkness even in the presence of the Sun; just so, the soul entangled in *Pasa* cannot see *Isa* (though he is present in every thing). Just as the Sun only opens the Lotus fower (whep it is matured), so the darkness of those who understand Him by their Love will be removed by bis *Arul*. (3)

பாசத்தை நீக்கி அறிவை அலர்த்து முறைமை இவ்வாறென உணர்த்தி அதனை வலியுறுத்துகின்றது: -

**மன்னும் இருளை மதிதுரந்த வாறு அன்பின்**
**மன்னும் அரனே மலம் துரந்து - தன்னின்**
**வலித்து இரும்பைக் காந்தம் வசஞ்செய்வான் செய்தல்**
**சலிப்பில் விகாரி அலன் தான்.** 71

(இ-ள்.) மன்னும் இருளை மதிதுந்த ஆறு - கண்ணின்கண் நிலைபெறும் இருளைப் பிறைமதி நாள்தோறும் நீக்கி ஒட்டுமாறுபோல,

அன்பின் மன்னும் அரனே மலந் துரந்து - அன்பின் மிகுதியினாலே உயிரோடனாதியே நிலைபெறுஞ் சிவன் அவ்வுயிரினிடத்ததாகிய மலத்தை முறையானே பற்றறத் துரந்து,

தன்னின் வலித் திரும்பைக் காந்தம் வசஞ்செய்வான் - காந்தக்கல் இரும்பைத் தன்கண் ஈர்த்துத் தன்வசமாகச் செய்வதுபோல,

செய்தல் சலிப்பு இல் - உயிரைத் தன்வசமாகச் செய்துவருஞ் செய்கையில் அச்சிவனுக்குச் சலிப்பில்லை.

விகாரி அலன் தான் - அங்ஙனஞ்செய்துவருதல்பற்றி விகாரியாகான் அச்சிவன் எ-று.

செய்வானென்பது எச்சம் அன்று, தொழிற்பெயர் எனவறிக.

சிவன் உயிரின் கண்ணதாகிய மலத்தைத் துரப்பெனென்னும் பட்சத்திற்கு இருளை மதிதுந்தவாறு சபட்சமாயினவாறும், கர்த்தா உயிரைத் தன்வயமாகச் செய்துவருஞ் செய்கையினால் சலிப்பிலனென்னும் பட்சத்திற்குக் காந்தம் இரும்பைத் தன்னின் வலித்து வசஞ்செய்தல் என்பது சபட்சமாயினவாறுங் காண்க. (4)

As the Moon dispels the deep darkness, so God, who is connected with the soul from eternity, in His Love, removes the *Mala* of the soul and attracts it to Himself, just as the magnet attracts iron and brings it under control. While so operating, He incurs neither weariness for change. (4)

அநாதி யாயுள்ள சகச மலம் அவ்வுயிரின் வேறாய்த் துரக்கற்பாற் றென்பதனை அருத்தாபத்தி அளவையால் வலியுறுத்துகின்றது: -

**நசித்து ஒன்றின் உள்ளம் நசித்தலால் ஒன்றா**
**நசித்திலதேல் ஒன்றாவது இல்லை - நசித்துமலம்**
**அப்பு அணைந்த உப்பின உளம் அணைந்து சேடமாம்**
**கப்பு இன்றாம் ஈசன் கழல்.** 72

(இ-ள்.) உள்ளம் நசித்து ஒன்றின் - ஆன்மாகெட்டு அசன்கழல் ஒன்று மாயின்,

நசித்தலால் ஒன்று - அவ்வான்மா கெடுதலால் ஒன்றமாட்டாது,

நசித்திலதேல் ஒன்றாவது இல்லை-- கெடாதாயின் ஒன்றாமாறு இல்லை. ஆதலால்,

மலம் நசித்து - தனது சகசமலம் கெட்டொழிய,

அப்பு அணைந்த உப்பின் - உப்புத் தனது கண்டிப்பு நீங்கி நீரின் ஒன்றாமாறு போல,

உளம் அணைந்து சேடம் ஆம் - ஆன்மா சிவன் திருவடியை அணைந்து அத்திருவடிக்குச் சேடமாகும்.

கப்பு இன்று ஆம் ஈசன் கழல் - அங்ஙனம் சேடமாகிய ஆன்மாவுக்கு மீளக் கவர்ச்சி இல்லை எ-று.

சகசமலம் நசிக்க ஆன்மா சிவன் கழல் அணையும் என்னும் பட்சத்திற்கு அப்பணைந்த உப்பினென்பது சபட்சமாயினவாறு காண்க. (5)

When becoming one with God, if the soul perished, there will be nothing to unite vitir God, as it perisles. If it did not perish, it cannot become one with God. Just like the salt dissolved in water, the soul, after loosing its *Mala*, unites itself to His Feet and becomes the servant of God (looses its individuality). Then it will have no darkness (no separation.) (5)

ஆன்மா மூன்றவத்தைகளினும் தன்னியல்பிற்குக்கேடி ன்றியே நிற்குமென்பது உவமையின் வைத்துக் காட்டுகின்றது: -

**பொன்வாள்மு கொண்மூவிற் புக்கு ஒடுங்கிப் போய் அகலத்**
**தன்வாளே எங்குமாம் தன்மைபோல் - முன்வாள்**
**மலத்தின் மறைந்து உள்ளம் மற்று உலகை உண்ணும்**
**மலத்து இரித்துச் செல்லும் வரத்து. 73**

(இ-ள்.) பொன் வாள் முன் கொண்மூவில் புக்கு - ஆதித்தன் காலைப்பொழுதில் முகிற்படலத்தில் மறைந்து,

ஒடுங்கி - அம்முகிற்படலம் ஒருபுடை நீங்கியவிடத்துத் தன்னொளி ஏகதேசமாய் ஒடுங்கித்தோன்றி,

போய் அகல - அம்முகிற்படலம் விட்டொழிந்தவிடத்து,

எங்கும் தன்வாளே ஆம் தன்மை போல் - எவ்விடத்தும் தன்னுடைய பிரகாசமேயாய்த் தோன்றுந்தன்மைபோல,

உள்ளம் வாள் முன் மலத்தின் மறைந்து - ஆன்மாவின் அறிவு அனாதியே மலத்தில் மறைப்புண்டு,

மற்று உலகை உண்ணும் - பின்பு கருவிகளோடு கூடி ஏகதேசமாய் அறிவு விளங்கி ஐம்புலன்களை விடயிக்கும்,

மலம் திரித்து வரத்துச் செல்லும் - பின்பு மலத்தை முதல்வன் அருளால் பற்றறக்களைந்து வியாபகமாய்! அறிவு விளங்கி அவனது சீபாதத்தை அனைந்து சுத்தப்படும். எறு

ஆன்மாவின் அறிவு அனாதியே மலத்தில் மறைப்புண்டு கிடந்து பின்பு முதல்வன் அருளால் மலத்தைப் பற்றறக்களைந்து, அவனது சீபாதத்தை அணையுமென்னும் பட்சத்திற்குப் 'பொன்வாள் முன் கொண்மூவிற் புக்கொடுங்கிப் போயகலத், தன்வாளே யெங்குமாந்தன்மைபோல்" என்றது சபட்சமாயினவாறு காண்க. (6)

Just as the rising Sun is enshrouded by the clouds and then appears, little by little, and when all the clouds are driven away, spreads its shinning rays everywhere, so the soul's intelligence is enshrouded from eternity in *Mala* and brightens a little from its experience of the world; and getting rid of its *Mala* altogether, recovers its original intelligence and unites itself to the Feet of God.

**பதினோராஞ்சூத்திரம் முற்றிற்று.**

---

## பன்னிரண்டாஞ் சூத்திரம்.

இச்சூத்திரம் என்னுதலிற்றோ எனின், அசிந்திதனாய் நின்ற பதியைச் சிந்திதனாக் கண்டு வழிபடுமாறுணர்த்துதல் நுதலிற்று: -

**செம்மலர் நோன் தாள் சேரல் ஒட்டா**
**அம்மலங் கழிஇ அன்பரொடு மரீஇ**
**மால்அற நேயம் மலிந்தவர் வேடமும்**
**ஆலயம் தாமும் அரன் எனத் தொழுமே.**

(இ-ள்) செம்மலர் நோன்தாள் - அரன்கழல் அடைந்த சீவன் முத்தனானவன் சிவந்த கமலம்போன்ற சிவனது வலிய சீபாதத்தை,

சேர ஒட்டா அம்மலங் கழீஇ - கூட ஒட்டாத அந்த மலத்திரயமாகிய அழுக்கை ஞான நீராற் கழுவி,

அன்பசொடு மரீஇ - அன்புசெய்யும் மெய்ஞ்ஞானிகளோடு கூடி,

மால் அற நேயம் மலிந்தவர் வேடமும் - மயக்கமற அன்பு மிகுந்தவர்களுடைய திருவேடத்தையும்,

ஆலயந்தானும் அரன் எனத் தொழுமே - சிவாலயத்தையும் சிவனெனக்கண்டு வழிபடுவன் எ-று,

12th Sutra.- Let the *Jivatma*, after washing off its *Mala* which separates it from the strong Lotus feet of the Lord aud mixing in the society of *Bhaktas* (*Jivan Muktas*) whose souls abound with Love, having lost dark ignorance, contemplate their Forms and the Forms in the temples as His Form.

"செம்மலர் நோன்றாள் சேர லொட்டா, அம்மலங் கழீஇ" என்றது ஈண்டு ஆணவம் மாயை காமியம் என்னும் மலங்களைக் களைக என்றது, அவை தாம் ஞானத்தை உணர்த்தாது அஞ்ஞானத்தை உணர்த்தும் ஆகலான்: -

**புண்ணிய பாவம் பொருந்தும் இக் காமியமும்**
**மண்முதல் மாயைகாண் மாயையும் - கண்ணிய**
**அஞ்ஞானம் காட்டும் இவ் ஆணவமு இம் மூன்றும்**
**மெய்ஞ்ஞானிக் காகா விடு.** 74

(இ-ள்.) புண்ணிய பாவம் பொருந்தும் இக்காமியமும் - புண்ணிய பாவப் பயனாயும் புண்ணியபாவ காசணமாயும் பொருந்துகின்ற இக்கன்மமலமும்,

மண் முதல் மாயை காண் மாயையும் - பிருதிவி முதல் மோகினி மீராய்க் காணப்படுகின்ற மாயா மலமும்,

கண்ணிய அஞ்ஞானம் காட்டும் இவ் வாணவமும் - சுட்டி அறிவதாகிய விபரீத உணர்வைப் பயக்கும் இவ்வாணவ மலமும்,

இம்மூன்றும் மெய்ஞ்ஞானிக்கு ஆகாவிடு - இம் மூன்றுளும் மெய்யுணர்வுடைய உனக்கு ஆகாமையால், விட்டு ஒழிவாயாக எ-று (1)

Let the true *Gnani* leave alone the three *Mala*, namely, *Karma*, which is the effect and cause of good and bad acts; *Maya*, from which is developed the *tatwas* from earth to motire; and *Anava*, which begets *Ahankara*, as these will harm him. (1)

"அன்பரொடு மரீஇ" என்றது இனிச் சிவபத்தர்களோடு இணங்க என்றது, அல்லாதார் அஞ்ஞானத்தை உணர்த்துவர் ஆதலால்: -

**மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்கும் பங்கம்**
**சிறப்பில்லார் தந்திறத்துச் சேர்வை- அறப்பித்துப்**
**பத்த ரினத்தாய்ப் பரனுணர்வி னாலுணரும் க காட்டம்**
**மெய்த்தவரை மேவா வினை.**

(இ-ள்) தம்மை மறப்பித்து - தங்களுடைய ஞானக்கண்ணை இழப்பித்து,

மலங்களின் வீழ்க்கும் - மலங்களாலாய பிறக்குழியில் வீழ்விக்கும்,

சிறப்பு இல்லார் தம் திறத்துச் சேர்வை அற - அன்பிலார் திறத்திற் சேர்க்கை அறும்படி,

பித்துப் பத்தர் இனத்து ஆய் - அன்புடைய சிவபத்தருடைய இனத்திற்சேர்ந்து,

பரன் உணர்வினால் உணரும் மெய்த்தவரை - சிவஞானக்கண்ணால் உணரப்பெற்ற மெய்த்தவராயினாரை,

வினைமேவா - பிராரத்தவினைகள் வாதியா எ-று (2)

The *Karma* will not affect the true *Gnani* who leaving the Society of ignoble persons (who forget themselves and suffer in *Mala*), join the Society of Bhakthas and understand with the Light of God. (2)

"மாலறநேய மலிந்தவர் வேடமும், ஆலயந் தானு மரனெனத் தொழுமே" என்றது, இனிப் பத்தரது திருவேடத்தையும் சிவாலயத்தையும் பரமேச்சுர னெனக் கண்டு வழிபடுக என்றது, அவன் மற்றிவ்விடங்களில் பிரகாசமாய் நின்றே அல்லாதவிடத்து அப்பிரகாசமாய் நிற்றலான்: -

**தன் உணர வேண்டித் தனது உருவைத் தான் கொடுத்துத்**
**தன் உணரத் தன்னுள் இருத்தலால் - தன் உணரும்**
**நேசத்தர் தம்பால் நிகழும் ததிநெய்போல்**
**பாசத்தார்க் இன்றாம் பதி.** **76**

(இ-ள்) தன் உணர வேண்டி - உலகத் துள்ளார் தன்னை அறி தற்பொருட்டு,

தனது உருவைத் தான் கொடுத்து - தனது வடிவத்தைத் தன்னன்பர்க்குக் கொடுத்தலானும்,

தன் உணர - தன்னை அறியச்செய்யலானும்,

தன்னுள் இருத்தலால் - அவரைத் தன்வியாபகத்துள்ளாக இருத்து தலானும்,

தன் உணரும் நேயத்தர் தம்பால் ததிநெய்போல் நிகழும் - தன்னை உள்ளவாறு உணருகின்ற பத்தரிடத்திலே தயிரினிடத்த தாகிய நெய்போல விளங்கித் தோன்றுவன்;

பாசத்தார்க்கு இன்று ஆம் - பாசக் கட்டுடையாரிடத்துப் பாலின்கண் ணதாகிய நெய்போல விளங்காது நிற்பன்.

பதி - பரம்பொருளாகிய சிவன் எ-று

The Lord *Pathi* wishing that all should understand Him gives His Forw to His *Bhakthas* who desire to know Him and makes them know Himself and keeps ther in His own self and makes Himself visible as butter in curds. To those entangled in *Pasa*, He is invisible as is butter in milk. (3)

**இதுவுமது.**

**கண்டதொரு மந்திரத்தாற் காட்டத்தில் அங்கிவேறு**
**உண்டல்போல் நின்று அங்கு உளதாமால் - கண்ட உருத்**
**தான் அதுவாய் அன்று ஆனான் தான் அதுவாய்த் தோன்றானோ**
**தான் அதுவாய்க் காணும் தவர்க்கு.** 77

(இ-ள்) கண்டது ஒரு மந்திரத்தால் - தம்மால் காணப்பட்ட ஒரு மந்திரசாநித்தியத்தால்,

காட்டத்தில் அங்கி வேறு உண்டு - விறகில் நெருப்புக் கடைகோலால் கடையுமிடத்து வேறாய் விளங்கும்,

அல்போல் - கடையாத விடத்து விளங்குவது அன்றாதல் போல,

நின்று அங்கு உளது ஆம் - அம்மந்திரசாநித்தியம் உள்ளவிடத்து விளங்கித் தோன்றுவதும், அஃதில்லாதவிடத்து விளங்கித் தோன்றாமல் நிற்பதுமாகிய பொருளாம்.

கண்ட உருத்தான் அது ஆய் அன்று ஆனான் - உயிர்களுக்குப் புத்தி முத்தி அளித்தற்பொருட்டுத் தாவரவடிவினிடத்தில் கலப்பினால் அதுவே தானாய் அதுவன்றி வேறு பொருளுமாம் இயல்பினையுடைய சிவன்,

தான் அது ஆய்க்காணும் தவர்க்குத் தான் அது ஆய்த்தோன்றானோ - அவ்வடிவே அவனாகக்காணப் பெறுந் தவம் உடையார்க்கு அப்பெற்றி யனேயாய் விளங்கித் தோன்றான் கொல்லோ எ-று. (4)

As the fire appears distinct from the pieces of wood rubbed together, so the Lord who exists in all visible forms, and yet is different from them, will be present in a visible form composed of *Mantra*. To those who can view the Form itself as God, will He not appear as that Form itself. (4)

இனி இவ்விடங்களில் வழிபடுக என்றது நரம்பு நாடி முதலியவற்றைத் தான் அதுவாய் வரும் புருடன் அவையாகாவாறு அப்புருடனும் ஆகலான்: -

**அது இது என்றது அது வல்லான் கண்டார்க்கு**
**அது இது என்றதையும் அல்லான் - பொது அதனில்**
**அத்துவிதம் ஆதல் அகண்டமும் தைவமே**
**அத்துவித அன்பின் தொழு.** 78

(இ-ள்) அது இது என்றது அது அல்லான் - அதுவும் இதுவும் எனப் பகுத்தோதப்பட்ட பேதநிலைமை யனும் அல்லனாய், அதுவே என்று ஓதப்பட்ட அபேதநிலைமையனும் அல்லனாய்,

கண்டார்க்கு - கர்த்தா உயிர்ப் பொருள் உயிர் இல் பொருள் எல்லா வற்றினும் நிற்கும் நிலைமையை அறியப்பெற்றார்க்கு,

அது இது என்றதையும் அல்லான் - அதுவாகிய இதுவென்று ஓதப்பட்ட பேதாபேத நிலைமையனும் அல்லனாய்,

பொதுவதனில் அத்துவிதம் ஆதல் அகண்டமும் தைவமே - அம்மூன்றற்கும் பொதுமையால் அத்துவித நிலைமையன் ஆதலால் எல்லாப் பொருளும் அவன் வடிவேயாம் ஆயினும்,

அத்துவிதி அன்பின் தொழு - அத்துவித சித்தாந்தத்தைப் பெற்று டையோய், அவற்றுள் அன்பு விளையும் இடத்தில் வழிபடுவாயாக எ-று. (5)

To the *See*r, God is neither different from all things, nor is He one with them, nor one and different from them He is in the general *Adwaitha* relation with them and everything is His form; and yet let the Adwaithee avorship the Form which excite his Love most. (5)

அசத்தை ஒருவிய வழி உளதாகிய ஞான சொருபம் நி
லை பெறுதல் வினைத்தீர்வின் கண்ண தாகலின், அவ்வினையின்
வேரறுத்து மெய்யுணர்வை நிலைபெறுத்தற் பொருட்டு அத
னை அங்ஙனம் நிலை பெறுத்தினார் மாட்டுச் செய்யும் வழிபாடு
ஒருதலையான் வேண்டப்படும் என்பது: -

**வினையா। அசத்து விளைதலால் ஞானம்**
**வினைதீரின் அன்றி விளையா - வினைதீர**
**ஞானத்தை நாடித் தொழவே அதுநிகழும்**
**ஆனத்தால் அன்பின் தொழு.** 79

(இ-ள்.) வினையால் அசத்து விளைதலான் - பிராரத்த வாசனையால் விருப்பு வெறுப்பு முதலிய அசத்துகள் விளைதலினாலே,

ஞானம் வினை தீரின் அன்றி விளையா - மெய்யுணர்வு அப்பிராரத்த வாசனைப்பற்றுக் கழிந்தால் அன்றி விளையாது. ஆகலான்,

வினை தீர ஞானத்தை நாடித்தொழலே - அந்தவாசனை பற்றறக்கெடுதற் பொருட்டு மெய்யுணர் வுடையாரைத் தேடிவழிபடவே,

அதுநிகழும் - மெய்யுணர்வு தோன்றும்,

ஆனத்தால் அன்பின் தொழு - ஆகையால், அன்பினால் அவரை வழிபடுவாயாக எ-று (6)

As acts only lead to ignorance unless the previous *Karma* is removed, *Gnanam* will not rise. This *Karma* will cease and. *Gnanam* will rise when the Society of *Gnanis* is sought and they are worshipped. Therefore, worship them in all Love. (6)

வழிபாடு செய்பா வழிப்படும் குற்றமும், செய்தல் கடமையாம் ஆறும் உணர்த்தி, விதித்தலை வலியுறுத்துகின்றது: -

**தன்னை அறிவித்துத் தான் தானாய்ச் செய்தானைப்**
**பின்னை மறத்தல் பிழையல் அது -முன்னவனே**
**தானே தானாச் செய்தும் தைவமென்றும் தைவமே**
**மானே தொழுகை வலி. 80**

(இ-ள்) தன்னை அறிவித்து - தன் உண்மை அறியமாட்டா உயிர்க்குப் பலவாற்றானும் அதனைத் தெரிய உணர்த்தி,

தான் தான் ஆய்ச் செய்தானை - தானே தானாதம் வண்ணம் செய்தளித் தவனை,

பின்னை மறத்தல் பிழை அலது - அதன்பின்னர் மறக்கும் ஆயின், முன் அறியாமையால் மறந்தகுற்றம் போலத் தீர் திறன் உடையதன்று. ஆகலானும்,

முன்னவனே தானே தான் ஆய்ச்செய்தும் - முதல்வனே அங்ஙனம் தான் தானேயாகச் செய்தாலும்,

தைவம் என்றும் தைவமே - முதல்வனது உபகாரத்தை இன்றி அமையாத அடிமையாகிய உயிர் எக்காலத்தும் அடிமையேயாம். ஆதலானும்,

மானே தொழுகைவலி - அப்பெரியோனையே வழிபடுகை உயிர்க்கு வலியாவது எ-று (7)

To forget the Lord who made him know himself and transformed him like unto Himself, is an inexcusable sin. Though he who was always a servant, is now transformed like unto Himself, yet he continues to be only His servant. Hence his strength consists in the worship. (7)

இச்சிவஞான போதம் என்னும் நூலைக்கோடற்கு உரிய அதிகாரிக ளாவார் இவரென உணர்த்துகின்றது: -

**சிவமேன்றும் அந்ததர சிந்தைநேர் நோக்கப்**
**பவமின்றாம் கண் வாசகத்தின் - சிவன் உண்டாம்**
**ஒன்று இரண்டு மலத்தார்க் இங்கு ஒண்குருவால்**
**இன்று இந்நூல் மும்மை மலர்க்கு.**

(இ-ள்.) சிவம் என்னும் அந்த தர - சிவமென்றோதப்படும் வேதாந்தத் தெளிவாகிய சித்தாந்தத்தை உடைய மாணாக்கனே,

சிந்தைநேர்நோக்கப் பவம் இன்று ஆம் - சிந்தையின்கண் நின்று அருட்பார் வையால் நோக்குதலால் பிறவிக்கேதுவாகிய பசுத்துவம் நீங்கும்,

கண்வாசகத்தில் சிவம் உண்டாம் - தேவகுருவாய் முன்னின்று செய்யும் திருநோக்கும் திருவாக்கும் எனப்படும் தீக்கையால் சிவத்துவம் விளங்கும்,

ஒன்றும் இரண்டும் மலத்தார்க்கு - முறையே ஒருமலமுடயை விஞ்ஞானகலர்க்கும் இருமலமுடைய பிரளயாகலர்க்கும்,

இங்கு - இவ்வுலகத்தில்,

ஒள் குருவால் இன்று இந்நூல் - ஒள்ளிய ஆசாரியரால் போதிக்கப்பெறும் இச்சிவஞான போதம் என்னும் நூல்,

மும்மைமலர்க்கு - மும்மலமுடைய சகலர்க்கே உரித்தாம் எ-று (8)

O thou student of *Saiva Siddhanta*, those who have one and two mala, namely, *Vignanakalars* and *Pralayakalars*, lose their mortal nature and attain the Divine knowledge, bg respectively being taught intuitirely by the innate God, and by being purified by the eye &c, of the Divine Guru. This book is intended to be taught to *Sakalars* who have three *Mala* by their Supreme Guru. (8)

**பன்னிரண்டாஞ்சூத்திரம் முற்றிற்று.**

**இந்நூல் வந்தவழி கூறுகின்றது.**

இத்திருவெண்பா பிற்காலத் துள்ள ஆன்றோரால் செய்யப் பெற்ற தெனவறிக: -

**எந்தை சனற்குமரன் ஏத்தித் தொழ இயல்பாய்**
**நந்தி உரைத்து அருளும் ஞானநூல் - சிந்தை செய்து**
**தான் உரைத்தான் மெய்கண்டான் தாரணியோர் தாம் உணர**
**ஏது திருட்டாந்தத்தால் இன்று.**

(இ-ள்) எந்தை சனற்குமரன் ஏத்தித்தொழ - எம்முடைய தந்தையாகிய சனற்குமார பகவான் துதி செய்து வணங்க,

தன் இயல்பு ஆய் நந்தி உரைத்தருளும் ஞான நூல் - முறையாக ஸ்ரீநந்திதேவ ருபதேசித்தருளிய வடநூற் சிவஞானபோதத்தை,

மெய்கண்டான் சிந்தைசெய்து தான் உரைத்தான் - ஸ்ரீமெய்கண்டதேவர் தமது திருவுள்ளத்தில் அடைத்துத் தமிழில் அருளிச்செய்தார்,

தாரணியோர் தாம் உணர - பூமியின் கண்ணே உள்ள இந்நூல் கோடற்குரிய அதிகாரிகளாவார் உணர்ந்து கோடற்பொருட்டு,

ஏது திருட்டாந்தத்தால் இன்று - எது திருட்டாந்தங்களால் இக்காலத்து எ-று

The Saint *Meikanida Deva* has translated together with reasons and illustrations for the benefit of mankind, the great Sivagnana Botham which was graciously given out by *Nandi* at the earnest eutreaties of my master *Sanat Kumara*.

## சிவஞான போத மூலமும் உரையும்
**முற்றுப்பெற்றன.**

**திருச்சிற்றம்பலம்.**

உ

# சந்தான குரவர் வரலாறு.

செந்தமிழுலகமுய்ப்பத் திருவவதாரஞ் செய்தருளிய சைவசமய குரவருள் ஆளுடையவரசுகள், ஆளுடைய நம்பிகள் திருவவதாரஞ் செய்தருளிய நடுநாட்டின் கண் திருப்பெண்ணாகடத்திலே வேளாளர் குலத்திலே அச்சு தகளப்பாள்ரென்பா ரொருவரிருந்தனர். அவர் எல்லாப்பேற்றினை யுடையராயினும் புத்திரப்பேறில்லாராகிப் பெரிதுங் கவலெய்தித் தங்குலகுருவாகிய சகலாகமபண்டிதரைச் சென்றணைநது ஐயா! யான் பெறாப்பே றொன்றுமிலது, 'பெருமவற்றுள் யாமறிவதில்லை யறிவறிந்த - மக்கட் பேறல்லபிற' என்ற படியான் மக்கட்பேறில்லே னாயினேன், அறத்தாற்றினில் வாழ்க்கையாற்றுவார் இறுக்கற்பாலவாய கடன் மூன்றனுள் தென்புலத்தார் கடன் சிறந்த தாமன்றே! என்செய்வல்! எனக்கரைந்தவரடிக்கீழ் நெடும்பனைபோல் வீழ்ந்து பணிந்தனர். அவர் பெரிதுமாய்த்து நாஞ்செயத்தக்க தியாதென் றொருவாறு தேர்ந்து திருநெறித் தமிழ் வேதமாகிய ஆளுடைய பிள் ளையார் திருவாய் மலர்ந்தருளிய தேவாரத் திருவருள் முறையிற் கயீறுசாத்தக் "கண்காட்டு நுதலானும்" என்னும் திருப்பதிகத்திலே “பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோடுள்ள நினை - வாயினவேவரம்பெறுவரை யுறவேண்டா வொன்றும் - வேயினதோளுமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர் - தோய்வினையாரவர் தம்மைத்தோயாவாந் தீவினையே" என்னுந் திருப்பனுவ லுதயமாக வதன் செம்பொருளை நனிபெரிதும் விளக்கினர்.

அச்சுதகளப்பாளர் அத்திரவிட வேதச்செம்பொருளைக் கேட்டாங்குக் கழிபேருவகைகொளீ இக் கற்பி னருந்ததியன்ன தன்காதலியோடு, நாற்கோட் டும்பனம்பனை வழிபடும் சுவேதவனமெனும் வடமொழிப் பெயரிய திருவெண்காடெய்தி முச்சுடர்த் தீர்த்த மெனப்படுக் திருமுக்குளத்துறையி னீராடித்தருப்பித்து நியமங்கள் பலசெய்து நிகமாகமங்களனைத்தும் பரப்பிரமப்பொருளெனத் துணிந்தகுணாதீதப் பொருளையும் அவனொடும் பிரியாமடமயிலையும் வழிபாடு செய்து வந்தனர். இவரிவ்வாறியற்றி வருஞான்று மரகதவல்லி பங்கராகிய சிவபிரான் ஒருநாள் அவர் சொப்பனத்தின் கண்ணே தோன்றி “மைந்த! நீ கவலொழி, நினக்கு இத்தமிழுலகமுய்யும் வண்ணம் ஆளுடைய பிள்ளையாரென்றி யாவருங்கருதவும் திராவிடசுருதிச் செம்பொருளைத் தன்னகத்தடங்கிய சைவசித்தாந்த சாத்திரத்தை வெளிப்படுத்தவும் சித்தாந்த தாபனஞ்செய்யவு மொருமகவைத் தருகின்றேம், அவன் ஆசிரியத் தலைமையெய்திச் சிறப்பனென்றே கூறித்” தம் முருக்கரந்தனர். பின்னர்ச் சிலநாளில் அச்சுதகளப்பாளர் என்றும் போலத் தடாககருமங்களை முடித்துக் கரையேறுகின்றவளவிலே, ஒருமைக்குழவீ அழுதவண்ணமாய்க்கிடப்ப இது பெருமான் அருளிச் செய்ததாகுமெனக் கொண்டு போந்து மகிழ்ச்சியுடன் மனை விகையிற் கொடுத்து இம்மகவு

வெண்காட்டடிகளாற் பெற்றபெறலரும் பேறா கலின் சுவேதவனப் பெருமாளென நாமகரணஞ்செய்து அங்கு நின்றும் போந்து திருப்பெண்ணாகடமடைந்தனர்.

இவர் காதலியோடுடன் பிறந்தார் இதனைக்கேள்வியுற் றாங்கடைந்து அம்மகவைத் தம்மனையகம் முன்னைஞான்று பிரமவிருடியாகிய வசிஷ்டமுனிவர் வியாக்கிரபாதமுனிவர் புத்திரராகிய உபமன்னுயுபகவானைக் கொணர்ந்து வளர்த்தது போன்று கொணர்ந்து தொட்டிலிலிட்டுத் தம்பதியாகிய திருவெண்ணெய் நல்லூரிலேயே வளர்த்து வந்தனர். இவர்க்கு மூன்றகவை நிரம்புமுன்னரே தாம் சாமுசித்தராதலின் மெய்யுணர்வு தலைக்கூடத் திருக்கயிலாய பரம்பரையில் நந்தி பெருமான்பாற் சித்தாந்த நெறியுபதேசம் பெற்ற சனற்குமாரவடிகள் மாணாக்கராகிய பரஞ்சோதிமுனிவர் தென்மலையத் தருந்தவரைக் காணுமாறு கருதிக் கயிலையை நீங்கி விண்வழிப்படர்ந்து காசி முதலிய பலதலங்களையும் தரிசித்துத் திருவெண்னெய் நல்லூரையணுகி நம்மடிகளிருந்த மனையகத்தின் வழியே போத இவர்க்குக் கமன குளிகைசெல்லுகை தவிர்ப்பக்கண்டு ஈண்டோரதிசயமிருப்ப தென் னேயோ வென்றிறங்கிப்பார்த்துழி மணலிற் சிவலிங்கமியற்றி விளையாடல் புரிந்து இறைவனையே நாடியிருந்த அருமந்தமகவைக்கண்டு அவர்க்குத் தக்கணாமூர்த்தியாகிய பெருமான் றிருக்கரத்திற் பன்னிருசூத்திரவடிவினதாகிச் செறிந்த சிவஞானபோதத்தை அற்றைஞான்று போதவூர்நாடிய புண்ணியப் பெருந்தகையாம் வாதவூரடிகட்கு வடவானிழலொரீஇத் திருப்பெருந்துறையிற் குருந்தின் நீழலிற் குருமணியருளுபதேசஞ் செய்தாங்கு அம்மெய்யுணர்ச்சி யுடையார்க்குப் பொய்கண்டகன்ற மெய்கண்டதேவனெனத் திருநாமஞ் சாத்தியரு ரூபதேசஞ்செய்து கடைக்கணித்தருளி நும்மையடைவார்க்குப் பரிபாகம்வந்தவாறே யுபதேசஞ்செய்கவென் றருளிச்சென்றனர்.

இவர் அச்சித்தாந்தோபதேசம் பெற்றவுடனே அச்சிவஞான போதத்தி னுபதேசப் பொருளைக்கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து தமக்காசங்கை யெழுந்தவிடத்துப் பொல்லாப் பிள்ளையாரருளிச் செய்த சூரணிக்கொத்தாற் றடைதீர்ந்து தென்றமிழுலகமுய்ய அதனை வார்த்திகப் பொழிப்புடன் தம்மையடைந்த அதிபக்குவர்க் குபதேசித்துக் கொண்டு வந்தனர். இவ்வாறு நிகழ்கையில் அங்குத் தம்மாணாக்கர் பாலடைந்த தங்குலகுருவாகிய சகலாகமபண்டிதர் மெய்கண்ட தேவர் தம்மையடைந்த அதிபக்குவர்க்கெல்லாம் சித்தாந்த நிலைமையை யுபதேசித்துவருவது கேட்டறிந்து அவர் தம்முழைவாராமைகண்டு தாமே சென்று காணச் செருக்குடன் சென்றனர். தேசிகேசராகிய மெய்கண்டதேவர் பதி பசு பாசமென்னுந் திரிபதார்த்தத்துள் பாசபதார்த்தமாகிய ஆணவமல முதலிய பஞ்சபாசவிலக்கணங்கூறி மேற்கொண்டவர்கட் கவ்வாணவ விலக்கணத்தை வருவாரைச் சுட்டிக்காட்டி அஃதின்ன தாமெனக் குறித்தனர். அதையுணர்ந்த சகலாகம பண்டிதர் ஒன்று முரையாடாது தேசிகர் திரு நோக்கத்தானே அதிதீவிரபக்குவமெய்தி யழலது

கண்டமெழுகெனக்குழைந்துருகி யடிபற்ற பனைபோல் வீழ்ந்து யாமுய்ய வெழுந்தருளிய தம்பிரானே! யென வாழ்த்தி நின்றனர். தேசிகேசரும் அவரையு மாட்கொண்டருளிச் சிவஞானபோதத்தின் மொழி பெயர்ப் பினையு பதேசித்தனுக்கிரகஞ் செய்தனர். இவர் இதன் பொருள் செவ்விதின் விளங்கப் பாபக்கந்தடைவிடைகளாற் பரிகரித்துச் சுபக்கமாகிய சித்தாந்தமெனப்படுஞ் சிவஞானபோதத்தினுக்கு வழி நூலாகப் 'பார்விரித்த நூலெல்லாம் பார்த்தறியச் சித்தியிலே - யோர் விருத்தப் பாதிபோதும்" என்றும், "பாதிவிருத்தத்தாலிப்பார் விருத்தமாக வுண்மைசாதித்தார்" என்றும், ' சிவனுக்கு மேற்றெய்வமில்லை சித்திக்குமேற் சாத்திரமில்லை" என்றும், வள்ளுவரன்பர் மொழிவாசகந் தொல்காப்பியமே - தெள்ளுபரி மேலழகர் செய்தவுரை - யொள்ளிய சீர்த்-தொண்டர் புராணந்தொகைச் சித்தியோராறுந் - தண்டமிழின் மேலாந்தரம்" என்றும் அபியுத்தர்களெல்லாங்கூறத் திருவாய்மலர்ந்தருளித் தேசிகேசர் சந்நிதிக்கண் அறிவிக்க அதனைக் கடைக்கணித்தருளி அவருக்கு அருணந்தியென்னும் தீக்ஷாநாமம் புனையவே அவர்மேல் தோத்திரமாகச் சாத்திரப்பொருளடங்கிய இருபாவிருபஃதென்னு மொரு நூலையும் செய்தருளினர்.

இவர் அத்தேசிகரிடத்து நீழலே போல் விளங்கிச் சித்தாந்த சைவசமய குரவராக விருப்பதனைக் கண்ணுற்ற திருவதிகைப்பதியில் வாழ்க்கையுடையராய மனவாசகங்கடந்தாரென்பார் தாமும் விரைந்தடைந்து அவர்பாலருளுபதேசம் பெற்றுச் சிவாகமத்துள்ளுறுபொருளாகிய தச காரியத்தைத் தமிழுலகமுய்ய வுண்மைவிளக்க மெனப்பெயர் நிறீ இயருளிச்செய்தனர்.

அருணந்திதேசிகர் திராவிடவேதச் செம்பொருளாகிய சிவஞானபோதத்தின் வழி நூலாகிய சிவஞான சித்தியையும் இருபா விருபதையும் தம்மைத் திருக்கடந்தையில் வைதிகசைவ மறையோர் மரபிற்றோன்றிய மறைஞானசம்பந்தரென்பார் வினையொப்பும் மலபாகமுந் தீவிரசத்தியதிவு மெய்திபடைய அவருக்குத் தாம் அருளுபதேசஞ்செய்தனர். அம்மறைஞானசம்பந்தரோ விராட்புருடனுக் கிதயத்தானமாகிய சிதம்பரத்தைச் சேர்ந்த திருக்களாஞ்சேரியிற் சிருங்காசவனத்திற் பிரமபுரீசர் சந்திக்கணெழுந்தருளியிருந்துகொண்டு "நெக்குநெக்குள்ளுருகி யுருகி நின்றுமிருந்துங் கிடந்து மெழுந்து, நக்குமழுதுந்தொழுதும் வாழ்த்தி நானாவிதத்தாற் கூத்துநவிற்றிச், செக்கர்போலுந் திருமேனி திகழநோக்கிச் சிலிர்சிலிர்த்துப் புக்குகிற்" பாராய் அத்திருப்பதியெங்கணுஞ் சஞ்சரித்து வந்தனர்.

இவ்வாறு நிகழ்கையில் ஒருநாள் ஒரந்தணரகத்துத் தெருப்புறத்தே தாம் பிச்சையேற்றுழித் தில்லைவாழந்தணருளொருவராகிய உமாபதிசிவம் சிவிகையூர்ந்து மங்கலகோட்டத்தொடு பகல்விளக்கேந்திவரப் பரிவாரத்தொடுஞ் சென்றனர். அவரைக்கண்டாங்கு ஞானதேசிகர் புன்முறுவலொடும் பகற்குருடன்

செல்கின்றனனென விளிப்ப அதனைக்கண்ணுற்ற தீக்ஷிதர்பெருமான் சிவிகையினின்றிழிந்து ஓடோடியும் வந்து கண்டுறுப்பு லேனுறப்பணிந்து நின்றவர் மிசைந்து கொண்டிருந்த அடிசின்மிச்சினுகர்ந்தனர். அன்னுழி அவர்க்கிருவினையொப்பு மலபாகமுந் தீவிரதச் சத்திநிபாதமுமெய்திய தோர்ந்து அற்றைமுதற் றம்மையிடைவிடாது நிழல்போலடைந்த அத்தில்லை வாழந்தணர்பெருமாற்கு வேத சிவாகமங்களிற்றுணிந்த சைவோபதிடதப் பயனாகிய மாவாக்கியத்தினை யருளுபதேசஞ்செய்தனர்.

அதைப்பெற்றுத் தில்லைப்பதியைச்சார்ந்த கொற்றவன் குடியில் வீற்றிருந்து பிறர் தம்மை யோரந்தணனெச் சினுகர்ந்தானென்ற சதியாட்டயர்வதனைச் செலிக்கொளாது எழுமையுந், தொடர்ந்தபாசமோசன ஞ்செய்தகுருமணியினருளைவியந்து நிட்டைகூடிப்பவுட்கராகமவிருத்தியும், தங்குருமுதல்வாருளிச்செய்த செந்தமிழ்ச்சிவஞானபோதத்திர விடசுருதிக்கு வழி நூலாகச் செய்த சிவஞானசித்தி மிக விரிந்திருப்பதுணர்ந்து அதனை யாருந்தெளிந்துணரச் சார்பு நூலாகப் பிரகாசமெனப் பெயர் நிறீ இயோர் நூலும், அறம்பொருளின்பமெனத்தொகுத்த தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனார் போன்று முப்பொருளுண்மை மும்மையுலகமுந் தேரத் திருவருட்பயனு மருளிச்செய்தனர். பின்னர்த் தசகாரியத்தை விளக்கு முண்மை நெறிவிளக்கமும் போற்றிப்ப்ஃறொடையும் வினாவெண்பாவும் பாடித் தம்மையடைந்தார்க்கி னிதருளிச்செய்தருளினர்; உமாபதி சிவம் தம் மாசிரியராகிய மறைஞானசம்பந்த சிவாசாரியர்பால் நேத்திரரூபமாயுள்ள நெஞ்சுவிடு தூதென்பது பாடிய தன்றி அருணமச்சிவாயதேசிகர் முதலாயோர்க்க ருளுபதேசஞ்செய்து சித்தாந்த நெறியினராகிய மெய்கண்ட சந்தானத்தை வளர்த்துவருவாராயினர். அஞ்ஞான்று தேவ தேவேசராகியஅம்பலவாணப்பெருமான் றிருவிழாவிற்கொடியெழா திருப்பக்கண்டு, தில்லைவாழந்தணரானவருநனிதவவருந்தக் கண்டு கொடிக்கவிபாடிக் கொடியேற்றியருளினர். சின்னாட்பின்னர் ஆனிவிழா நடக்கு ஞான்று தேர் மண்டபத்தின் மாயாவாதி, ஐக்கியவாதி, பாடாணவாதி, பேதவாதி, சிவசமவா தி, சங்கிராந்தவாதி, ஈசுரவவிகாரவாதி, நிமித்தகாரணபரிணாமவாதி, சைவவாதி என்னுஞ் சமயிகள் தத்தஞ்சமயத்தையெடுத் துரைத்துச் சங்கற்பங்கூறக்கண்ட உமாபதிசிவனார் அவர் கூற்றைக்குறித்து நிராகரித்துச் சுங்கற்பதிராகரணமென் றருளிச்செய்து பரவச் செய்தனர்; அது செய்தருளிய காலம் சாலிவாகனசகம்கஉகூடு. [நிகழும் இப் பராபவ வருடத்திற்கு ஷை சகம்=கஅஉசு]

ஞானதேசிகர்பிற்றைஞான்று திருப்பதிக்கோவை, திருப்பதிகக்கோவை இவற்றை யருளிச்செய்து சிதம்பரமான்மியத்தின் வழியாகக் கோயிற்பு ராணமென்றொரு தெய்விக நூலருளிச்செய்து அரங்கேற்றது பேடகத்திட்டிருந்த ஞான்று, ஆளுடைய நம்பிகள் திருத்தொண்டத்தொகையில் 'பூதம்யாவையினுள்ளலர்போதென-வேத மூலம் வெளிப்படுமேதினிக் - காதன் மங்கையி தயகமலமா - மாதொர் பாகனாராரூர்மலர்ந்ததால்" என்றுரைக்கப்படும்

திருவாரூர் வீதிவிடங்கப் ருமானாலடியெடுத்துக்கொதிக்கத் திருவாய்மலர்ந்தருளப்பட்ட தில்லை வாழந்தணர் தஞ்சொப்பனத் துட் கனகசபேசராகிய ஆனந்தத்தாண்டவராச செழுந்தருளி "யாங்கொற்றவன்குடி உமாபதிபேடகத்துளேம்" எனத் திருவாய்மலர்ந்தருள அதைக்கேட்டாங்கெழுந்து இதொப்பதோர் இறும்பூதெஞ் ஞான்றும் பெற்றிலோ மென்றவரை பெய்தி வருவித் தாயிரக்கான்மண்டபத்து அதனை யாங்கேற்றுவித்தனர்.

உண்மைநாயன்மார் தெய்வமான்மியத்தைமிகவரிய செந்தமிழ் யாப்பானருளிச்செய்த அருண்மொழித்தேவர் புராணத்தையும், திரவிடசுருதியாகிய திருமுறைகள் வெளிப்பட்டமை யுணர்த்தும் - திருமுறைகண்ட புராணத்தையு மருளிச்செய்து வீற்றிருந்த ஞான்றுபெற்றான் சம்பானென்னும் புறத்தொண்டரொருவர்க்கு ஆளுடையபெருமான் 'அடியார்க்கெளியன் சிற்றம்பலவன்கொற்றங் - குடியார்க்கெழுதிய கைச்சீட்டுப் படியின்மிசைப் பெற்றான் சாம்பானுக்குப்பேதமறத் தீக்கை செய்து - முத்திகொடுக்கமுறை' என்னுந் திருமுகமொன்றருளிவிடுப்ப இன்னே யவர்பரிபாகநோக்கிச் சிவசாரூப்பி முதவி நின்றனர்.--, அவன் மனைவி யுந் தன்கணவன் சிவசாரூப்பியமெய்தினமை நோக்காது தேசிகர் திருநோக் காற்பெறலரும் பேறெய்தியமை அரசன் றிருமுன்னரறிவிப்ப அரசன் ஞானதேசிகரையடைந்தவர் சந்நிதிமுன்னர் அவன் பேற்றையுணர்த்தினர். அரசர்பெருமானு மவன்மனைவியும் பிறரு நிதரிசனமாகக் காணப் பரிபாகமெய்தியிருந்த அசேதனப்பொருளாகிய முள்ளிச்செடிக்கு மவ்வாறே ஞானநோக்கினான் முத்திகொடுத்தருள யாவரும் எல்லையில்லதோ ரற்புதமெய்திச் சிறந்தனர். பிற்றை ஞான்றொரு நாள் கல்விகேள்விகளிற் சிறந்தார் பலர் 'கல்விகரையிலகற்பவர் நாட்சில - மெல்ல நினைக்கிற்பிணிப்ல' எனப்படுதலான் யாதினைக்கற்றுச் சில்வாழ்நர்ட் பல்பிணிச் சிற்றறிவே முய்வேமென்று விண்ணப்பிக்க, அவர் "வள்ளுவரன்பர் மொழிவாசகந்தொல் காப்பியமே தெள்ளுபரிமேலழகாசெய்தவுரை- யொள்ளியசீர்த் - தொண்டர்புராண தொகைச் சித்தியோராறுந்- தண்டமிழின் மேலாந்தரம்" என்றருளிச்செய் தவராசங்கை தவிர்த்தருளினார். இன்னனபல வற்புதங்களனைத்தும் விளைத்துச் சிற்சபேசன் றிருவடி நீழலிற் புக்கொடுங்கினர். இச்சந்தான குரவர் முறையே சிவபரிபூரண மடைந்த தலங்கள் திருவெண்ணெய்நல்லூரும், திருத்துறையூரும், திருக்களாஞ்சேரியும், கொற்றவன்குடியுமேயாம். அவரடைந்த நாட்களைச் 'சித்திரை யத்த முமாபதியாவணித்திங்கடனி - லுத்திரஞ்சீர்கொண்மறைஞான சம்பந்த போது கன்னிச் - சுத்த மெய்ப்பூரமருணந்தியைப் பசிசோதிதனில் - வித்தகமெய்கண்டதேவர் சிவகதிமேவினரே' என்றபியுத்தரு மருளிச் செய்திருக்கின்றனர்.

**திருச்சிற்றம்பலம்.**